# முகவுரை

பரமசிவன் பெருங்கருணையினுல் கேவலாதீதமே உண்மையாகிய ஆத்மாக்களுக்கு அறிவு விளங்கும் பொருட்டு விந்து மூன்று மாயைகளையும் பிரேரித்து, அவைகளின் காரியமாய்த் திருவருட்சக்திகளுடைய அதிட்டிதமாய்த் தத்துவாத்துவிதமாகிய பூத பௌதிக பேதங்களாகிய நித்தியாசமமாகிய கருவிகளைச் சுதந்தரமாகிய தனு கரணுதிகளாகக் கொடுத்து, கேவலா சகலப்படுத்திப் பரிபாகப்படுத்துகிறபோது, அநாதியான பெருங்கருணையினுலே திருவுளம் பற்றுநின்ற [1]உலகியல் வேதநூலொழுக்கமென்பதும், [2]வேதநூல் சைவநூல் என்ற இரண்டே நூல்களென்றும், வேதம் பொதுநூல் உலகர்க்கென்றும் அருளியவற்றுள், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் சதுர்வித உண்மையான பசு புண்ணிய மிகுதியில் தன்னையறியாமல் ஒரு சிவ புண்ணியம் வந்த முதிர்ச்சியால் ஆகமம் சிறப்பு நூல், சத்தினிபாதர்க்கென்றும் அருளியதால், ஆகமங்கள் இருபத்தெட்டும் முப்பொருள்களாகிய பதி பசு பாசங்களையே சொல்லும். பரமசிவனது நிட்கள, சகள, சகளாகளமாகிய திவ்ய அருளுருவங்களெல்லாம் தனித்தனி முப்பொருளாகவே இருக்கும். பஞ்சகிருத்தியங்களும் பஞ்சாட்சரங்களும் அப்படியே இருக்கும்.

---

1. உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்.
(பெரியபுராணம் திருஞான. 820)

2. வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதிம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொது ; சைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினு னுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னெழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்.
(சிவாஞானசித். சுபக். 8-ம் சூ. 1 அதி. 15.)

ஆகையால்,

ஊனாகி யுயிராகி யவற்று ணின்ற
வுணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்;
யானேது மறியாமே யென்னுள் வந்து
நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்;
தேனாறுங் கொன்றையனே! நின்றி யூரா!
திருவானைக் காவிலுறை சிவனே! ஞானம்
ஆனாய்நின் பொற்பாத மடையப் பெற்றே
னல்லல்கொண் டடியே னென்செய் கேனே!

(திருநாவுக். திருத்தாண்ட. திருவானைக்கா. 2)

என்றும்,

உலகமே யுருவ மாக யோனிக ளுறுப்ப தாக
இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கார ண மாக
அலகிலா வுயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி யைந்து
நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப னாதன்.

(சிவஞானசித். சுபக். ஐந்தாம் சூத். 7)

என்றும்,

அருள்கையால் அம்முப்பொருளும் விளங்கித் தோன்றும்போது, 'ஏகன், அநேகன், இருள், கருமம், மாயை இரண்டு ஆக இவை யாறாதியில்' (திருவருட்பயன் 6. 2) என்றும்,

தேசமலி பொதுஞானச் செவ்வொளியுந் திகழ்பதியாம்
ஈசனது நடத்தொழிலு மிலங்குபல வுயிர்த்தொகையும்
பாசமுமங் கதுகழியப் பண்ணுதிரு வெண்ணீறும்
ஆதிதிரு வஞ்செழுத்து மனாதியிவை யாறாக என்றருளும்.

(கோயிற் புராணம். பாயி. 20)

என்றும் கூறியபடி, இவ்வாறும் அநாதி நித்யப் பொருள்களாகவே இருக்கும்.

இவைகளின் விரிவு ஆகம குரு சம்பிரதாய வழியால் உணரப்பட்டுச் சரியை கிரியா யோகங்களைச் செய்து வருகிற போது, குருபக்தியும் சிவபூசையும் அடியவர்கள் சற்சங்கமும் பலிக்கும்போது, மூல மல பரிபாக சத்தினிபாத இருவினை

யொப்பு வந்து, சிவஞானத்தால் ஞானகுரு உபதேச உண்மை அநுபவம் பெற்று, சிவாநந்த நிஷ்டைகூடி, அன்பே இன்பாங்காலம், அகண்ட பரிபூரணமாகவும், அட்டமூர்த்தங்களாகவும், தாவர சங்கம குருலிங்க சங்க மங்களாகவும் தரிசனமாகிப் பலன் கொடுக்கும்போது திரிவித பசுகரணங்களெல்லாம் சிவகரணமாய் நிகழும்.

அவ்வநுபவமாவன :—

பிரகிருதி மாயாகாரியமாய், சத்தாகிய குணாந்தமாய், அசத்தாகிய காயமானது ஞானசாரியரது நோக்காதி ஏழுவித அட்டவித தீக்ஷா சமுககாரத்தால், [நேர்ப்பார்வையால்] சத்தாகிய காரண கர்த்தாக்கட்குக் கருவியாய் உண்மைச் சரியைப் பணியால் எவ்விடமும் சிவலோகமாகக் காணும் அநுபவத்தால், பிறவித் துன்பத்துக்கு ஏதுவாகிய மாயா போகத்தில் இச்சை வராது; வராதொழியவே **மாயாமல நட்டம்.**

சுத்தமாயா காரியமாய், கலாதி மாயாந்தமான போக காண்டமாகிய சதசத்தாகிய மனமானது ஞானசாரியாரது ஞானவுபதேச உண்மையால் சித்தாய், திருவருட்குக் கருவியாய், உண்மைக் கிரியை யோகப்பண்பினால், எவ்விடமும் சிவசந்நிதானமும் சிவரூபமுமாய்க் காணும் அநுபவத்தால் 'ஊழ்வினை உள்ளது; கர்த்தா முடிப்பிக்கிறார்' என்று அறியாததற்கு ஏதுவாகிய முன்னிலை வராது; வராதொழியவே **கன்மமல நட்டம்.**

விந்துவின் காரியமாய், சுத்தவித்தையாதி சிவானந்தமான பிரேர காண்டமாய், சத்தாகிய வாக்கானது ஞானசாரியரது ஞானவுபதேசத்தால் சிவாநந்த வநுபோக நிட்டையால் ஆனந்தத் திருவருளாய் நின்று, உண்மை மெய்ஞ் ஞானத்தால் அகண்ட பரிபூரண சச்சிதாநந்த அத்துவித அநந்ய பரவெளியில் தான் அழியப் பெற்ற சுகாதீதமாய் வாழும் அநுபவத்தால், ஏகீபாவ நின்மல சாக்கிராதீதம் பிறந்து, சங்கல்பம் கெட சுத்தமாயை நட்டமாகி அறியாமைக் கேதுவாகிய மறதி நீங்கும்; நீங்கவே **ஆணவமல நட்டம்.**

இப்படிப் பசுவுக்கென்றமைந்த மன வாக்குக் காய மான திரிவித கரணங்களும் சிவனுக்கு மன வாக்குக் காய மான சிவலிங்கப் பெருமான், மெய்ஞ்ஞான குரு, உண்மை அடியார்கள் என்கின்ற மூன்றினுள் நடமாடக் கோவிலாகிய சங்கமம் உண்மைக் குருவே வாயாக, உயிரே சிவலிங்கமாக, அன்பே [1]உபகரணமாக, வழுத்துதலே நைவேதனம் பூசை யாக, சிந்தனை சிவத்துக்கும், வந்தனை சங்கமத்துக்கும், வாய்மை குருவுக்குமாகச் சர்வ சுதந்தரம் திருவருளே எனக் கண்டு, பஞ்சமலத்தின் காரிய சக்திகள் அநந்தமும் நீங்கி, அழியாத மும்மலம் சூரிய சந்நிதான இருள்போல் அடங்கி, சிவமன்றி வேறில்லையாய்ச் சிவமாய் வாழும்போது, அக் காலத்து வெளிப்பட்டு விளங்கும் சின்னமாக ஆநந்தபாஷ்ப மும் புளகாங்கிதமும் விம்மலும் தழுதழுறலும் பரவசமும் மோகமும் ஆடலும் பாடலுமாக விருக்கும்.

அப்பாடல்களாவன :—

ஆத்ம போதாதீத உள்ளத்திற் றோன்றிய ஆனந்த மகிழ்ச்சி யெல்லாம் வெளிப்பட்டு விளங்கும் விளக்கம். அப்படிப்பட்ட நாதாக்கள் திருவாக்கின் பொருள் அப்படிப் பேரின்பம் பெற்றவர்கட்கே தெரியும். அந்தத் திருவாக்கு பதிவாக்கியம்; அதைப் பசுவாக்கியம் என்று நினைத்தா லும் சனன மரணத்துக்கே வித்தாம். இவ்வுலகத்தில் பதி வாக்கியம் ஏதென்னில் அநாதி முத்த அறிவுடையான் திருவுளம் பற்றிய ஆகம வேதங்களன்றி, முன்சொன்ன பரிபாக சின்னம் விளங்கும்படி போதிக்கிற ஞானகுரு மூர்த்தங்களாக வுள்ள சந்தான ஆச்சாரியர், சமயாச்சாரியர் இருவர்களில் சந்தானவாச்சாரிமார்கள் திருவாக்கு சகள சாத்திரமாக விருக்கும்; சமயாச்சாரிமார்கள் திருவாக்குக்கள் தோத்திரமாக விருக்கும்.

அவையாவன :—

தேவாரம், திருவாசகம், திருச்சிற்றம்பலக்கோவை யார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம்,

1. (பி-ம்) உபாதானமாக.

கோயிற் புராணம் ஆகியவை. இவை சைவத்துக்கும், சிவபூசைக்கும், அன்புநெறிக்கும், அடிமைத் திறத்துக்கும், சிவாநுபூதி நிட்டைக்கும், உண்மைச் சரியை கிரியை யோக ஞான நிறைவுக்கும், சிவாலய நித்திய நைமித்தியத்துக்கும், சிவதரிசனத்துக்கும், அடியவர் பூசைக்கும் நியமமந்திரங்களாக விருக்கும்.

தோத்திரங்கள் துறைகளில் அமைந்தேயிருக்கும். தோத்திரங்களில் துறை சொல்ல வேண்டியதென்னெனில், தோத்திரமாவது அன்பினுல் நிகழ்ந்த மொழி. துறையை அன்பென்றும் சொல்வதெப்படி யென்னில், அன்பாவது தொடர்ச்சி யுடையோர்களிடத்தில் வைத்த பற்று. பசுவானது கன்றினிடத்து வைத்த இரக்கமென்றும் சொல்லலாம். அந்த இரக்கத்தைத் தொடர்ச்சியால் உள்ள மட்டும் வருணித்துப் பாராட்டக் கூடாது. நாயகன் நாயகி இவர்களின் அன்புத் தொடர்ச்சியை நானூறு விதமாகப் பாராட்டி வருணிக்கக் கூடுமாதலால் நாயன்மார்கள் திருவாக்குக்கள் அப்படியே யிருக்கின்றன.

துறையாவது அன்பின் முதிர்ச்சி என்றே கொள்வது. இஃதன்றி, உலகிற் காணுததற்குவமை கண்டதைக் கொண்டு அறிவிக்கிறதன்றி வேறென்றால் அறிவித்தாற் புலப்படாது. மூர்த்திக்கு உவமை பெத்தம்; பேரின்பத்துக்கு உவமை சிற்றின்பம். அன்றியும் பரமசிவன் சுத்தாத்துமாக்களுக்குத் தமிழாலன்றி வேறொரு பாடையாலும் நிரதிசயவின்பம் பிறவாதென்று, திருவருட்பூமியாகிய தட்சிண திக்கில் துவாதசாந்த சமட்டி வித்தியாபுரமான திருவாலவாய் மதுரைத் திருப்பதியில் தெய்வப் புலமையாகிய பொய்யடிமையில்லாத புலவரான திருச்சங்கத்துள் இறையனுயனுரென்று தாமும் ஒரு புலவராக எழுந்தருளி இருந்து, நற்கீரருக்கு அநுக்கிரகம் செய்யும்போது [1]இறையனுர் பொருள் என்றே பஞ்சவிலக்கணத்தில் பொருளதிகாரக் கருத்து முழுவதும் இந்தத் துறையே விளங்கும்படி சூத்திரமாகத் திருவுளம் பற்றினுர்.

1. இறையனுர் அகப்பொருள்.



அத்துறைகளில் நாயன்மார்கள் அருள்செய்த தோத்திரங்களில் சில துறைகள் வரும். வாதவூரடிகள் அருளிய [1]கோவைத்திருவாசகத்தில் துறைகள் எல்லாம் அடங்கும். அத்துறைகளுக்கு இலக்கணம் விரிக்கிற் பெருகும். அவ்விலக்கணமும் துறைகளும் உவமித்தற்கருவிகளே ; (உள்ளத்தில் நிகழும் அனுபோகத்துக்குப் பக்குவமும் பரிபாகமும் உண்மை உபதேசத்தால் சிவாநந்த அநுபவம் நிகழும்) அதுவன்றி, ஆதியந்தமான கதைபோலல்ல. உலகத்துறை போன்றிருந்தாலும் சிற்றின்பப் பொருளல்ல. பேரின்பப் பொருள் ; ஐந்து நிலமும் நாயகியும் நாயகனும் தோழியும் தோழனும் மற்றுமுள கருவிகளும் துறையும் கொத்தும் அமைந்திருப்பதைச் சுத்தாவத்தை உபதேச சம்பிரதாய மெனக் கொள்க.

## அவையடக்கம்

இனி, திருமெய்ஞ்ஞானத் திருநெறித்தமிழாகிய தேவாரத்துக்கு குறுமுனி அடிகள் சிவாலய மகாமுனிக்கு 'குருவுருவு' (அகத். தேவாரத்திரட் 1) முதலாக, வகைப் பொருளாக, அகத்தியத் திரட்டென்று இருபத்தைந்து பதிகங்கள் திருவுளம் பற்றினார்கள். இத்திருவாசக அநுபூதிக்கு [2]முதல் அகவல் இறுதியில் 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப், பல்லோரு மேத்தப் பணிந்து' என்ற வாக்கியப் பயனை அநுபூதி விளங்கற் சூத்திரமும் [3]ஐம்பத்தொன்றாகவே பதிகக் கருத்து விளங்க, ஆணிப் பொன்னால் மிளிர்மணி மதிட்டில்லை, மாணிக்கவாசகன் மாசறு சொற்படி, அழகிய திருச்சிற்றம்பலமுடையான் எழுதிய, திருவாசகத்தநுபூதியை, மிகத்தரு ஞான விநோதன் குகனடி, யகத்துணர் ஞான வகத்தியன் றொகுத்தனன், செகத்தறி வுடையோர் தெளிதரற் பொருட்டே" எனவருளிய மகாவாக்கியப் பயனை,

---

1. திருச்சிற்றம்பலக்கோவையார்.
2. முதல் அகவல் என்பது சிவபுராணம்.
3. திருவாசகப் பதிகங்கள் ஐம்பத்தொன்று.

[4] ஊதுகாத லொளிவளர் புற்றிடங் கொண்ட
பூதமி யாவையி னுள்ளலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்
காதன் மங்கையி தயக்க மலமான

(பெரிய புராணம். ஞான. 516)

திருவருள் மூலாதாரத் திருப்பூங் கோவிலின் நிட்களமே சகளமான தேவாதிதேவ சீவரத்தின சிம்மாசன வீரகண்டைய வீதிவிடங்க, சோமாக்கந்த ஸ்ரீவித்யாபீட வசைபையரச ஆடரவக்கிங்கிணி பூண்ட ஆழித்தேர் வித்தகரான வசந்த உல்லாச நவந்தரு பேதங் கடந்த தியாகப்பொருளாகிச் செங்கழுநீர் மாலை திருத்தோடு தரித்து அவை அலையத் திருவடி நோவத் திருமால் முதலான தேவர்கள் இறைஞ்ச, திருவணுக்க வன்றொண்டரான சுந்தர சுவாமி அடிமைத் தோழமையடியார் அநுபூதி பெறத் திருப்பாவையம்மன் திருமாளிகைக்கு இருந்தபடி நின்றுடும் திருவடி திருவீதியில் நாற்றமுற இருகால் தூதுசெல்லும் அம்மாளிகை இடங்கொண்ட கலிசெல்லாத பராசத்தித் தலமான செல்வத் திருவாரூரின்கண் பொற்பாதகமல ஆச்சாரிய பரம்பரையில் திருவுருக் கொண்ட சிவகுருநாதனென குருசுவாமியடிகள் தாழ்வில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்காநின்ற திருஞானசம்பந்தசுவாமி திருவவதாரம் செய்யாநின்ற மூவுருவும் ஒருருவாய் விளங்கிய பிரளய விடங்கப் பெருமாள் எழுந்தருளிய பன்னிரண்டு திருநாமத் திருத்தலமான வேணுபுரத்தில் திருவருள் நலமொன்றுமிலாத அடியேன் பேரில் கருணைகூர்ந்து திருவாசகத்துக்குத் திருவருள் மூலவநுபூதியும், அகத்தியச் சூத்திரக் கருத்தும், அவைக்குப் பொழிப்புரை யநுபூதியும் உபதேசித்தபடி அடியேன் சிவனடியாரான நாயன்மார்கள் அநுக்கிரகப்படி பதவநுபூதியும் நுட்பவநுபூதியும் அவைக்கு எடுத்துக்காட்டலான சுருதியநுபூதியும் சொல்லுகின்றனன்.

---

4. (பி - ம்) ஊறு காதலிலொளி வளர்புற்றிடங் கொண்ட
ஆறுலாவிய சடைமுடி யையரைப் பணிந்து
நீறுவாழ்வென நிகழ்திருத் தொண்டர்க ளோடும்
ஈறிலாத்திரு ஞான சம்பந்தரங் கிருந்தார்.

நாதாக்களே! அடியேன் மகத்தான அருள்வாக்கியத்துக்கு வெள்ளறிவினாற் சொல்லும் புன்சொல்லானது சில விடயமாயிருப்பதாலும், 'மணற் சோற்றில் கல் ஆராய்வதெப்படி?' என்று திருவுளங்கொள்ளாது நஞ்சை அமுதாகக் கொண்ட பரமசிவன் அடியார்கள் ஆனதனாலே அடியேன் சொல்வதான உரையநுபூதியையும் கருணை கூர்வதே கடன்.

இவைக்கு அநுபூதி வேதத்தில்,

கோழை மிட றுக்கவி கொளுமில வாக விசை
[கூடும் வகையால்
ஏழை யடி யா ரவர்கள் யாவை சொன
[சொன்மகிழு மீசனிடமாம்

(திருஞான பதிகம் 329. திருவைகாவூர் 1).

என்றருளியது காண்க.

சாத்திரத்தில்,

தொன்மையவா மெனுமெவையும் நன்றாகா வின்று
தோன்றியநூ லெனுமெவையும் தீதாகா துணிந்த
நன்மையினர் நலங்கொள் மணி பொதியுமதன் களங்க
நவையாகா தெனவுண்மை நயந்திடுவர் நடுவாந்
தன்மையினர் பழமைவழக் காராய்ந்து தரிப்பர்
தவறுநலம் பொருளின்கட் சார்வா ராய்ந்து
இன்மையினாற் பலர்புகழி லேத்துவரே திலருற்
றிகழ்ந்தனரே லிகழ்ந்திடுவர் தமக்கெனவொன்
[றிலரே.

(சிவப்பிர. பாயிரம். அவையடக்கம்)

என்றமை காண்க.

அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.

(குறள். பொருட். 503):

என்றமை காண்க.

எல்லார்க்கு நன்ரு யிருப்பதில்லை ; யாதொன் று
மெல்லார்க்கும் பொல்லாத தில்லை.

(ஒழிவி. 17)

என் றமையும் காண்க.

தாயென் றிரங்குந் தலைவவோ வென் றுந், தமியனேன்
[துணைவவோவென் றும்,
நாயினேனிருந்து புலம்பினுலிரங்கி நலம்புரி பரமர்தன்
[கோயில்.

(கருவூர்த். கோயி. 3)

என்பதையும் 'மன் றுள் நடம்புரிவிக்கு மலர்ப்பதந் தெரி விக்கும்' (கோயில். பாயி. 28) என்பதையும், 'சிந்தையிங் கிதுவாயென்னுசை சொல்வழி கேளாது' என்பதையும் கொண்டு இவ்வுரைத் துதி தொடங்கினேன் எனக் காண்க.

இவ்வுரைக்கு எடுத்துக்காட்டலான பிரகரண வாக்கியச் சுருதியில் ஒவ்வொரு வாக்கியங்கள் அவைக்கு அநுபூதி காட்டுவதன் றியும், இந்தத் திருவாசக முதல் வாக்கியப் பதநுட்ப வநுபூதிக்குத் திட்டாந்திரத் தாட்டாந்திரப் பொரு ளாகத் "தோடு", "கூற்ரு", "பித்தா", "புகை", "மெய்த் தாறு", "ஒருருக்காண்டலே", "ஞானத்தால்", "படைக்கலம்", "தில்லைவாழ்", "திருவளருலகெலாம்", "பொன்வண்ணம்" இவ் வருளிப் பாடல்களுக்குக் கருத்து, பதம், பொழிப்பு, அகலம், எச்சம், சம்பிரதாய உரை எமது குரு உபதேசப்படி அடி யேன் சொல்வதை மற்ருென் று விரித்தலெனக் கொள் ளாது அநுபூதியெனக் கொண்டு சமய சந்தான ஆச்சாரிமார்கள் திருவாக்குக்கள் முழுதும் இந்தத் திருவாசகத் திருவருட்பயன் அநுபூதி யெனக் காண்க.

---

# சிறப்புப்பாயிரம்

## I

திருப்பெருந்துறைவாச இராமசுவாமி பாரதி சொன்னது.

குறுமுனி யெழுகடலை யும்பருகும்
கொள்கைபோற் றில்லையி னடஞ்செய்
துறுபவன மகிழ்ந் திருவுளச்
சீட்டங்குதவுமுத் தரவினுற் சிறந்த
மறுவிலா விடையான் றிருவடிப்
பெருமை வாதவூரையன்முன் வகுத்த
சறுவநற் கருத்துந் தாண்டவராயன்
றகுமுரை செய்தனன் றமிழால்.

இதன் கருத்து :—

தகரவித்யாபுரத் திருத்தில்லை வாழும் அடியார்கள் இவ்வுரை யனுபூதி திருவுளங் கொள்வதோ வென வுன்னித் திருவுள ஓலை எழுதிப் பொன்னம்பலவாணர் சந்நிதியான முக்தி பஞ்சாட்சரப்படியில் வைப்ப, "வைப்புமாடென்று மாணிக்கத் தொளியென்று மனத்திடை...." (திருவா. அதிசயப். 1) என்றுரையும் அடிகட்கிரங்கித் திருவுளங் கொண்டு அருளோலை காட்டி ஆண்டருள் செய்ததெனக் காண்க.

## II

தென்பாண்டி நாட்டிலுளதாகிய மன்னூர் கோட்டைச் சுந்தரலிங்க மூர்த்தி சொல்லியவை.

வாசகமா முறைபாவாற் சிவன்றிருமுன் றோதுதற்காய்
[வழுத்தும்ஞான
நேசமிகு வாதவூ ரடிகளிரு வேறுமினைந் தன்பைமேவ
லாசைபுரிந் தியற்காழித் தாண்டவராயக் குரவனுக வந்தே
தேசினுய ராரண நூல்விதிகொ டுரைசெய் துலகைத்
[தேற்றினனே. (1)

இதன் கருத்து :—

இப்பா வெழுவாய், "இருவேறு நினைந்து" என்றமையால்;

அவையாவன :—

திருத்தில்லையிலே ஞானநேசமிகு வாதவூரடிகள் குஞ்சிதபாத நிட்டானுபூதி பெற்றிருக்கும்போது, திருமதுரையில் வாழும் சோமசுந்தர சுவாமியம்மையுடன் எழுந்தருளி, "திருவாதவூரடிகளே! தேவரீர்! ஆத்ம போதாதீத ஆனந்த அனுபூதி யாது?" என, "வாசகம் ஆம்" என, "அவை நாம் வரைவோம்; அருள்" என, முறையே சிவன் திருமுன் ஓதுதற்காய வழுத்த, முன்னமே சிவசந்நிதி திருமுன்பாக வாசகமெனச் சொல்லித் திருக்கையாலெழுதும்போது திருப்பாவாய்ச் சொன்னேமே; அவ்வுரை முற்றுப் பெறத் தாமே எழுந்தருளி அன்பே இன்பாக உரைத்ததெனக் காண்க.

தவவாதவூரர்செய்த கோவைத்திரு வாசகச்
[செந்தமிழைத் தானே
நவவிதத் தினுரைபகர் வானு மெழுதி மாணுக்கர்
[நாமஞ் சாற்றற்
புவனமிசை பெரிதலவென் றம்பலத்தி னறையி
னடம்புரிந்தோன் காழிச்
சிவவுருத் தாண்டவராய னென்னவந் தேயிவ்வுரை
[யைத்தெரி வித்தானே. (2)

இதன் கருத்து :—

திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசக சுவாமியார் அருளிச் செய்த கோவைத் திருவாசகத்துக்குச் சொற்படி திருச்சிற்றம்பலவாணரென ஒப்பம் வைப்பது நீதியன்றென்று தமது திருநாமமே பெறத் தில்லைத் தாண்டவராசரே யெழுதிய மூலப்பாவுக்குக் காழித் தாண்டவராசனே உரையெழுதியதே எனவருளிய கருணையெனக் காண்க.

ஆகம புராணசம் பிரதாய மெய்ந்நூ லருமறைக
[ளனைத்தும் ஞானத்
தேகதிரு வாசகமா முறையின் னூற்பொருள்
[சிவனென் றெடுத்துக் காட்டும்
பூகம்வளர் வாதவூ ரடிக ளிரண்டா முகஞ்செய்
[புனிதப் பாவை
யோகைபெறு கலியினிற் றூண்டவ ராய னென்ன
[வும்வந் துரைசெய் தானே. (3)

இதன் கருத்து :—

"ஞானத் திருவாசகத்துக்கு உரை யாது?" எனத் திருவாதவூரடிகளைத் தில்லையில் வாழும் அடியார்கள் வினவ, மாணிக்கவாசக சுவாமியார் குஞ்சிதபாத பரசாயுச்சிய முத்தி பெறுவதான பூரணத் தொன்றினென்றூத தோர் குறிக் கரும நிலையானதால், அப்போது உள்ளபடி கண்ட 'குஞ் சிதபாதமே உரை' என அருளிய இரண்டாமுகக் காலம்; அவை இக்கலியுகம் சகூசரு, சாலிவாகனம் களருகூ, இவை யிற் செல்லும் செய வருடம் மகர மாசம் பூச நாளில் தில்லை அம்பலவாணர் சந்நிதியில் துவக்கி, அதற்கடுத்த மன்மத வருடம் மார்கழி மாதம் 10உ பன்னிரு திருநாமம் பெற்ற சீகாழியில் எழுதி முற்றுப்பெற்றது. அவை அவைக்கடுத்த இருபத்தாரும் திகதியில் தில்லைச் சிற்றம்பலவாணர் சந்நிதி யில் திருவுளவோலை அருளியபடி இவ்வுரை அடியார்கள் திருச்சபையிலே வாசித்து அனுபூதியானதெனக் காண்க.

திருச்சிற்றம்பலம்.

---

உ

# திருவாசகக் கருத்து அனுபூதி

திருவாசகம் என்பதின் திருவருள் விநியோகம் அருளிச் செய்யப் புகுகின்றது. திரு என்பது அருள்; வாசகமாவது அதன் வாக்கு. அருள்வாக்காவன வேதாகமங்கள். சிவ வாக்கியமாக விருந்தாலும் இவ்வாக்கினது பெருமை அவை களின் பயனாகவே இருக்கும். பயனாவது பதமுத்தியிற் சொல்லும் பரிபாக அன்பினது முடிவாகிய ஆனந்த மகிழ்ச்சியாகவே இருக்கும். திருவாசகத்தில் ஆனந்த மகிழ்ச்சி எப்படியிருக்குமென்னிற் பரமுத்தியினின்று சிவ கரணமாகி உணர்த்தி யுணரும் வாக்குக்களாக விருக்கும். அவ்வாக்குக்கள் உலகத்திலுள்ள பெத்தாத்மாக்கள் வறு மைப்பட்ட காலத்தில் இரந்து கூறும் வாக்குக்கள் போல விருக்கும். அப்படியிருப்பானேனென்னில், அருளாய் நின்று அடிமைத் திறம் பெற்றவர்கள் திருவாக்குக்கள் பெறுதவர்களின் மருள் வாக்குப் போல விருக்கும். பேரா னந்தத்தில் இரத்தற்கு உதாரணம் சொல்லில், வறுமையன் சொல் போல விருக்கும். மாயாகாரியமாகிய விடயத்தினால் மயங்குகிறதே சிவமயக்கத்துக்குத் திட்டாந்திரம் சொல்ல வேண்டும். அன்றியும், மனசைப் பார்த்துச் சொல்லுகிறது போல விருந்தாலும் உலகத்திலுள்ள ஆன்மாக்களுக்கு அனுக்கிரகமாகத் திருவுளம் பற்றுகையால் அருள்வாக்கிய மான திருவாசகமென்று பெயர் கொண்டது.

அத்திருவாசகத்தில் சுத்தான்மாக்கள் அனுபவ முறை களெல்லாம் விளங்கச் சொல்லுமிடத்துச் சில துறைகளாக வும், பிரிவு வருத்தங்களாகவும், பெற்ற மகிழ்ச்சிகளாகவும், பெற வேண்டிய வரங்களாகவும், இன்பம் எக்காலத்திலும் உள்ளத்தில் விளங்கும் பொருட்டாகவும் இருக்கும்; இன் னும் அவை பரமசிவனது பெருங்கருணையும், ஆன்மாக் களின் சுதந்தர ஈனமும், அடிமை யியல்பும், பிரியாத நிட்டையும், அனுபவம் வந்த வழி தெரியாமையும், சும்மா

இருப்பதுவும், முப்பொருளும் நிற்கும் நிலைமையும், பசு பாசங்கள் நீங்கும் தன்மையும், பன்னிரண்டு சிவஞான போதக்கருத்தும், சிவகரணமே பரமுத்தி என்பதும், உண்மைச் சரியை, கிரியை, யோக ஞானப் பணியும், பசுகரணமே சிவகரணம் என்பதும், வேதாந்த அத்துவித நிலையும், சுத்த சைவ சித்தாந்த சிவாகமாந்தச் சிறப்பும், புராணாந்தப் பாராட்டும், உருகியுடைதலே உண்மை யென்ப தும், அன்பின் முதிர்ச்சியும், பார்முழுதும் பரப்பிரம சந்நிதி யாமென்பதும் அருளியமை காண்க.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவாசகம்

## 1. சிவபுராணம்

(திருப்பெருந்துறையில் அருளியது)

சிவனது அநாதி முறைமையான பழமை

(கலிவெண்பா)

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏக னநேக னிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க
ஈச னடிபோற்றி எந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத இன்பம் அருளு மலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்

எண்ணிறந் தெல்லை இலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கு நல்லறிவே
ஆக்க மளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பா யழிப்பா யருள்தருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகும்

நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேசவருள் புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே

தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி யறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருவளர் பெருந்துறைச் சிவோன்மத்தன் அருளிய

# திருவாசகச் சிவபுராணம்

அகத்திய மாமுனியடிகள் அருளிய அநுபவச் சூத்திரம்

அநாதியுடனு நின்மல சிவனுடைய

அநாதி முறைமையான பழமை

## பொழிப்பனுபூதி உரை

சிவபுராணமான திருவருள் விநியோகம் அருளிச் செய்யப் புகுகின்றவாவன :—

இதன் அனுபூதிக்குப் பொழிப்பனுபூதி யாவன :—

சிவனது பெருங்கருணையாகிய அநாதியான சச்சிதானந்த முறைமை. அவற்றுள் வேதாகம புராண சாத்திர சுத்த சைவ அபேத அத்துவித சித்தாந்த சம்பிரதாய அனுபவம் முழுதும் அடங்கும் தன்மைக்குச் சிவபுராணம் என்று பெயராயிற்று.[1]

மூல இலக்கணமாகிய பாவிலக்கணங்களுக்குள் அதிவர்ணமாகிய விப்பிர வர்க்கமானபடியினலே கலிவெண்பாவாகத் திருப்பெருந்துறையில் ஓதிய கடவுள் வாழ்த்து.

மங்கல வாக்கியமும், பாயிரமும், திருவாசகம் முழுதிலுள்ள பொருளும், சாத்திர முடிவில் அருளிய 'அணைந்தோர் தன்மைக்' கருத்தின் பயனும், அடங்கும்படி பஞ்சாக்கரத்தை முன்னுக வைத்தது. ஐவகையாக நின்ற முறைமைகளையும், எண்வகையாக நின்ற முறைமைகளையும், துதித்தலை உணர்த்தியது.

நாதன்ருள் வாழ்க என்பது முதல் ஐந்தும் நாதாதியா நின்ற முறைமை.

---

1. திருவுள்ளக்கருத்து :—சிவனது அருவ நிலைமை கூறுதல்.

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க (6) என்பது ஐந்தும் பஞ்ச மல நிவர்த்தி பண்ணின குருத்துதி.

ஈசனடி போற்றி (11) என்பது முதல் எட்டும் சிவனது காருண்யமாகிய அட்ட குணங்களையும் துதித்தது.

சிவனவனென் சிந்தையுள் நின்ற (17) என்பது முதல் வணங்கி (18) என்பது வரை அபேதமாக நின்று அனுக்கிரகம் பண்ணிச் சிவகாருண்ணியத்தினாலே அவ்வருளாய் நின்று வணங்கியது.

சிந்தை மகிழ (19) உரைப்பனியான் (20) என்றது, சிவ புராணத்தைச் சொல்லுவானேனெனில் பஞ்ச மலத்தடைகளும் நீங்கி உயிரானது பேரானந்தத்தைப் பெற்று இன்ப சுகமடையும் பொருட்டுச் சொல்லுகின்றது என்றது கருத்து.

கண்ணுதலான் தன்கருணை (21) முதல், இறைஞ்சி (22) காறும் சுயகுருவாய் வந்த ஆசாரியரைத் துதித்தது.

அவையாவன :—

"பரம்பொருளாகிய சிவன்தன் பெருங்கருணையை அறிவித்தற்கு ஞானகுருவாய் எழுந்தருளின திருப்பெருந்துறைக் குருவை நமக்கரித்து இப்புராணத்தைச் சொல்லுவேன்" என்பது கருத்து.

ஆதலால்,

புராணம் முழுதும் ஆறு வாக்கியங்களுள் அடங்கும். அப்பாலுள்ளது கருணையைத் துதித்தற் பொருட்டு.

நின்பெருஞ்சீர் (24) முதல், பல்லோரு மேத்தப் பணிந்து (95) காறும் தோத்திரமும், இப்புராணத்தினது பெருமையும், இப்பொருட் பயனை உணர்வோர் உணர்த்துவோர் பயனும் அருளிற்று.

விண்ணிறைந்து (23) முதல் எல்லையிலாதான் (24) என்பது காறும் மகாவாக்கியப் பொருளாதலால் சகல வேதாந்தப் பொருளான சைவ சித்தாந்த சிவபுராண சாத்திர சம்பிரதாயப் பயன்களும் அடங்கியிருப்பதை உபதேசத்தால் அனுபூதி பெறத் தக்கதெனக் காண்க.

## 1. நமச்சிவாய வாழ்க

### பொருள்

#### பதப்பொருள்

நமச்சிவாய வாழ்க என்ற திருவருள் விநியோகம் அருளிச் செய்யப் புகுகின்றவாவன. 'வாழக்கடவ' தென்று பெரியோர்கள் ஆசீர்வாதம் பண்ணுதலைப் போல, 'பஞ்சாக்கரம் வாழ்க' என்று அருளியது. பிறர் ஆசீர் வாதமன்று. பரமசிவனை நோக்கி, "ஐவகைப் பொருளா கிய தேவரீர்! அடியேனிடத்து அபேதமாகத் தானய் நிற் கும் முறைமை பிரியாதிருக்க அருள்க" என்பது கருத்து.

#### நட்பப்பொருள்

அநாதி காரணமாகவும், சர்வ வியாபகமாகவும், உயிர்க் குயிராகவும், அறிவாகவும் இருக்கும் தன்மைகளை ஐவகை களாக உணர்த்தினது. ஐவகை யென்று திருநாமப் பொருளைப் பன்மையாகச் சொல்ல வேண்டுவதென் னெனின், பதி பசு பாசமான முப்பொருளும் அடங்கு கையால்.

அடங்குதலாவன :—

இறைசத்தி பாச மெழின்மாயை யாவு
யுறநிற்கு மோங்காரத் துள்.

(திருவருட்பயன் 9 : 2)

இவை ஒரு பொருளாய் நின்ற முறைமை.

முப்பொருள் ஒன்ருமோ வெனில், ஒன்ருகாவிட்டால் பரமசிவனுக்குச் சாட்குணியமில்லை. மூன்றும் ஒரு பொரு ளாயிருந்தாலல்லது பரமுத்தி கூடாது. பரமுத்தியிற் கண்ட தொன்றே; வேறின்று; ஆகையால் அப்பொருளும் ஒன்றே. அதுவே வேதாந்தப் பரப்பிரும வத்து. அது புலப்படாவிட்டால் இலாபமில்லை. அது புலப்படுவது எப்படி யென்னில், திருநாமமான பஞ்சாக்கரம் பரமசிவனுக்குச் சதா நடனத் திருமேனியானதால், தகரவித்யா மந்திர

சொரூபமாயிருந்த பரமரகசியப் பொருளை ஞானகுரு உப தேசத்தால் அனுபூதிபெற வெனக் காண்க.

பரமுத்தியிலுள்ள நிட்டை யொன்றுமே பஞ்சாக்கர நடனமென் றறிக.

அட்சரசேர்வை விதியினல் முப்பதமென்று தன்மை படர்க்கை முன்னிலையினலே உச்சாரணக் கிரமத்துக்கு வைத்து எழுத்துக்கூட்டித் திருநாமம்போல் விளங்கு மாகையால், இறையருளுருவாய் நிட்டைகூடி, நாவால் துதி யாது, உச்சரியாது, உணராது, உயிராது, நாவால் துதித்து உச்சரித்து உணர்ந்து இருந்தபடி அறிந்து அனுபூதி கொள்க.

இப்போதருளிய சம்பிரதாய நிட்டைக்குத் திருஞான சம்பந்தக் கண்ணுடைய வள்ளலார் அருளிய சிவானந்தமாலை யில் பஞ்சாக்கர தரிசன முடிவில் ஞான மகடூஉ முன்னிலை யில் வைத்து,

நாவார வஞ்செழுத்தை யோதினர்க் கென் றுரைத்தீ
ரோவாத முத்தரெலா மோதுவதென் ? பாவாய்கேள்
சொல்லிறந்த வஞ்செழுத்தைச் சொல்லிறந்த வுண்மையிலே
சொல்லிறந்து நின்ருேது வார்.

(சிவானந்த. 329)

என் றமை காண்க.

(ii) பஞ்சாக்கர வகைகள்

கேட்டல், சிந்தனை, தெளிதல், நிட்டை பொருந்தினவர் களுக்கு வாசனமலம் தீர்தற்கு உபாய நிட்டையாக மெய்ஞ் ஞான குரு உபதேசித்த பஞ்சாக்கிரக் கிரமத்தில் தூல பஞ்சாக்கரம் பதினைந்து; சூட்சும பஞ்சாக்கரம் பதினைந்து, முக்கலைப் பிரணவம், ஐங்கலைப் பிரணவம், சோடசகலாப் பிரசாத பஞ் சாக்கரம், பரமுத்தி நிலைப் பஞ்சாக்கரம் இவ்விதமாக இருப்பது.

அவையாவன :—

ஐம்பத்தோரக்கரத்தில் அகாரத்திற் பிறந்த அகராதி பதினாறெழுத்தும் பிரமாங்கம் என்று நீக்கி, உகாரத்திற் பிறந்த ககராதி விட்டுணுவங்கமான இருபத்தைந்தெழுத்தில் சூன்னியமாகிய நமவென்ற இரண்டெழுத்தும் விட்டுணுவுக்குச் சிவனை நமக்காரம் பண்ணுதற்கொழிலாதலால் கூட்டி, அப்பால் விந்துநாதமாகிய மகரத்தில் தோன்றிய ருத்திராங்கம், மகேசுவராங்கம், சதாசிவாங்கமான பத்தெழுத்தினுள், சிகார, வகார மகாரங்களைக் கூட்டிச் சிவாயநம என்பது சுருதி.

'பிரம விட்டுணுக்கள் முதலாயுள்ளார் நமக்கரிக்கைக்குத் தேவனாயுள்ளான், நின்மலன், ஆகிய சிவன், அவன் பொருட்டு நமக்காரம்' என்று சத்தத்துக்கு அர்த்தமாய், வெளிப்பொருளாய், யார்க்கும் தெரியாததாயும், அட்டாங்க யோகத்துக்கும், சகலமான ஸ்ரீவித்தை, தகரவித்தை, தந்திர மந்திர கிரியைகளுக்கும் மூலாதாரமாயும் விளங்கும். தூல சூட்சுமங் கடந்த பிரசாதத்தில் துவாதசகலாப் பிராசாதமென்றும், அட்டாக்கரமென்றும், சோடசகலாப் பிராசாதமென்றும் கூறப்படும். அதில் [1]மேதைகலை, அற்கிசகலை, விடகலை, விந்துகலை, அர்த்தசந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, வியாபினிகலை, [2]வியோமரூபிணிகலை, [3]அனந்தகலை, [4]அநாதிகலை, [5]அனுசிருதகலை, [6]சமனாகலை, உன்மனாகலை என்ற இக்கலைகள் பதினாறு. வியோமரூபிணி என்ற கலை முதல் நாலும் நீங்கி, மிஞ்சியிருப்பவை துவாதசகலாப் பிரசாதம்.

இக்கலைகளுக்குக் குணங்களும் அடையாளங்களும் மாத்திரைகளும், அத்துவாக்களும் அடங்கியிருப்பதான கலையே சிவயோக சமாதியெனக் காண்க.

---

1. இங்குக் கூறப்பெற்ற 16 கலைகளையும் பிரசாத கலைகள் என்பர்.

(பி - ம்) 2. வியோமரூபைகலை.

3. அனந்தைகலை.

4. அநாதைகலை.

5. அநாசிருதைகலை.

6. சமனைகலை.

அபேத சிவஞான நிட்டைக்குப் பரமுத்தியிலுள முத்தி பஞ்சாக்கர தரிசனம். ஞானகுரு உபதேச நிட்டையான ஈசன் இருவிரலாற் காட்ட வொண்ணு இன்பத்தை, மாசற ஓர் அங்குலியால் வாழ்வித்த வாழ்வான வாழ்வை அனுபூதியாற் காண்க. இவ்வனுபூதி சந்தான சமய வாசாரியரான நாயன்மார்கள் அங்கங்கே சாத்திர, தோத்திரங்களில் அருளியிருப்பதை உபதேசவோர் மொழியாலும் திருவுளம் பற்றுவார்கள். அந்த அந்தப் பக்குவத்துக்குத் தக்கதாகச் சிவஞான அனுபோகம் விளங்கும். எவ்வகைப் பஞ்சாக்கர அனுபூதி பெற்ருலும் இத்திருவாசக முதல் மொழியான திருநாமத்திலே அடங்கியிருக்குமென்பதகுற்ச் சுருதி.

வேதத்தில்,

வேதநான்கினு மெய்ப்பொருளாவது
நாதநாமம் நமச்சிவாய (ஞானசம் : 3 : 307-1)

என்றும்,

நற்றுணே யாவது நமச்சி வாயவே
(திருநாவுக். நமச்சிவாய. 1)

என்றும்,

நான்மறக்கினும் சொல்லுநா நமச்சி வாயவே
(சுந்தரர் : திருப்பாண்டிக்.)

என்றும் அருளிய அனுபூதி காண்க.

ஆகமத்தில்,

ஐந்தெழுத் தோதி யேறினுர்
(பெரிய. ஞானசம்பந். 216)

என்றும்,

புராணத்தில்,

அஞ்செழுத் துமனுதி (கோயிற் : பாயி : 20)

என்றும்,

சாத்திரத்தில்,

அஞ்செழுத்தா லுள்ள மானுடைமை
(சிவஞானபோதம் சூ. 9 அதிகா. 3 உதார. 1)

என்றும்

எண்ணு, மஞ்செழுத்தே யென்று மெண்ணி, யஞ்செழுத்து மாறி
என்றும், (சிவப் : 11 : 5)

குஞ்சிதத்தாளஞ் செழுத்தாற் கொள் (சிவானந்த. 315)

என்றும்,

அஞ்சே யஞ்சாக (திருவுந்தி. 10)

என்றும்,

ஐந்து பொருணூறெரியப் புகின் (திருவருட்: 81)

என்றும் நாயன்மார்கள் அருளிய அனுபவச் சுருதிகளில் அங்கங்கே வருவனவற்றுற் காண்க.

நுட்ப உரை

முன் அருளிய பொழிப்புரை அநுபூதி நுட்பத்திற் காட்டியதான பரமசிவன் (1) ஐவகைப் பொருளான்; (2) உயிரிற் பிரிவிலாதிருப்பவன்; (3) என்றைக்கும் உயிர் அடிமை; (4) அநாதியாய் உயர்க்கறிவாய் அவன் விளங்குவான்; (5) பஞ்சக்ருத்தியம் அநாதி; (6) ஒன்ருனவன்; பிரத்தியட்சமுள்ளான்; அவனைப் பூசிப்பது மெய்ஞ்ஞானத்தால்; பஞ்சாட்சர சொரூபன்; (7) அடிமைத்திற அன்பு விலாசன்; (8) சிவகரணமாக்குபவன்; (9) துறையே அன்பின் முதிர்ச்சி: என இவைகட்கு பொதுப்பாயிரத்திற் சொல்லிய சம்பிரதாயப்படி திருவருட்பா உரையநுபூதியாவன:—

பொழிப்புரையினும் நுட்பவுரையினுமுள்ள வாக்கியங்களுக்கு எடுத்துக்காட்டுக்கள்

பரமசிவன் (1) ஐவகைப் பொருளான் என நுட்பவுரையிற் காட்டிய அனுபூதிக்குத் திருமெய்ஞ்ஞானத் திருநெறித் தேவாரமாகிற ‘தோடுடைய செவியன்’ என்ற திருவருட்பாத் திருவுளக்கருத்தனுபூதியும், அத்திருவருட்பாவில் ‘உள்ளங் கவர் கள்வன்’ என்ற பதத்திற்குச் சுத்தாவத்தை அனுபூதி உரையும், பஞ்சாக்கர தரிசன அனுபூதிக்குப் ‘படைக்கலமாக உன்நாமத் தெழுத்தஞ்சும்’ என்ற திருவருளிப் பாடலான அனுபூதிக் கெடுத்துக்காட்டலும், முத்தி பஞ்சாட்சர ஞானபூசை அனுபூதிக்கு எடுத்துக்காட்டலான ‘ஞானத்தாற் ரொழுவார் சில ஞானிகள்’ என்ற திருவருட்பா அனுபூதியுரையும், முன் நுட்ப அனுபூதிப்படி (2) உயிரிற் பிரிவில்லான் என்பதற்குக் ‘கூற்ரு

யினவாறு விலக்க கலீர்' என்ற தேவார உரையனுபூதி யுரையும், (3) பெத்த முத்தமிரண்டினும் ஆன்மா அடிமை என்பதற்குப் 'பித்தா பிறை சூடி' என்ற தேவார உரையனுபூதியும், அருளறிவே சொரூபம் என்பதற்கு 'மெய்த்தாறு சுவையும்' என்ற தேவாரத்தை எடுத்துக்காட்டலான அனுபூதி யுபதேச வுரையும், (4) திரிபதார்த்த, பஞ்சகிருத்திய வகைப்பொருளும் அநாதி என்பதற்குப் 'புகையெட்டும் போக்கெட்டும்' என்ற தேவார அனுபூதியுரையும், (5) ஒன்றுனவன் என்பதற்கு 'திருவெழுகூற்றிருக்கை' யான தேவாரவுரையும், அன்பே இன்பென்ற திருத்தொண்டின் உண்மைக்கு 'உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்' என்ற அருண்மொழித் தேவநாயனருளிய திருத்தொண்டத்தொகை அன்பு விலாச அனுபூதியுரையும், (6) பிரத்தியட்சப் பொருளாயுள்ளான் என்பதற்குக் 'காண்டலே கருத்தாய்' என்ற தேவார வுரையும், 'பொன்வண்ணம்' என்ற அருளிப்பாட்டின் விளங்கிய பசுகரணமே சிவகரணமான அனுபூதியுரையும், அவையில், சிவத்துக்கும் அருளுக்கும் ஆத்மாவுக்கும் பிரத்யட்ச வநுபூதியும், அருட் கேவல சகல சுத்த சிவதரிசன சிவ கரண பஞ்சகிருத்ய வளவை யநுபூதியுரையும், (7) துறை யாவது அன்பு முதிர்ச்சி என்ற அனுபூதிக்குக் கோவைத்திரு வாசக அருளிப்பாடான 'திருவளர்தாமரை' முதல், 'காரணி கற்பகம்' வரை பேரின்ப அனுபூதித் துறை விலாச வுண்மை விளக்கமுமாக எழுதியதையும் ஆகிய அனுபூதிகள் நிட்டையாற் காணத்தக்கன.

---

உ

திருச்சிற்றம்பலம்

(1) ஐவகைப் பொருளான் என்பதற்கு எடுத்துக்காட்டலான அநுபூதிச் சுருதி.

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

(திருஞான. திருப்பிரம. 1)

(இதன் பொருள்) அநாதி மூல காரணமாகிய பிரணவ வேதாகம புராண சாத்திர குரு சம்பிரதாய உண்மைகளாகிய சுத்த பரசுக முத்தியிலே செய்யும் பஞ்சகிருத்தியமும், பஞ்சகர்த்தாக்களும், பஞ்சசத்திகளும், பஞ்சசாதாக்கியமும், பஞ்சாக்கரமும், பஞ்சசிவதத்துவமும், பஞ்சகலையும், பஞ்ச கலாதிகளும், பஞ்சான்மாக்களும், பஞ்சகரணமும், பஞ்சதன்மாத்திரையும், பஞ்சகன்மங்களும், பஞ்சதொழிலும், பஞ்ச இந்திரியங்களும், பஞ்சபூதமுமாக நின்று அனுக்கிரகம் பண்ணுகிற முறைமையை முன்னமே அநாதி தொடங்கித் தக்ஷிணாமூர்த்தமாக எழுந்தருளிச் சனகாதிகளுக்கு அனுக்கிரகம் பண்ணுகிறபோது பஞ்சாக்கரமே பொருளென்று ஐந்து விரலையும் காட்டி, சத்தினிபாதம் நாலென்று நாலு விரலைக் காட்டி, பதி, பசு, பாசம் மூன்றென்று மூன்று விரலைக் காட்டி, சத்தி சிவம் இரண்டென்று இருவிரலையுங் காட்டி, அத்துவிதம் என்று இரண்டு விரலையும் கூட்டி சின்முத்திரையாகக் காட்டும் பொருளைத் திருஞானசம்பந்த நாயனாராகிய சுவாமி சிவபாதவிருதையருக்கு ஒரு விரலாற் காட்டின பேரானந்தவுண்மை யுபதேசத்தைச் சொல்லியது.

பதவுரை

**தோடுடைய செவியன்**—என்பது பெண்ணியல்பணியாகிய தோடணிந்த இடது காதை யுடையவன்.

பெருமையிற் சிறந்தோர் பெண்ணணி அணிதல் சிறப்பன்றே என்னில், பரமசிவன் அர்த்தநாரீசுவர பரமேயாகையால், இடது காது தோடு தரித்திருக்கும். ஆனால், அர்த்தநாரீசுவர பரமாத்திரமேயன்றிப் பரமசிவ வடிவாகிய ருத்திரமூர்த்தி முதல் பஞ்சவிம்சதி வடிவுகளுக்கெல்லாம் தோடு தரித்திருப்பானேனென்னில், சிவனுக்கு வடிவெல்லாம் அருளாகையினால் இரண்டு காதுகளுக்கும் தரிக்க வேண்டுமேயென்னில் ஒரு காதில் தரித்தது கூறுவோம். இவ்வுலகத்தில் ஆணுக்குப் பெண் வடிவமில்லை; பெண்ணுக்கும் ஆண் வடிவமுமில்லையே; அப்படி உலகத்து ஆண் பெண் போலல்லாமல் இரண்டும் ஒரு பொருளாக—அக்னியும் சூடும் போல—குணகுணி பாவமாயிருக்கும்; அவை ஒன்றே. அந்தச் சக்திக்கே வடிவாகையால்; அருளே குணம்; அந்தச் சக்திதானே ஆணும் பெண்ணுமாகவே இருக்குமாகையால் தோடணிதல் சக்தியே வடிவென்பதற்கு அடையாளமானது.

முப்பத்திரண்டங்கமும் பாதாதிகேசமுமிருக்கக் காதைச் சொல்லுவானேனென்றால், அன்பர் துதித்தால் காதினாற் கேட்டுத் திருவுளத்திற் கிருபை வரவேண்டுமாதலால். இடது காதைச் சொல்லுவானேனென்னில், அருளின் வழியே ஆனந்தத்தைப் பெறவேண்டுமாகையால் இடது காதைச் சொன்னது.

மேலாகிய தமிழ் வேதமாகிய மெய்ஞ்ஞானத் திருநெறித் தேவாரத்துக்குக் காப்புமில்லாமல், மங்கல விலக்கண மொழியுமில்லாமல் தோ என்று எடுத்ததேதென்னில், காப்பு, மங்கலமொழி முதல் உத்தம மூல விலக்கணமெல்லாம் அடங்கவே எடுத்தது. எடுத்ததேதென்னில், 'உபதேசக் கிரமமாக விருக்கும் தேவாரத்தை உண்மையென்றெடுத்தபேர் பரிபாகப் பட்டவராமே; அதுவும் திருவுளம் பற்ற வேண்டுமே' என்னில், சொல்வோம். சகல இலக்கணமும் மேலாகிய பொருளும் அடங்குவதச்சொல். வேத தந்திர மந்திரங்களுக்கெல்லாம் பிரணவமானது மூலகாரணமாமே. அஃதென்னவெனில் பிரணவத்திலேயிருந்து சகல

மும் தோன்றினபடியினுலே; இந்தப் பிரணவத்தையே முன் சொன்னது.

'உயிரெழுத்து உயிர்மெய்யெழுத்தாமோ' என்னில், ஆம். அஃதெப்படி யென்னில், இவை எழுதும் வேதமாகிய தமிழ் வேதமாகையால், பிரணவத்தை [1]உயிருடன் கூட்டி உயிர்மெய்யாகச் சொன்னது. ஆனுல், பதினெட்டு ஒற்று மிருக்கத் தகர ஒற்றைக் கூட்டுவானேனென்னில், தகர ஒற்றானது தகரவித்தைக்கு வடமொழி ஒற்ருகையால் அவ் வொற்றையே பிரணவத்திற் சேர்ந்தது. ஆனுல் 'விந்து வைக் காணேமே' என்னில், பிராசாதத்துக்குள்ளே சகல மும் அடங்கும். ஆதி ஓகாரமும் அந்தம் மகாரமுமாகவே இருக்க வேண்டுமே! கடைசிப்பதம் 'காதலாகி' (திருஞான. நம்மச்சிவாயத் திருப்பதிகம்) என்ற பதிகத்தில் பஞ்சாக்கரத் தால் அனுபூதி பெறலாமே? [2]..........................

'தோடுடைய செவியன்' என்று அருளிச் சிறப்பித்து, ஐந்து உண்மையாகிய அடையாளங்களில் முதலடையாளம் சக்தியை வைத்தது; பரமசிவன் முத்தான்மாக்களுக்குப் பஞ்ச கிருத்தியம் பண்ணும்போது முன் செய்யும் சிருட்டி கிருத்தியம் பரமசிவன் சக்தியைப் பொருந்துதலால் என்க.

விடையேறி (எ - து)—விடையாவது சிவபுண்ணிய முகூர்த் தம்; ஏறுதலாவது, சிவபுண்ணிய முதிர்ச்சி முடிவிலே சிவானந்தத்தைப் பரமசிவன் பெருகப் பண்ணுவன்; பெருக்கி வளர்தலே சுத்த பஞ்ச கிருத்திய திதி.

ஓர் தூவெண்மதி சூடி (எ - து)—மதிசூடலாவது வளர்தலும் குறைதலும் செய்யுமிடம். அதைத் தரித்தல் சுத்தத்திலே இளைப்பாற்றும் தொழிலையுடைய சுத்த பஞ்ச கிருத்திய சங்காரம்.

காடுடைய சுடலைப் பொடிபூசி (எ - து)—மகாசங்காரத்தில் ஒடுங்கின விபூதியைத் தரித்தலால் சுத்த பஞ்ச கிருத்திய

1. இங்கு உயிர் என்றது மெய்யைக் குறித்தது.
2. ஏட்டில் இப்பகுதி முற்றுப் பெருமல் இருக்கிறது.

திரோதம். அஃதெப்படியென்னில், பெத்த பஞ்ச கிருத்தியத்தில் பொய்யை மெய்யாக்கும்; முத்த பஞ்சகிருத்தியத்தில் பொய்யை மறைத்து மெய்யுண்மையைக் காட்டும். அவையே திரோதம்.

எனது உள்ளங் கவர் கள்வன் (எ-து)—"யான், எனது" என்னும் ஆன்ம பாவத்தைத் தனக்கும் தெரியாமல் பிறருக்கும் தெரியாமல், இருந்தபடி இருக்க, [1]சுத்தாவத்தை ஐந்தாக அனுபோகம் பண்ணும்படி கவர்ந்து கொண்டு அநாதியேயுள்ள பொருளை இருந்தபடி இருக்கத் தானாக்கிக் கொள்ளுதல். அதுவே சுத்த பஞ்ச கிருத்தியான அநுக்கிரகம்.

ஏடுடைய மலரான் முனநாட் பணிந்தேத்த அருள் செய்த (எ-து)—சிவாகமத்திலே விதித்தபடி அன்பு மணத்தையுடைய நல்ல புட்பங்களினாலே அர்ச்சனை பண்ணின தவப்பேறாகிய சங்கல்ப சித்தாளுக்கு அநுக்கிரகம் பண்ணின.

பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே (எ-து)—மேலான பெருமையையுடைய பிரமபுரம் என்னுமிடத்தில் எழுந்தருளியிருக்கும் ஞானகுரு தேசிகனாகிய பொருள் இதுவே என்று ஒரு விரலால் காட்டின அனுக்கிரகம் எனக் காண்க.

### நுட்பம்

### ஐந்தாக நின்ற முறை

ஐந்தடையாளம் சொல்ல வேண்டுவதென்னெனில், பரமசிவன் அநுக்ரகமெல்லாம் ஐந்து வடிவாகவே இருக்

---

1. சுத்தாவத்தை: கன்ம ஒப்பும் மலபரிபாகமுமுண்டான அவதரத்திலே ஞானாசாரியனாலே ஞானதீபத்தைப் பெற்றுச் சிவனையும், ஆத்மாவையும், பாசத்தையும் உணர்ந்து அருள்பெறும் அவதாம். இது நின்மலசாக்கிரம், நின்மலசொப்பனம், நின்மலசுழுத்தி, நின்மலதுரியம், நின்மலதுரியாதீதம் என ஐந்து.

(சிவப்பிரகாசக்கட்டளை.)

கும். அவற்றில் பஞ்சகிருத்தியம் இப்பொழுது சொல்லப்பட்டது. பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் பிரமன், விட்டுணு, ருத்திரர், மகேசுவரர், சதாசிவர்; இவர் ஐவர்.

பஞ்சசத்திகளாவன :—கிரியாசத்தி, இச்சாசத்தி, ஞான சத்தி, ஆதிசத்தி, பராசக்தி.

[1]பஞ்சசாதாக்கியங்களாவன :—கன்மசாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், சிவசாதாக்கியம்,

பஞ்சாக்கரங்களாவன :—அகாரம், உகாரம், மகாரம், நாதம், விந்து.

[2]பஞ்சதத்துவங்களாவன :—சுத்தவித்தை, ஈசுவரன், சாதாக்கியம், சத்தி, சிவம்.

பஞ்சகலைகளாவன :—நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதம்.

பஞ்சகலாதிகளாவன :—இராகம், அவித்தை, நியதி, காலம், கலை.

பஞ்சான்மாக்களாவன :—தூல, சூக்கும, பர, மூல, மோகினி.

பஞ்சகரணங்களாவன :—மனம், புத்தி, அகங்காரம், சித்தம், உள்ளம்.

பஞ்சதன்மாத்திரைகளாவன :—கந்தம், ரூபம், பரிசம், ரசம், சத்தம்.

பஞ்சகன்மேந்திரியங்களாவன :—உபத்தம், பாயுரு, பாணி, பாதம், வாக்கு.

பஞ்சதொழில்களாவன :—ஆனந்தம், விசர்க்கம், ஆதானம், கமனம், வசனம்.

---

1. சாதாக்கியம் :—நிட்கள மதனிற் சகள நிறைந்திடு மப்பெயர் சாதாக்கிய மெனலாகும். (சதாசிவரூபம் 5.) சக்தியுடன் சேர்ந்த பர சிவம் சாதாக்கியம்.

2. இவை சிவதத்துவமென்னும், சுத்ததத்துவமென்னும், பிரேரக காண்டமென்றும் பெயர் பெறும்.

பஞ்சஇந்திரியங்களாவன :—(ஞானேந்திரியங்கள்) ஆக்கிராணம், சிங்குவை, சக்ஷு, துவக்கு, சோத்திரம்.

பஞ்சபூதங்களாவன :—பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்.

இன்னும் ஐந்தாகிய பொருள்கள் எவையுமாக நின்று அனுக்கிரகம் செய்த முறைமையைக் காட்டினதெனக் காண்க.

எச்சம் : சம்பிரதாய உரையாவன

சுத்தாவத்தை அனுபூதி

என்னுள்ளம் கவர்கள்வன் என்ற பதத்திற்கு உரை சுத்தாவத்தை என்ற அநுபூதிப் பயன் ஆவன.

அநாதியே யுள்ளதான கேவலாவத்தை, சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம்; கீழாலவத்தை; மத்தியாலவத்தை; சகலாவத்தை; சகலத்திற் சுத்தாவத்தை யிருப்பது தன்மை யிரண்டு (?).

கீழாலவத்தை ஐந்தாவன :—

ஆன்மா தொண்ணூற்றாறு கருவியுடன் லாடத் தானத்திற் சகலத்தில் சாக்கிரமாய் நிற்கும்போது அறிகருவி பிரேரகாண்டமான கலாதி 6: சிவதத்துவம் 5: பெரும்பூதங்கள் 5: அவையிற்றின் காரியம் 25: நாடி 10: வாக்கு 4: குணம் 3: ஆங்காரம் 3. ஆக 61-ம் நீங்கி, ஞானேந்திரியம் 5: கன்மேந்திரியம் 5: தன்மாத்திரை 5: அந்தக்கரணம் 4: உள்ளம் 1: வாயு 10: வசனுதி 5. ஆக 35 கருவியுடன் மயங்குதல் கீழாலவத்தைச் சாக்கிரம்.

ஞானேந்திரியம், கன்மேந்திரியம் 10-ம் சாக்கிரத்தில் நிற்க, நின்ற 25 கருவிகளுடனே கண்டத்தானத்திலே சாக்கிரவாதனே பவுரி சுழன்று (?) நீங்கியும், பிரமை நிற்றல் சொப்பனம்.

வசனுதி 5: தன்மாத்திரை 5: சித்தமின்றிக்கரணம் 3: பிராணவாயு நீங்க வாயு 9. ஆக 22 கருவிகளும் கண்டத்

தினில் நிற்க, 3 கருவிகளுடனே இருதயத்திலே மிகுத்த இருளில் மின் பிரகாசித்துழி, கண் ஒரு பொருளையும் நிச்சயிக்க வொண்ணுதுபோல நிற்றல் **சுழுத்தி.**

சித்தம் இருதயத்தில் நிற்க, 2 கருவிகளுடனே நாபியில், மின் மறைந்தபோது கண் மிகுந்த இருளாதல் போல நிற்றல் **துரியம்.**

பிராணவாயு 1-ம் நாபித்தானத்தில் நிற்க, உள்ளமொன்றும் பெயர் மாத்திரமாய்க் கருவியென்கிற பெயரொன்றுமின்றி மூலாதாரத்தில் பிறவிக் குருடன் அந்தகாரவிழி போலே நிற்றல் **துரியாதீதம்.**

**மத்தியாலவத்தை ஐந்தாவன :—**

கருவிகளுக்கெல்லாம் கீழாலவத்தை ஐந்துக்கும் சொன்னபடி, தானம் ஐந்தில், இலாடமொன்றிலே நிற்கையிலே ஐந்தவத்தைப்படும் :

அவையாவன :—

விரும்பும் ஒரு பொருளை வீழ்த்துக் காணுமல் மூச்சின்றி ஏங்கி நிற்றல் **அதீதம்** : மூச்சு விடல், **துரியம்** : அறிவு தோன்றுதல் **சுழுத்தி** ; 'எவ்விடத்திற் போட்டோம்' என்று சந்தேகித்தல் **சொப்பனம்** : இன்ன விடத்தென்றறிதல் **சாக்கிரம்.**

இது நிற்க : இனி,

**சகலாவத்தை யாவன :**

கேவலத்திலிருக்கிற ஆன்மாக்களுக்கு அறிவு விளங்கும் பொருட்டு மூலாதாரத்திலே இருக்கிற பராசத்தி திரோதையாய்த் தன்னிடத்துண்டான ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சா சத்திகளாகி, அந்த ஞானசத்தி சிவதத்துவத்தை எழுப்ப, சிவதத்துவம் சத்தி தத்துவத்தை யெழுப்ப, இந்தத் தத்துவங்கள் சூக்குமையைக் காரியப்படுத்தி, இதில் சத்தி தத்துவம், காலம், நியதி, கலை இவற்றையும் எழுப்ப, ஆன்மா இவ்வடிவாய்த் துரியத்தில் வந்து பிராணவாயு

வுடன் கூடிச் சுழுத்தியில் வந்தவுடன் அந்த ஞானசத்தி தானே சுத்த வித்தையை எழுப்ப, அது வித்தையை எழுப்ப, பின்னும் அவ்விடத்திலேதான் இச்சாசத்தி ஈசு வரத்தை எழுப்ப, அது இராகத்தை எழுப்ப, அப்போது பஞ்சகஞ்சுக வடிவான புருடதத்துவம் உருவாகும்.

பின்னும் அவ்விடத்திற் கிரியை சாக்கிரத்தை எழுப்ப, அது பைசந்தியைக் காரியப்படுத்திப் பிரகிரு தியை எழுப்பும். அவ்விடத்து ஆன்மா முக்குண வடிவாய்ச் சொப்பனத்தில் வருவன், அவ்விடத்தில் பஞ்சஅதி தெய்வம் பஞ்சாக்கரங்களை எழுப்பும். மகேசுவரன் மத்திமையைக் காரியப்படுத்தி உள்ளம் வரை அட்சரம் ஐந்தையும் எழுப்பும். அப்பொழுது சாக்கிரப் பொசிப்புப்போல, சூக்கும தேகியா யிருந்து புசித்து இவை வடிவாய்ச் சாக்கிரத்தில் வருவன். அவ்விடத்தில், ஞானசத்தி, முன் சத்தி தத்துவத்துக்குக் காரணமாயிருந்த சிவதத்துவத்தை எழுப்ப, உருத்திரன் வைகரியைக் காரியப்படுத்த, அச்சிவ தத்துவத்துக்குமுன் சூக்குமமாயிருந்த பிரகிருதி மாயையை எழுப்ப, அது முன் முக்குணமாய் நின்றதை ஒன்பது குணங்களாகப் பேதிப் பித்து மெய்யாக மயக்கும் காலத்து, ஆன்மா இவை வடி வாய் ஆகாசத்தினிடமாக நின்று, சோத்திரத்தைப் பொருந்தி, சத்தத்தை அறிந்தால் வாக்கு வசனத்தைச் சொல்லும். வாயுவினிடமாக நின்று தொக்குவைப் பொருந்திப் பரிசத்தை அறிந்தால் பாதம் கமனம் பண் ணும். தேயுவினிடமாக நின்று சட்சுவைப் பொருந்தி ரூபத்தை அறிந்தால் பாணி இடுதலும் ஏற்றலும் செய்யும். அப்புவினிடமாக நின்று சிங்குவைப் பொருந்தி ரசத்தை அறிந்தால் பாயுரு மலசலத்தைப் பிரிக்கும். பிருதிவியினிட மாக நின்று ஆக்கிராணத்தைப் பொருந்தி கந்தத்தை அறிந்தால் உபத்தம் ஆனந்தத்தை விடும். இவ்வகைப் படும்போது ஆன்மாவானது இவைகளான ஆங்காரங்கள், நாடிகள், பஞ்சபூத காரியங்கள் இவைகளால் சனனமரணப் படும்.

இத்தொண்ணூற்றாறு தத்துவங்களையும் அனந்த சிவ சக்திகளால் காரியப்படும் சகலாவத்தைக்குக் கருவித்தொகை எத்தனை யென்னில் அதீதத்திலே சத்தி தத்துவம் 1: கலையாதி 3: சூக்குமை 1: ஆக 5. துரியத்தில் அவற்றுடன் பிராண வாயு 1: ஆக 6; சுழுத்தியில் அவற்றுடன் சுத்தவித்தை யாதி 3: வித்தையாதி 3: குணம் 3: பைசந்தி 1: ஆக 16. சொப்பனத்தில் (அவற்றுடன்) அந்தக்கரணம் 4: வாயு 9: மத்திமை 1: ஆக 30. சாக்கிரத்தில் (அவற்றுடன்) பூதம் 5: ஞானேந்திரியம் 5: கன்மேந்திரயம் 5: தன்மாத்திரை 5: வசனாதி 5: சிவத்துவம் 1: மாயை 1: பூதகாரியம் 25: நாடி 10: வைகரி 1: ஆங்காரம் 3: ஆக 96.

சுத்தாவத்தை

இப்படிச் சகலாவத்தை படுங்காலத்துத் திருவருளாற் சத்தினிபாத முதிர்ச்சியால் ஆசாரியராகத் தன்னைப்போலே புலப்பட எழுந்தருளி, சிவஞானபோத உண்மை உபதேசம் செய்ததனால், உரிய அன்பு தெளிவான காலத்துத் தான் தோன்றாது சுத்தாவத்தை படும்.

சுத்தாவத்தையின் காரியமான நின்மலாவத்தை.

அவையாவன:

மெய்ஞ்ஞான சற்குரு அனுபவம் பெற உபதேசித்த பொருளான தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி; ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி; சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் ஆகிய இவை பத்தும் அனுபூதி பெற்றுத் தான் அடங்கி, 'அருட்செய லதுவதுவாய், நாலிரண்டில்லை யிரண்டொன்றாய்' நின்ற முறைமையும் அறிவித்து அதிற் காரண காரிய பஞ்ச பூதங்களின் தன்மையைக் காணவே, தூல தேகமே தானாய் நின்ற தன்மை நீங்கி, பூதங்களின் தன்மை தானாவன். அவ்விடத்தில் தன்மாத்திரை வசனாதியுடன் கூடிய தேகம் இந்திரியங்களின் தன்மையைக் காணவே, பூத தேகங்களே தானாய் நின்ற தன்மை நீங்கி, இந்திரியங்களே தானாவன். அவ்விடத்தில், குணங்கள், ஆங்காரங்கள் இவைகளின் சமூகமேயான

பற்றுதி தொழில்களைச் செய்யும் அந்தக்கரணங்களின் தன் மையைக் காணவே, இந்திரியங்கள் தானாய் நின்ற தன்மை நீங்கி அந்தக்கரணங்களே தானவன். அவ்விடத்தில், அறி கருவியான கலாதிகளின் தன்மையைப் பகுத்துக் கண் டறியவே, அந்தக்கரணங்கள் தானாய் நின்ற தன்மை நீங்கி, மாயையுடன் கூடிப் பஞ்சகஞ்சுகனுன புருடவடிவே தானவன். அவ்விடத்தில், இந்தத் தத்துவங்களுக்கெல்லாம் காரண மான அசுத்தமாயையும் இவ்வளவு தத்துவங்கள் வாக்குக் களுக்கெல்லாம் பிரேரகமான, சுத்த தத்துவத்துக்கிடமான, சுத்தமாயையும் ஆகிய இரண்டின் தன்மையைக் காணவே, கலாதி வடிவாய் நின்ற தன்மை நீங்கி, சுத்தாசுத்த வடிவாய் தத்துவாதீத கேவலமாய், 'நானே பரப்பிரமம்' என்று மூன்றும் நீங்கி, நாலாய் நின்ற அவசரம் நின்மல சாக்கிரம்; அருளைத் தரிசித்து இவை நீங்கி, ஐந்தேழாய் நின்ற அவ சரம் நின்மல சொப்பனம்; அருட்செயலைப் பெறலாமென்று நின்ற அவசரம் நின்மல சுழுத்தி; அருளாய் நின்ற நிலை நீங்கி, ஆறெட்டொன்பதாய் நின்ற அவசரம் நின்மல துரியம்; பர சிவத்தைப் பொருந்தி இத்தன்மையும் நீங்கிப் பத்தாய் நின்ற அவசரம் நின்மல துரியாதீதம். இவை சேர்தல் பிரித லான சுவானுபூதிகம்.

எமது குருவரர் அருளிய திருவருட் பாவாவன :—

1. பரமுயிரைப் பற்றல் பரைநான்கு மிச்சை
[யறிவியற்றல் பற்றலேழு
மருளாகும் புருடனைப் பற்றுன்ம சித்தியெட்டு
[மணைதல் மாயை
மருடாகு மொன்பா மாணவ மொன்றல்மல சத்தி
[பத்துமைந்தும்
பொருளாகும் பாக முறிற் பரமொன்றும் பொருந்து
[மன்றே.

பதவனுபூதி :—

பரமுயிரைப் பற்றல் பரை (எ - து)—மகிழும் பரசிவ னைச் சேர்தலென்ற சுத்த துரியாதீதம். அது பொருட் சத்தி—1.

நான்குமிச்சை யறிவியற்றல் பற்றலேழு மருளாகும் (எ - து)—இதில் நான்கென்ற பதமாவது :—முன்னுள்ள பரமும் அது இருந்தபடி யிருக்கத் துரியத்தில் வந்த பரமும், பரையும், உயிருமாக நான்கு. இந்த நான்குடனே இச்சா, ஞான, கிரியை கூடின போது ஏழாம். இந்த ஏழுடனே திருவருளாய்ப் போதல் என்னும் துரியத்தில் நின்றது அருட்சக்தி—2.

புருடனைப் பற்றுன்மசித்தி (எ - து)—முன் சொன்ன ஏழுடனே புருடதத்துவத்தை யடைந்து அருட் செயலைப் பெறுதலென்றும் சுழுத்திக்கே ஆன்ம சிற்சத்தி என்ற பெயரையுடைய தெருட்சத்தி—3.

எட்டு மணைதல் மாயை மருடாகும் (எ - து)—முன் சொன்ன எட்டுடனே மாயாசத்தி பொருந்தி ஒன்பதாய்த் தலைமை அருளே யெனக்கருதி நின்ற விடம் சொப்பனம். அது மருட்சக்தி—4.

ஒன்பா மாணவ மொன்றல்மல சத்தி (எ - து)—முன் சொன்ன ஒன்பதுடனே ஆண மலத்தைப் பொருந்தி இந்தப் பத்துக் கருவியுடன் தன்னைத் தலைவனென்று நின்றவிடம் சாக்கிரம். இது இருட் சத்தி—5.

பத்து மைந்தும் பொருளாகும் (எ - று)—இந்தப் பத்துக் கருவியும் சுத்த துரியாதீதையாதி ஐந்தாக விருக்கும்; அவை ஒவ்வொன்றாய்,

பாகமுறிற் பரமொன்றும் பொருந்து மன்றே (எ - து) —இவ்வைந்தவத்தையும் நீங்கும் முறைமையாவன: தான் தலைமை என்று நின்றது நீங்கின விடமே இருட்சக்தி நீக்கம். அருள் தலைமை என்று நின்றது நீங்கின இடமே மருட்சக்தி நீக்கம். அருட்செயலைப் பெறவே யெண்ணல் நீங்கின விடமே தெருட்சத்தி நீக்கம். திருவருளாய்ப் போதலே அருட்சக்தி நீக்கம். பரமசிவனைப் பெறலே பொருட்சக்தி நீக்கம்.

இவ்வைந்து சத்திகளும் நீங்கவே பரமாய் நின்று அனுபவமாகிய இன்பவடிமை. 'சுத்தபரசிவ சற்குரு திருவடி தரிசனம்' என்று அதீதவாதியாய்ச் சொன்னது. 'சாக்கிரம்' ஆதியாய் வருவது திருவருட்பா.

2. தன்னைத் தலைவனெனக் கருதல் தலைமை யருளே [யெனக்கருதல்
பின்னர்ப் புதிதா யருட்செயலைப் பெறவே வெண்ண [லதுநீக்கி
மன்னித் திருவருளாய்ப் போதல் மகிழும் பரசிவனைச் [சேர்தல்
துன்னிக் கருது மவத்தை யெனச்சொல் லுஞ்சுருதி [சிவாகமமே.

3. ஒன்றே பரமொன் றடியேன் பரையொன் றிநின்ற
வன்றே மலமுந் திரோதையு மேவருளா கியபொற்
குன்றே யனையசிங் காசனத் தன்னைகுக னுடன்வாழ்ந்
தொன்று யிருக்குந் தியாகேசமுப் பொருளொன்
றென்பனே.

இவைக்கு மகாவாக்கிய அனுபூதி :

"சிவ சிவ; கோவா: சிவோய மஸ்தி; மம கிம்: சிவத்துவமஸி சிவோஹமஸ்மி".

பதப்பொருள் அனுபவமாவன :

சிவ சிவ - சிவனாலே சிவாநந்தத்தைப் பெற்றாய். கோவா - அவர் யார்? எப்படி யிருப்பார்?. சிவோய மஸ்தி - உன்னுடைய தேகத்தினிடமாக ஒரு அறிவு விளங்குகிற தனாலே அதுதான் சிவம்....................சிவத்துவமஸி - அதை உன்ன நீயும் சிவனாவாய்: சிவோஹமஸ்மி - சிவன் நானே அறிவுரு. எனக்காண்க.

உ

# பஞ்சாக்கர தரிசனம்

பஞ்சாக்கரமாவன :—

## 1. தூலபஞ்சாக்கரம்

ஐம்பத்தோரட்சரங்களில் அகாரத்தில் பிறந்த அகாராதி பதினறெழுத்தும் பிரமாங்கம் என்று நீக்கி, உகாரத்திற் பிறந்த ககாராதி விட்டுணுவங்கமான இருபத்தைந்தெழுத்தில் சூன்னுகிய ந ம என்ற இரண்டெழுத்தும் விட்டுணுவுக்குச் சிவனை நமக்காரம் பண்ணுதல் தொழிலாதலால் கூட்டி, அப்பால் விந்து நாதமாகிய மகரத்தில் தோன்றிய ருத்ராங்க, மயேசுராங்க, சதாசிவாங்கமான பத்தெழுத்தினுள் சிகார, வகார, யகாரங்களைக் கூட்டிச் சிவாயநம எனச் சுருதி கூறும். "பிரமா விட்டுணு முதலாயுள்ளார் நமக்கரிக்கைத் தேவனுயுள்ளான் நின்மலனுகிய சிவன்; அவன் பொருட்டு நமக்காரம்" என்பது சப்தார்த்தம்.

இது எளிய பொருளாயிருந்தாலும் யார்க்கும் தெரியாத பொருளாயிருக்கும். இவ்வைந்தெழுத்தும் தூல பஞ்சாக்கரம் நகாராதி யகாராந்தமாய் இருக்கும். அவையாவன :—

(1) சிவலிங்கத் திருவுருவுக்குக் கீழ்ப்பீடமும், நடுக் கண்டமும், மேற்பீடமும், கலவபத்திரமும், பூசாங்கமுமாகிய அகார உகார மகார விந்து நாதமாகிய நகாரமாதி ஐந்தும் நிற்கும்.

(2) முன்சொன்ன கீழ்ப்பீடம் பிரமாவைச் சேட்டிக்கும் பிரமசத்திக்கு அதிட்டானமாயும், நடுவிற் கண்டம் விட்டுணுவைச் சேட்டிக்கும் விட்டுணு சத்திக்கு அதிட்டானமாயும், மேற்பீடம் ருத்திரனைச் சேட்டிக்கும் ருத்திர சத்திக்கு அதிட்டானமாயும், கலவபத்திரம் மகேசுவரனைச்

சேட்டிக்கும் மகேச்சுர சத்திச்கு அதிட்டான மாயும், பூசாங்கம் விந்து நாதமாகிய கூட்டுற விற் சதாசிவமாகியும் தூலபஞ்சாக்கரம் நிற்கும்.

(3) பிரதிவியாதி 5. சத்தாதி 5. ஆக்கிராணுதி 5. உபத்தாதி 5. கடினகுணுதி 5. இவ்வைந்து கொத்தையும் முறையே சேட்டித்து நிற்கும்.

(4) பிருதிவியாதி ஐந்து தத்துவமிடமாகக் கட்டுப்பட்ட கன்மங்கட்கு நிவர்த்தியாதி ஐந்து கலைகளிடத்தும் அவை தொலையுமளவும் நகாராதி ஐந்தும் முறையே நின்று நடத்தும்.

(5) சுத்தவித்தையாதி ஐந்து தத்துவங்களையும் கொண்டு சாக்கிராதி ஐந்தவத்தைகளையும் தரிசிக்கும் போது அவ்வைந்திலே நின்று பதமுத்திகளைக் கொடுத்து நகராதி நின்று நடத்தும்.

(6) சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்கள், சத்தியோ சாதாதி ஐந்து திருமுகங்களிடமாகச் சேட்டிக்கவும் பஞ்ச சக்திகளை அதிட்டித்துக் கொண்டு முறையே நிற்கும்.

(7) கன்ம சாதாக்கிய முதல் ஐந்திலும் முறையே நிற்கும்.

(8) சத்தியோசாதாதி ஐந்து முகத்துவாரத்தினின்ற வியோமாத்திரம், பாசுபதாத்திரம், அகோராத்திரம், சுரிகாத்திரம், சிவாத்திரமாகிய ஐந்திலும் நிற்கும்.

(9) அநுசதாசிவரான போகாங்கங்களுக்கு மிருதியாதி ஐந்து பேரிடத்திலும் பிரபஞ்ச வநுக்கிரகத்தைப் பண்ணி நிற்கும்.

(10) வைகரி முதல் நான்கு வாக்கும் சுத்தமாயை இடமாக அக்கரம், பதம், மந்திரம், வேதம் முதலானவற்றை விவகரித்து நிற்கும்.

(11) சத்தியோசாதத்திற் சத்தி 8. வாமதேவத்தில் 10. அகோரத்தில் 8. தற்புருடத்தில் 4. ஈசானத்தில் 5. மரிசியாதி அட்டத்திலும் கலாசக்திகளைச் சேட்டித்து நிற்கும்.

(12) பிராணாதி ஐந்தும் தேகத்தில் ஓரோரிடங்களைப் பற்றி நிற்க, ஆக்ராணாதி ஐந்துகளிலே நின்று, கந்தாதி ஐந்துகளைக் கிரகிக்கத் தக்க தாக முறையே நிற்கும்.

(13) சுத்தவித்தையையும் ஈசுரர் கலையையும் சாதாக்கிய மார்க்கத்தையும் விந்து அசுத்த மாயையையும் நாதம் நியதி காலம் புருடனையும் எழுப்ப இவ்வைந்தையும் சேட்டித்து நிற்கும்.

(14) திரோதை தானே தானில்லை, மலமில்லை, சிவமில்லை, அருளில்லை, உயிரில்லை எனச் செய்து நிற்கும்.

(15) சிருட்டியாதி ஐந்து கிருத்தியங்களையும் நடாத்தும் நகாராதி தூலபஞ்சாக்கரம் இவ்வகையே பதினைந்து விதமாம். இவை விருக்கிற் பெருகும்.

## 2. சூக்கும பஞ்சாக்கரம்

(1) சிவானந்தத்தின் மேலீடாகிய கூத்து, பரையாகிய சிதம்பரமும், ஆனந்த சுகம் [1]தான் அனுபவித்து, இவைகளைத் தெரியாமல் நிற்பதும், ஆனந்தம் வளர்கைக்குத் தான் கெட்டுச் செல்லும்; இவ்வகை ஆனந்தத்தாண்டவமாய் நிற்பது சிகராதி ஐந்தும்.

(2) பரை தமருகம்; இச்சை வரதம்; ஞானம் அபயம்; கிரியை அக்கினி; ஆதி ஊன்றிய தாள். இவ்வாறு ஐந்து சக்தியும் அமைந்த தாகவே இருக்கும்.

1. (பி-ம்) தானற நின்று.

(3) வேதாந்த மகாவாக்கியமான தத்துவமசி என்னும் வாக்கியத்துள் தத் பதத்தில் சிகார வகாரமும், துவம் பதத்தில் யகார, நகார, மகாரமுமாகி நிற்கும்.

(4) தமருகை பரையால் உபதேச தீக்ஷையும், வரத வீசுகை இச்சையால் யோகதீக்ஷையும், அபய ஞானத்தால் பரிசதீக்ஷையும், வன்னியால் கிரியையான அவுத்திரதீக்ஷையும், ஸ்ரீபாத ஆதி சக்தியால் ஞானதீக்ஷையுமாக நிற்கும்.

(5) சருக்கரைபோல ருசித்த பிரபஞ்சம் கானற் சோறு போல அருவருத்து, எவ்விடமும் சிவநாட்டமே தோற்றமாக, பொருளுடன் கூடின ஐக்கியம் இரண்டறக் கண்டு, கண்ட ஐக்கியம் தோற்றமல் திரோதாயியையும், சிவானுபவ உதய மேலீட்டால் ஆணவத்தை யும் கீழிட்டுத் தான் பரையிடமாக நின்று வாழ்வதற் பிரபஞ்சமெல்லாம் சிகாரமாயும், தன்னுடைய தோற்றம் [தோத்திரவு] வகார மாயும் இரண்டற நின்று, கண்ட நிலையே தானாகவும், 'சிவமிது, அருளிது, நாமிது' என்று காணமல் நிறுத்தினது நகாரமாகவும், இவைகளெல்லாம் சிவானுபவ மேலீடாகவே வளர்தல் மகாரமாகவும் நிற்கும்.[1]

(6) சிவானுபவ உதயம், அனுபவத்தைப் பெறுதல், அனுபவம் ஒருவனை அழித்து உதயமாதல், அனுபவம் பிரிவாகத் தோற்றமற்றிருத்தல், சுகத்திலே மேலிடும் சிருட்டியாதி ஐந்துமாக நிற்கும்.

(7) சிவானுபவ உதயமாகிய சிகாரத்தால் தற்போத நட்டமாக, தன்னிலை அழியாத இவனுக்கு அனுபவத்தைக் கொடுப்பது வகாரமாகி அனு

1. யகரத்துக்கு விளக்கம் கொடுக்கப்படவில்லை.

பூதியாய், அந்தப் பொருளாய் நின்ற இவன் பெறுதி நிறையாமே நிற்பது (?) யகாரமாக வும், இவனுடைய தற்போக்கும் இவனுக்குத் தோற்றுததே நகாரமாகவும், அனுபவத்தைப் பண்ணுவிப்பதே மகாரமாகவும் நிற்கும்.

(8) சுகமும், சுத்தத் தோற்றமும், சுகத்துக்குச் சுக மில்லாமல் அனுபவிப்பானொருவனைக் காட்டு தலும், அனுபவிப்பானுக்குத் தோற்றுமல் நிறுத்தலும், சுகத்தின் மேலிடும், சிகாராதி ஐந்திலும் ஒரெழுத்துப் பொருளாய் நிற்கும.

(9) ஐந்து முதலையும் தரிசனப்படுகையிலே தெரியா மலேயாகி நின்ற நகாரத்தையும், மலப்போக் கிலே அது தோன்றுமல் நின்ற மகாரத்தை யும், சிவானுபவம் பெறுகையிலே அதுவாய் நின்ற சிகாரத்தையும், அருளிடமாகப் பெற் றேமென்ற நிலை நிகழாமல் நின்ற வகாரத் தையும், தான் நின்று அனுபவிக்கையிலே தான் சற்று நெகிழாமற்போன யகாரத்தை யும்—இப்படி நகராதியான தூலத்திலும் நிற்கும்.

(10) திரோதாயியையும் ஆணவத்தையும் கீழ்ப்படுத் தித் தான் சிவமாய் அருளிடமாக நிற்க, சிகாரம் மகாரத்தை அழிக்க, வகாரம் நகா ரத்தை அழிக்க, இவற்றில் போக்கு நிகழாமல் தான் சிவமாய் நிற்பது.

(11) அனுபவம் மேன்மேலும் வளரா நிற்பதும், அனுபவத்தை இவனுக்குக் கூட்டுவதும் ஒன் ருய்ப் போன போதிலும், பெருகாமலே இவ னுடைய குணமாதலால் ஒற்றர்களைப்போல மறைந்து நிற்கவும், முன்னின்ற மறைப்பை விலக்கிச் சிவானுபவத்தையும் பெறுவானையும் பிரித்துக் காணுமல் நிறுத்தியும் தான் கெடுகையிலும் நித்தம் கெடாத ஆணவத்தை யும் நடத்தி நிற்கும்.

(12) சத்தியத்தைத் தருவதாயும் தன்வர்க்கமாகியும் சிவத்துடனே ஒன்றுபடுகையிலே ஒன்ருகாமல், இரண்டாகாமல், உயிரெனப்பெயர் பெற்றும் பெத்தத்திற் பிரபஞ்சத்தைப் பொய்யாக்காமல் மெய்யாக்கி வந்து தான் முத்தியிற் குணங்கெட்டு நித்தம் குலையாமல் தான் குலைந்து நிற்கும்.

(13) சிகாரமாகிய சிவனுடைய பூரணத்திலே அருளும் ஆன்மாவும் திரோபவமும் மலமுமாகிய நாலெழுத்தும் பூரணமாய் நிற்க, இரண்டில் தோயா யகாரமாகிய ஆன்மாவுடனும் மகாரமாகிய மலத்துடனும் தோயாமல், வகாரமாகிய அருளையும். நகாரமாகிய திரோதாயியையும் தன்னெழுத்தாகக் கூடப் பெயரெழுத்தாய்ப் பிருதிவி முதல் நாதமீருகப் பஞ்சகிருத்தியம் நடத்தி, அவைகளுக்கப்பாற்பட்டு வேதாந்த வத்துவாய் நிற்பது அவ்வைந்தும்.

(14) சதாசிவ நாயனரின் ஈசானதி பஞ்ச முகங்களினும் இருபத்தெட்டு ஆகமங்களும்,—சத்தியோஜாதாதி நாலிலும் ஒவ்வொன்றுக்கும் ஐயைந்தும் ஈசானத்தில் எட்டுமாக 28உம்—ஐந்தே நடத்தும்.

(15) அனுபவத்தைத் தரும் அது ஒரு வகையாய் அமைவு பெருதாகியும், அனுபவத்தைக் கொடுப்பது ஒரு தன்மைத்தல்லவாகவும், அனுபவத்தையும் இவனையும் தெரியாமல் நிறுத்தல் ஒரு தன்மைத்தல்லவாருகவும், தான் கெட்டு மேன்மேலும் அனுபூதி விளைவித்துத் தற்கேடே நித்தமாகப் போவதொரு தன்மைத்தல்லவாகவும், இவ்வைந்து முறையே உபாதி சூனியம் பிறந்த விடத்திலே ஞானவான்கள் அனுபவிப்பதாக நிற்கும். இவை சிகாராதியாகவே காண்க.

இந்த சூட்சும பஞ்சாட்சரம் இன்னும் விரிக்கிற் பெருகும்.

## 3. பிரணவ பஞ்சாக்கரம்

பிரணவ பஞ்சாக்கரம் (1) முக்கலைப் பிரணவ பஞ்சாக்கர சடாக்கரமென்றும், (2) ஐங்கலைப் பிரணவ பஞ்சாக்கர சடாக்கரமென்றும் இரண்டு விதமாய்ப் பிரணவங்கூட்டி நகாராதி யகாராந்தமாக உச்சரிக்கப்படும்.

முக்கலையாவது, அகாரம், உகாரம், மகாரம்.

ஐங்கலையாவது, இவற்றுடன் விந்து, நாதம் கூடல்.

அவை கூட்டிக் கிரியைகளுக்குத் தக்கதாக மாத்திரை ஏற்றக்குறைச்சலாக உச்சரிப்பது.

கிரியைகளாவன :—

இயமம், நியமம், பிராணயாமம், பிரத்யாகாரம், ஆசனம், தாரணை, தியானம், சமாதி என்ற அட்டாங்க யோகம்; அணிமா, மகிமா, கரிமா, லகிமா, ஈசித்துவம், வசித்துவம், பிராப்தி, பிராகாமியம் என்னும் அட்டமாசித்தி ; ஆகருடணம், உச்சாடனம், தம்பனம், மோகனம், வசிதை, சிந்திதம், இட்டம், நிராசை என்னும் அட்டவித்தை. இவை முதலான கிரியைகளுக்கெல்லாம் உபயோகமாய்ச் சகல மதங்களுக்கும் பிரயோசனமாய், சகல தந்திர யந்திரங்களுக்கெல்லாம் உபயோகமாய் இருக்கும். இவற்றை விரிக்கிற் பெருகும்.

## 4. பிரசாத பஞ்சாக்கரம்

பிரசாத பஞ்சாக்கரமாவது, (1) துவாதச கலாப் பிரசாத பஞ்சாட்சர அட்டாட்சரமென்றும், (2) சோடசகலாப் பிரசாத பஞ்சாட்சர அட்டாட்சரமென்றும் இரண்டு விதமாயிருக்கும்.

அட்டாட்சர உச்சாரணம் எப்படியென்னில் ஐங்கலைப் பிரணவம், இருதய பீசம், சோடசகலாப்பிரசாதம் என்ற மூன்றுங் கூட்டிச் சிகாராதி மகாரம் ஈறாக உச்சரிப்பது.

[1]சோடசகலைகளாவன :—

மேதாகலை, அர்க்கீசகலை, விஷகலை, விந்துகலை, அர்த்தசந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, வியாபினிகலை, வியோமரூபிணிகலை, அநந்தை கலை, அநாதைகலை, அநாசிருதகலை, சமனுகலை, உன்மனு கலை என்ற பதினாறும் சோடசகலைகள். இவற்றில் வியோம ரூபிணிகலை முதல் நான்கு கலைகளும் இன்றியிருப்பது துவாதசகலாப்பிரசாதம்.

இக்கலைகளுக்குக் குணங்களும் அத்துவாக்களும் அடங்கி நிற்கும் விபரம்.

**மேதாகலை :—**

| | |
|---|---|
| இடம் : | நாபி முதல் இருதய பரியந்தம் |
| அங்குலம் : | 12 |
| அடையாளம் : | அகாரம் |
| மாத்திரை : | 3 |
| காந்தி : | அக்னிப்பிரபை |
| அதிதேவதை : | பிரமா |
| கலை : | நிவர்த்திகலை |
| தத்துவம் : | பிருதிவி முதல் பிரகிருதி பரியந்தம் 24 |
| புவனம் : | 164 |
| அட்சரம் : | 1 |
| பதம் : | 28 |
| மந்திரம் : | சத்தியோஜாதம், ஹிருதயம் |

**அர்க்கீசகலை :—**

| | |
|---|---|
| இடம் : | இருதயம் முதல் கண்ட பரியந்தம் |
| அங்குலம் : | 7 |
| அடையாளம் : | உகாரம் |
| மாத்திரை : | 2 |

1. சிவஞானபாடியம் சூ. 2 அதி. 4 ஐப் பார்க்க.

| | |
|---|---|
| காந்தி : | சந்திர சூரியப்பிரபை |
| அதிதேவதை : | திருமால் |
| கலே : | பிரதிட்டை |
| தத்துவம் : | காலம் முதல் 6 |
| புவனம் : | 19 |
| வர்ணம் : | அகாராதி 23 |
| பதம் : | 21 |
| மந்திரம் : | வாம தேவம், சிரசு |

**விஷகலே :—**

| | |
|---|---|
| இடம் : | கண்டம் முதல் தாலு பரியந்தம் |
| வடிவு : | மகாரம் |
| அங்குலம் : | 4 |
| காந்தி : | மின்னொளி |
| மாத்திரை : | 1 |
| அதிதேவதை : | ருத்திரன் |
| கலே : | வித்தியாகலே |
| தத்துவம் : | மாயை 1 |
| புவனம் : | 8 |
| அட்சரம் : | 7 |
| பதம் : | 20 |
| மந்திரம் : | அகோரசிகை 2 |

இக்கலே முடிவில் ஒரு சூனியம்.

**விந்துகலே :—**

| | |
|---|---|
| இடம் : | தாலு மூலம் தொடுத்துப் புருவ நடு பரியந்தம் |
| அங்குலம் : | 1 |
| வடிவு : | வட்டம் |
| மாத்திரை : | 1 |
| காந்தி : | விளக்கொளி |
| அதிதேவதை : | மகேசுவரன் |
| கலே : | சாந்திகலே |
| தத்துவம் : | சுத்தவித்தை |

| | |
|---|---|
| ஈசுவரம் : | 2 |
| புவனம் : | 17 |
| அட்சரம் : | ககாராதி 3 |
| பதம் : | 11 |
| மந்திரம் : | தத்புருட கவசம் 2 |

அர்த்தசந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை இந்நான்கிற்கும் இடம் புருவநடு முதல் பிரமரந்தரம் வரை. அங்குலம் ஒவ்வொன்றுக்கும் மும்மூன்ருக நான்கு கலைகளுக்கும் 12. அடையாளம் முறையே பாதிப்பிறை, முக்கோணம், இரண்டு புறத்துப் புள்ளியுடைய கலப்பை. வலப்புறத்துப் புள்ளியுடைய கலப்பை. மாத்திரை : [1]1/4, 1/8, 1/16, 1/32. (?). காந்தி சந்திரப்பிரகாசம், புகைநிறம், மாணிக்க நிறம், மின்னொளி. நான்குக்கும் அதிதேவதை சதாசிவம். கலை சாந்தியாதீதிகலை. தத்துவம் சதாசிவம், சத்திசிவம் 3. புவனம் 16. அட்சரம் அகாரம் முதல் 16. பதம் 1. மந்திரம் ஈசான நேத்திரவத்திரம் 3.

இந்த நான்குக்குள் நிரோதி முடிவில் ஒரு சூனியம்.

சக்தி, வியாபினி, சமனை, உன்மனை இந்நான்குக்கும் இடம் பிரமரந்திரம் முதல் துவாதசாந்தம் வரை. சத்தி கலைக்கு அங்குலம் 1. அடையாளம் இடப் புறத்துப் புள்ளியுடைய கலப்பை. மாத்திரை [2](5/8). காந்தி நூறு சூரியப் பிரபை. இதன் முடிவில் ஒரு சூனியம். வியாபினிகலைக்கு அங்குலம் 3. அடையாளம் வலப்புறத்துப் புள்ளியுடைய திரிசூலம். [3]மாத்திரை ஙகிளு (?) காந்தி ஆயிரம் சூரியப் பிரகாசம். இதன் முடிவில் ஒரு சூனியம்.

சமனுகலை :—

| | |
|---|---|
| அங்குலம் : | 4 |
| அடையாளம் : | இரண்டு புறத்துப் புள்ளி யுடைய சூசி |

1. ஏட்டில் மாத்திரைக்குரிய எழுத்துக்கள் விளங்கவில்லை. அவை ஒருவாறு 1/4, 1/8, 1/16, 1/32 ஐக் குறிக்குமென்று கருதப்பட்டன.
2. ஷை 5/8
3. (?)

மாத்திரை : ஹறகீவ ?
காந்தி : கோடி சூரியப்பிரகாசம்

இதன் முடிவில் ஒரு சூனியம்.

**உன்மனுகலை :—**

அங்குலம் : 4
அடையாளம் : இரண்டு புறத்துப் புள்ளியுடைய சூளிகை
மாத்திரை : மனேமாத்திரை
காந்தி : அனந்த சூரியப்பிரகாசம்

இதன் முடிவில் ஒரு சூனியம்.

இந்த நான்கு கலைகளுக்கும் அதிதேவதை பரசிவன்.

வியோமரூபாதி நான்கு கலைகளுக்கும் வேறே காரியங்களில்லை. வடிவு விந்துநான்குக்கும் ஒக்கும். மற்றவை முன் சொன்னபடியாம்.

இப்படிப்பட்ட பிராசாத பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கில் கிரியா யோக அனுட்டானம் சித்திக்கும்.

## 5. முத்தி பஞ்சாக்கரம்

முத்தி பஞ்சாக்கரமாவது :—

பிராசாதமான சுத்தாசுத்த மாயையெல்லாம் கடந்து, அருளாய் நின்று, மலதிரோதானம் நீங்கி, சிகாராதி ஐந்தையும் ஒன்ருக எண்ணுமல், உச்சரியாமல், நினையாமல், மறவாமல், உற்றுப் பாராமல், செபியாமல் செபிப்பது. ஞானசாரியர் உபதேச உண்மையான சுத்தம் என்ற முத்தி பஞ்சாக்கரம். இவை ஞான நிட்டை சித்திக்கும். என்று, இப்படிப் பஞ்சாக்கரத்தின் விரிவு.

இவற்றில், திரோதான மலமொழிந்து, சிவம் சத்தி இரண்டையும் கீழிட்டுத் தான் மேலாகத் தலைமை பெற்று நின்ற அவசரம் சாக்கிரம்.

தான் கீழிட்டுச் சிவத்தை அடக்கி அருளாய் நின்ற அவசரம் சொப்பனம்.

அருள் மேலிட்டுச் சிவம் தோன்ருமல் அருள் தொழிலைப் பெறலாம் என்று நின்ற அவசரம் சுழுத்தி.

தான் அற்று, அருளாய் நின்று, சிவத்தைப் பார்த்தவிடம் துரியம்.

அருளே தானய் நின்ற தன்மை நீங்கிச் சிவத்தில் ஒன்ருய் ஆனந்தத்தைப் பெறல் துரியாதீதம்.

இவ்வாறு சுத்த பஞ்சாக்கர சுத்தாவத்தை அனுபூதி. இவைக்கு வேதத்தில், நாயன்மார் திருவாக்குக்கள் அனந்தமும் முதன் மொழியில் இருப்பதாலும், அவைகளில் அன்பான அனுபூதியெனக் காண்பதாக எடுத்துக்காட்டல் :—

திருச்சிற்றம்பலம்.

படைக்கல மாகவுன் னமத் தெழுத்தஞ்சு நாவிற் [கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக் காட்செய் [கின்றேன்
துடைக்கினும் போகேன் ருெழுது வணங்கித்தூ [நீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம் [பலத்தானே.

திருச்சிற்றம்பலம்.

(திருநாவுக்கரசு. 4 : 81 : 8)

இதன் பதவனுபூதி :—

படைக்கலமாக (எ - து) அநாதி கேவலமாகிய ஆணவாதி பஞ்சபாசங்களுடைய காரிய காரணத்தை வென்று, சிவப்பிரகாசத்தைப் பெறும்படி ஞான வாளாக,

உன் நாமத்து எழுத்து அஞ்சும் (எ - து) சிவசொரூபமே பஞ்சாக்கர வடிவாகப்பாசச் [1]சேதனமான சுபாவ நாமத்தை,

நாவிற் கொண்டேன் (எ - து) நாதம் விந்து வெளிப்படும் வாக்கு மூலமாகிய நாவில் வைத்து,

இடைக்கலமல்லேன் (எ - து) நடுநடுவே கைவிடாமல் இற்றைவரை ஆண்டு, தள்ளினும், தள்ளப்படாத பரிபூரணத்தில் அழுத்தினுய்.

எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன் (எ - து) எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி பேதங்களிலும் பரிபாகப்படுத்தும்படிக்கு எழுவகைத் தோற்றத்திலும் தனுகரணபுவன போகங்களைப் பரிபாக வண்ணமாம்படி அருளியும் அவையெல்லாம் தமதடிமையாக்கி,

துடைக்கிலும் போகேன் (எ - து) தள்ளினும் தள்ளப்படாத பரிபூரணத்திலே யான் விழும்படி அழுத்தி,

தொழுது வணங்கி (எ - து) இப்போது கொடுத்த பேரின்ப சுகத்தைப் பெறுதற்கேற்ற தேகாதிகளை யுதவி, அத்தேகாதி கரணங்களெல்லாம் சிவ வடிவன்றி வேறில்லை யென்னும்படி, அண்ணலார் தமக்களித்த மெய்ஞ் ஞானமேயான அம்பலமும் தம்முள் நின்ற ஞானத்து எழும் ஒரு பெருந்தனிக் கூத்தைக் கண் இன்புறக் கண்டு கும்பிட்டெழும் களிப்புடன் வணங்கி,

தூநீறணிந்து (எ - து) சுத்தமாகிய விபூதி தாரணுதி பஞ்சப்பிரம சங்க சுத்த பஞ்சாக்கர நியாச வாழ்வுடன்,

அடைக்கலங்கண்டாய் அணிதில்லைச் சிற்றம்பலத் தானே (எ - து) அடைக்கலமாகக் குஞ்சித பாதத்தின் கீழ் அபேதவத்துவிதமாகச் சபாநாதர் வைத்திருப்பதெனக் காண்க.

---

1. சேதனமான - வெட்டுவதான.

[1]ஞானபூசை

முன்னருளிய முத்தி பஞ்சாக்கர அனுபவ ஞான பூசை யாவன :—

தானழியப் பெற்ற சுகாதீத நிலையாகிய ஆனந்த வனந்தலைப் பரையிலே விழித்து, அப்பரையாகிய வெளியிலே தன்னைத் தன்னாலும் பிறராலும் காணு வண்ணம் தற்போக்கை உடையராய் அருள்மேலிட்டு மலத்திரயங்களை ஒழிப்பது சௌசமாகவும், வாதனை போதம் ஒழியவே மல நானமாகவும், சிவானுபூதியின் மூழ்கி அமிழ்ந்ததே விதிநான மாகவும், பரையுடைய நிலையே தனக்குத் தனுவாகக் கற்ப நீருகியதே பற்பநானமாகவும், தன்னுடைய இச்சா ஞானக் கிரியை சிவனுடைய இச்சா ஞான கிரியையில் அழிவதே அத்திர சலமாகப் புரோட்சணம் பண்ணி நம வான திரோ பவத்தையும் மலத்தையும் போக்குவதே தீர்த்த மூர்த்தி பண்ணுவதாகவும், தத்துவத்திரயங்களாகிய முப்பத்தாறில்— பிருதிவி முதல் ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும், மாயை முதலான கலாதத்துவம் ஏழும், சுத்தவித்தை முதல் சிவ தத்துவம் ஐந்தும்—இந்த முப்பத்தாறும் சுற்றிவரத் தக்க தாக இந்தப் பெத்தமாகிய தத்துவக்கட்டைச் சுத்த பஞ் சாக்கரத்தால் ஆசமனம் செய்து, பிரணவத்தால் பிராணு யாமஞ் செய்து, தற்போக்கும் சிவ உதயமுமாகிய ரேசக பூரகஞ்செய்து, பிரணவமாய் அதற்கதீதமாகிய சிவத்தை இரண்டறக் கலப்பது கும்பகமாகவும், ஐவகை அத்திரங்களுக் கும் ஆதாரமான இச்சா ஞானக்கிரியைகளைக் கொண்டு பஞ்சாக்கரத்தில் தரிசித்த முறையே கரசுத்தி பண்ணி, ஈசா

---

1. ஞான பூசை :

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞானவி ளக்கினை யேற்றி நன்புலத்
தேனைவ ழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆனகெ டுப்பன வஞ்செ ழுத்துமே.

(திருஞான. திருமுறை 3. பஞ்சாக்கரப்பதிகம் 3)

அப்பர் சுவாமிகள் பாடல்களான 4.76.4; 4:15:11 ஐயும் பார்க்க.

ஞதியும் அங்கங்களில் நின்றருளும் பெத்த பஞ்சாக்கரத்தில் நின்ற முறைமையைச் சுத்த பஞ்சாக்கரமாக மாறிக் கரநியாச அங்கநியாசங்களைச் செய்து, காலங் கடந்த பஞ்சாச்கர நிலையைச் சந்நிகளாகத் தியானித்து, மூன்று காலங்களில் நின்ற சந்தி தேவதைகளன்றியே போக்கு வரவற்றுப் பூரணமாய் நின்ற பரையாகிய சிவசத்தியே ஏக சத்தியாக, சாட்சியாக நினைந்து, எப்பொழுதும் ஒரு காலமாகத் தியானங்கள் செய்து அங்கநியாச [1]நியசித்து, பஞ்சாக்கரமாகிய அங்கையிலே ஐவிரல் ஐந்தெழுத்தாகிய கும்பகலசத்தால் கும்பாபிஷேகம் பண்ணிக் கொண்டு, திரோபவ மறைப்பாகிய நகாரத்தை ஒழித்து, அருளிலே நிற்பது ஆசமனமாகவும், சனன ஏதுவான ஆணவத்தைச் சிவ உதயத்தாற் கெடுத்து நிற்பது அகமருடணமாகவும், சய தருண மண்டலமாகிய பரையிலே உதயமாயுள்ள சிவனுக்கு அர்க்கியாஞ்சலியாகத் தான் கீழ்ப்பட்டுச் சிவன் மேற்பட்டு நிற்பது சிவனுக்கு அர்க்கியங் கொடுக்கும் முறையாகவும், தூல தேகமும் சூக்கும தேகமும் மந்திர தேகமும் அற, ஞானமே வடிவாய்ச் சகளீகரணஞ் செய்து சிவார்ச்சனை செய்வான் பிரணவத்திற் பெத்த பஞ்சாக்கரம் மாறி, முத்தி பஞ்சாக்கரம் நின்ற முறைமையே அர்க்கியம் கற்பித்து, அந்த ஞான சலத்தால் எவ்விடமும் புரோட்சித்து, பிருதிவி முதல் நாதம் ஈருகப் பஞ்சாக்கரத்துள் அடங்கி நின்ற நிலையைத் தானமாக்கி, இந்தத் தத்துவங்களை நாட்டிக் கழற்றியே துவாரத்திற் பிரவேசிப்பதாக நினைந்து பிரேவிசிப்பானுய்ப் பரையாகிய துவாரத்திற் புகுந்து, திரோபவமும் மலமுமாகிய விக்கினங்களைப் போக்கி, மோட்ச வாயிலைத் தந்த பரையாகிய வாயிலுள் இச்சா ஞானகிரியா சத்திகளை வழிபட்டு, நகார மகாரமாகிய திரோபவத்தையும் ஆணவத்தையும் பிரியாத வாத்துபதிக்கெட்டாத ஞானபூமியாகிய வாத்துபதியை அர்ச்சித்து, சிவாகமம் இருபத்தெட்டையும் ஈசாஞதி பஞ்ச முகங்களிலும் அருளிச் செய்யப்பட்டுச் சிகார முதல் சூக்கும பஞ்சாக்கரத்தை அனுக்கிரகித்த அநாதி குருவாகிய சதாசிவமூர்த்தியைச் சுத்த பஞ்சாக்கரத்தால் அருச்சித்து, நிவர்த்தியாதி பஞ்சகலை

---

1. ந்யசித்து = நிசித்து = பண்ணி.

களில் சஞ்சித கன்மங்களைச் சுத்த பஞ்சாக்கரங்களால் தகித்துப் பூதசுத்தி பண்ணி, முன்சொன்ன பஞ்சாக்கரமான திருக்கூத்திலே இரண்டற நிற்பதே அந்தரியாகமாகவும், சுத்த பஞ்சாக்கரத்தில் முதலெழுத்தான சிகாரமாள அனுபூதி யிலே திருக்கூத்தாகக் கண்டு பூசை செய்வதே அந்தரியாகப் பூசையாக்கிப் பூசையாகச் சுத்த பஞ்சாக்கரத்தால் விசேடார்க் கியம் கற்பித்து, பிரபஞ்சம் முழுதும் சுத்த பஞ்சாக்கரமாகக் காண்பது திருவியசுத்தி. ஆனந்த முதலாகிய சிவனை இரண் டாம் எழுத்தாகிய அருள் ஏவல் செய, ஆனந்தியாகிய ஆன்மா இரண்டற ஐக்கியம் பிறப்பதே சிவபூசையாக நகார மகாரங்களாகிய விக்கினங்களைக் கெடுத்தொழியாத ஐக்கியமாகிய சிவோகம்பாவனையே ஆன்மசுத்தி. பதினைந்து வகையாகிய தூலபஞ்சாக்கரத்தைப் பதினைந்து வகையாகிய சூட்சும பஞ்சாக்கரத்தின் பொருளாகவே வேறு பாடற உணர்ந்து, நாவாற் சொல்லாமல் அறிவால் பஞ்சாக்கரத்தை அனுபவிப்பதே மந்திரசுத்தி. நில்லா நிலையாக நின்று ஒரு பாதியுமற்று நின்மலனாய், சுகசுரூபியாய் உள்ள சிவனென வடிவு ஒழித்தற்பொருட்டு வடிவாகிப் பஞ்ச கிருத்தியத்தைப் பண்ணின னிவனுக்கிந்த பஞ்ச கிருத்தியமே நிர்மாலிய மென்று பரியுஷித பூசையாகச் சிவனுடன் ஐக்கியம் பண்ணி நிர்மாலியத்தை நீக்கி, அவன் பரையிடத்தே நம்மை வைத்து அனுபோகத்தைத் தருவதே நகார மகா ரங்களுக்குக் கேடாவதாய லிங்கசுத்தி. இவ்வாறு லிங்கசுத்தி செய்து சுத்த பஞ்சாக்கரத்தால் பஞ்சகவ்யம், பஞ்சாம்ருதம் இவற்றையும் தன்னழிவே திருமஞ்சனமாகச் செய்து, பிரபஞ்சவாதனை தனக்குக் கெடத் திருவொற்றுடை சாத்தி, யகாரமாகிய ஆன்மாவிலே சிவாதனமாக எழுந்தருளப் பண்ணி ஆதார சத்தி முதலாக நாதமீறாகக் கீழ்ப்படுத்தின ஆன்மாசனமாகிய பஞ்சாக்கரத்தின் அனுசந்தானத் துடனே நிற்கின்ற தான் இவை யாவையும் கண்டு சேட மென்று நீக்கித் தன்னிடத்தின் உதயமாகிய ஞானத்தைச் சிவமூர்த்தியாகக் கற்பித்து, முன் எழுத்தாகிய சிகாரமாகிய ஆனந்தத்தை மூலமாக எவ்விடமும் பரிபூரணமாக இரண் டறக் காண்பதே ஆவாகனமாகத் தியானித்து, அவனுடைய

நித்தியத்தையும், தனக்கு இலாபமாக நின்று தன்னையும் பரத்தையும் தன்னுடனே இரண்டற ஐக்கியத்தையும் தாபனம், சன்னிதானம், சன்னிவிரோதனமாகவும் செய்து, தன்னையே சுகந்த புஷ்ப அத்திர ஆபரணமாகவும் பஞ்சாட்சரத்தாலே கொடுத்து, ஆன்ம நிவேதனமே நைவேத்தியமும் பானீயமும் தாம்பூலமுமாக நிவேதித்து, அருளாகிய முகவாசக வுண்டையால் திருவாய்மாற்றி, சிகார வகார யகாரமான மணியால் நகார மகாரமான தூபதீபங்களைச் செய்து, சிவனுடைய பூரணத்தில் நிறைவு திருவாலாத்தி, பரை திருநீற்றுக் காப்பு, ஆன்மாவிடத்துச் சிவவுதயம் திருக்கண்ணாடி, சிவத்தோற்ற மொழியப் பிரபஞ்ச மறைப்பு திருக்கொற்றக்குடை, பாசச்சேதனம் திருவெண்சாமரம் திருவாலவட்டமாகச் செய்து, ஆன்மபாரம் கெடத் திருவடியிலே ஐக்கியம் பண்ணுதல் பாத்யமாகவும், பராசக்தி நிலையே ஆசமனமாகவும் சுகசொரூபமே அர்க்கியமாகவும் கொடுத்து, நகார மகாரங் கெட நமக்காரம் செய்து, நூறு நூறாயிரம் உருவாகவே பஞ்சாட்சரத்தைச் செபித்து, செபத்தையும் தன்னையும் சிவனுக்குக் கொடுத்துப் பிரதக்கண நமக்காரம் செய்து, விந்து நாதமாகிய அக்கினி குண்டத்துப் பரையாகிய அக்கினி குண்டலியிலே தற்போக்காகிய அழிவே சிவனுக்கு ஆகுதியாகச் சுத்த பஞ்சாட்சரத்தால் செய்து, ஓமபலத்தைச் சிவனுக்கு நிவேதித்து, தானற நிற்றலே திருப்பவித்திரமாகச் செய்து, அட்ட புட்பம் சாத்தி நமக்கரித்துப் பூரணமாய்ப் போக்குவரவற்றுச் சுத்த பஞ்சாட்சரத்தாலே சிவனை மூர்த்தி பண்ணிப் பத்தியினால் உள்ளமுருகி ஞானசாரியனை நமக்கரித்து அர்ச்சிப்பது ஞானபூசை யெனக் காண்க.

இவைக்குச் சுருதி :—

**வேதத்தில்,**

சித்தம் தெளிவீர் காளத்த னாரூரைப்
பத்தி மலர்தூவ முத்தியா கும்மே.

(ஞானசம். திருஆரூர். திருவிருக்குறள் 1)

என்றும்,

ஞானத் தாற்றொழு வார்சில ஞானிகள்
ஞானத் தாற்றொழு வேனுனை நானலேன்
ஞானத் தாற்றொழு வார்க[1] டமைக்கண்டு
ஞானத் தாவுனை நானுந் தொழுவனே.

(திருநாவுக். பொது. தனித்திருக்குறுந்தொகை 3)

என்றும்,

ஞானந்தன்னை நல்கிய [2]நன்மை.

(கீர்த்தித்திருவகவல் 74)

என்றும்,

உடம்பெனு மனையகத்து வுள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா [3]லெரியெழ விருந்துநோக்கில்
கடம்பமர் காளைதாதை [4]கழலிணை காணலாமே.

(திருநாவுக். திருமுறை 4 பொது. தனித்திருநேரிசை 4)

என்றும்,

காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டிப்
பூசனை யீசனுர்க்குப் போற்றவிக் காட்டினோமே.

(திருநாவுக். 4 திருமுறை பொது.)

என்றும்,

சிவாகமத்தில்,

மறவாமை யாலமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
உறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத [5]வின்பயன்பெனு மஞ்சன மாட்டி
அறவாணர்க் [6]கன்பெனு மமுதர்ச்சனையே செய்தார்.

(பெரிய. வாயிலார் 8)

என்றும்,

---

(பி - ம்) 1. டொழக்கண்டு. 2. பரிசு. 3. லெரிகொள. 4. கழலடி. 5. ஆனந்தமெனும். 6. கன்பென்னும் அமுதமைத் தர்ச்சனை.

வாதுளாகமத்தில்,

நிறைந்துயிர்க் குணர்வாய் நின்ற நிலையுறில் ஞானபூசை
உறைந்த தோரளிய தாகி யொடுங்கிடில் யோகபூசை
அறைந்தவை மூர்த்தி சேர்க்கி லந்தரி யாகபூசை
புறந்திக ழிலக்கில் மூன்றும் பெறிற்புறப் பூசையாமே.

என்றும்,

புராணத்தில்,

அன்பூ டுருகப் பணிவா ரிலரே
லருளா யெனும்வாய் மையறிந்துவிடா
என்பூ சையு நேசமும் யானுமுனக் கெங்கே.

(கோயிற்புராணம் : வியாக்ரபாத : 18)

என்றும்,

சாத்திரத்தில்,

இறைவனடி [1]பூசித்த லெழில்ஞா னபூசை

(சிவஞானசித். 7-ஆம். சூத் 23)

என்றும்,

மண்முதற் கரண மெல்லா மறுவசத் தாக்கி ஞானக்
கண்ணினு லூன்றி யாவுங் கருத்தினு லெவையு நோக்கி
எண்ணியஞ் செழுத்து மாறி [2]யிறையரு ளுருவாய் நிற்கில்
புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே.

(சிவப்பிர. 11 சூ. 5)

என்றும்,

[3]பாவனை வேண்டா வாண்ட பானருள் பற்றினோர்க்கே.

(சிவப். 10 சூ. 7)

என்றும் கூறியுள்ளமை காண்க.

---

(பி - ம்) 1. இறைவனடி யடைவிக்கு மெழின்ஞான பூசை.
2. யிறைநிறை யுணர்ந்து போற்றல்.
3. பாவிக்க.

## (2) உயிரிற் பிரிவில்லான்

என்பதற்குச் சுருதி.

திருச்சிற்றம்பலம்.

கூற்ரு யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்ரு யடிக்கே யிரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்
தோற்ரு தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

திருச்சிற்றம்பலம்.

(திருநாவுக் : 1 ப : 1 : 1)

இதன் கருத்துரை :—

பரமசிவன் சுத்தான்மாக்களுக்குக் கேவல சகல சுத்தப் படுத்துகிற கிரமமும், பெருங்கருணையும், பூர்வத்திலிருந்து வந்த கிரமமும், ஆன்மாக்களுக்குச் சுதந்தர ஈனமும், திருவடி நீங்காமையும் கூறியதெனக் காண்க.

பதவுரை :

கூற்ருயினவாறு விலக்ககலீர் (எ - து) இப்படி வார்த்தையான முறைமையை விலக்கி அனுக்கிரகம் பண்ண வேண்டும் ;

'எப்படி விலக்குகிறது, செய்த பிழை அநேகமாக இருக்க ?' என்னில்,

கொடுமை பல செய்தன நானறியேன் (எ - து) முன்பு செய்த பிழை அநேகங்களையும் நான் அறிந்ததில்லையே.

'அறியாவிட்டால் தீர்ப்பது எதனுல் ?' என்னில்,

ஏற்ருயடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும் (எ - து) 'எக்காலமும்

ஏற்றமாகிய திருவடியிலே இரவும் பகலும் பிரியாது வணங்கிக் கிடத்தலினால்'

'இதற்குச் செய்ய வேண்டுவது என்?' எனில்.

தோற்றாது என் வயிற்றின் அகம்படியே குடரொடு துடக்கி முடக்கியிட ஆற்றேன் (எ - து) வெளியிலே தோன்றாமல் வயிற்றுக் குடலுக்குள்ளே பாவமுறைமையினாலே வருத்தி முடக்கிக் கிடக்கும் வருத்தம் இனிமேல் பொறுக்க மாட்டேன்.

அதிகைக் கெடில வீரட்டானத் துறை அம்மானே (எ - து) திருவதிகைப்பதியில் கெடிலநதி வடகரையின்கண் வீரட்டானத்தில் எழுந்தருளியிருக்கும் கர்த்தாவே எனக் காண்க.

அகலவுரை :

கூற்றென்பது வார்த்தையான முறைமை. அஃது என்னென்றால், ஆன்மாக்கள் கேவலத்தில் ஒடுங்கிக் கிடக்கவும், மறுபடி முன்புபோலப் பக்குவத்துக்குத் தக்கதாகச் சகலப்படுத்துகிறபோது நால்வகைத் தோற்றத்திலும் எழுவகைப் பிறப்பிலும் எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி பேதங்களிலும் மாறி மாறி வரவும், அந்தச் சகலத்திலே கேவல சகலப்படவும் நடக்குமென்கிற வார்த்தையை வராமல் விலக்கிச் சுத்தப்படுத்த வேண்டுமென்று விண்ணப்பம் செய்யுமிடத்து ஆசாரியரான நாதன் சொல்லுகிற உத்தரம் :—

"கேவல சகலங்களுக்கெல்லாம் நாம் கருவி கொடுத்திருக்க அக்கருவிகளை 'யான் எனது' என்று தன்னதாக்கிப் பல கொடுமைப் பழிகளைச் செய்தபடியினாலே"

அந்த வார்த்தையை விலக்குகிறது எப்படி? யென்னில், 'கொடுமை பல செய்தன நானறியேன்' என்றது; 'அப்படிக் கருவிகளை எடுத்துக் கொண்டதும், 'யான் எனது' என்று அகந்தை யுற்றதும், பல பழிகளைச் செய்த

தும் நான் செய்ததுமல்ல ; அவை வந்து கூடினவையுமல்ல ; எனக்கென்ன சுதந்தரமுள்ளது ? '

' ஆனுல் நீ எப்படி யிருந்தாய் ?' என்னில், " ஏற்று யடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவம் எப்பொழுதும் "—" தேவரீருடைய திருவடியான திருவருள் எல்லாவற்றிற்கும் மேலாய பரிபூரண வியாபகமாக இருப்பதிலே வியாப்பியமாக எக்காலும் வணங்கிக் கிடந்தேன்."

'இப்போது உனக்கு உபாதி வருத்தம் ஏது?' என்னில்,

" தோற்றுதென் வயிற்றின் அகம்படியே குடரொடு துடக்கி முடக்கியிட " (எ - து) எனக்கும் கருவிகளுக்கும் சுதந்திரமில்லாமல், தேவரே கேவல சகலங்களில் பிரேரகம் பண்ணி இருக்க வருத்தம் வந்தவாறு ஆணவ மலத்தினுல் என்பது நியாயமாமே ; அந்த ஆணவ மல முறைப்படிக்குத் தன்னையும் தோன்றுமல், என்னையும் தோன்றுமல் தேகமே நானென்னும்படி செய்து அத்தேகத்தில் வந்த பிணி எனக்கு வந்ததாக வயிற்றில் சூலையாகவும் அதனுல் வருத்தப்படவும் இனிமேல் ஆற்றேன். ஆகையால் அவ் ஆணவ மலம் நீங்கும்படி அனுக்ரகிக்க வேண்டும்.

' அதற்கு நமக்கென்ன கருவி யிருக்கிறது ? ' என்னில்,

திருவதிகையாகிற ஔஷதமும், கெடிலமாகிற மந்திரமும், அதிலெழுந்தருளியிருக்கிற அம்மானை மணியும், மிக்கதான உபாதியறிந்து தீர்க்கும் வைத்தியனும் கருணைக் கடலுமாயிருக்கையால், அடியேனுக்கினிமேற் குறையென்ன ? தரிசனமானதே பிணி தீர்ந்தது.

எனக் கொள்க.

நுட்ப உரை :

இவையும் ஐந்து அவசரமாகவே இருக்கும். அவை யாவன :—

'கூற்ருயினவாறு விலக்ககிலீர்' என்றது சிருட்டிக் கிரமம். 'கொடுமை பல செய்தன நானறியேன்' என்றது திதிக்கிரமம். 'ஏற்ருயடிக்கே' என்றது சங்காரக்கிரமம். 'இரவும் பகலும்' என்றது 'திரோபவகிரமம்'. 'வணங்குவன் எப்பொழுதும்' என்றது அனுக்ரக முறைமை.

இந்தக் கிரமத்திலே முன் அருளிய 'தோடுடைய செவியன்' என்றதன் பதவி யாக்கியானமும் இவற்றில் அடங்குமெனக் கொள்க.

எச்ச உரை :

'நான்கு நாயன்மார்களுக்கும் திருமேனி வந்த கிரமமும் பூர்வத் தொடர்ச்சிகளும் குறிப்பாய் விளங்கி யிருக்குமே; இங்கு அவை குறிப்பாய் விளங்கினமை காணேமே' என்னில், அவை யாவும் 'கூற்ருயினவாறில்' அடங்கியுள்ளன. அஃதெப்படி என்னில், இராவணனுக்கு உபதேசம் பண்ணின வார்த்தையினுல் வந்த வருத்தமென அறிக. வினுவும் விடையுமாக வருதலால் இவை எச்சவுரை.

சம்பிரதாய உரை :

பெரியோர்கள் வாக்கினுள் வரும் முதல் மொழிகளெல்லாம் பஞ்சாட்சரமாகவே இருக்கும்; அவையும் சிவவாக்கிய வேத பஞ்சாக்கர வேதப் பொருளாகவே இருக்கும் எனக் கொள்க.

## 3. ஆன்மா அடிமை

என்பதற்குச் சுருதி.

திருச்சிற்றம்பலம்

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
[நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

திருச்சிற்றம்பலம்

(சுந்தரர் 1. 1 : 1)

கருத்துரை :

[1]பெத்த முத்த மிரண்டிலும் ஆன்மாக்களுக்குச் சுதந்திரமில்லை யென்பதும், அவ்விரண்டிலேயும் சிவன் உபகாரம் என்பதும், அவ்விரண்டிலும் உயிர் அடிமை என்பதும், அனுக்கிரக முறைமைகளும், சுத்தாவத்தை நின்ற [2]ஐவகை முறைகளும், பெருங்கருணையும் ஆகிய இவற்றைக் கூறுகின்றது.

பதவுரை :

பித்தா (எ - து): தன்வசமும் தற்சொரூபமும் தற்பாவமுமுடையவனே! எனவே, சுத்தான்மாக்களுக்குக் கருவி கொடுத்த சுத்த பஞ்ச கிருத்திய சிருட்டியுமுடையவன் என்றது.

பிறை சூடி (எ - து): ஞானசந்திரகலையைத் தரித்தவனே! எனவே, ஞானமிர்த கலையினாலே உலகத்தை இரக்ஷிக்கும் முறைமை கூறப்பட்டது.

---

1. பெத்தமுத்தம் - ஆன்மாவின் பாசபந்தமும் வீடும்.

2. நின்மலசாக்கிரம், நின்மலசொப்பனம், நின்மலசுழுத்தி, நின்மல துரியம், நின்மலதுரியாதீதம்.

பெருமானே (எ-து): பெருமையை யுடையவனே! எனவே, தானொழியப் பிறவற்றை அழித்த வனே! என்றவாறு.

அருளாளா (எ-து): அருளினால் ஆன்மாக்களை ஆள்கின்றவனே! எனவே, ஆன்மாக்கள் பரி பாகப்படும் வண்ணம் திரோபவித்தவனே! என்றவாறு.

எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை வைத்தாய் (எ-து): என் கருவிகளைக் கொண்டு உன்னை மறவாதிருக்க நினைக்கின், வண்ண மொன்று மில்லாமல் உன்னையே என்னிடத்தில் வைத்தபடியினாலே, வேறு கருவிகளைக் கொண்டு எப்படி நினைப்பேன்? என்னவே, வேறின்றி அபேதமாய் நின்ற அத்துவித சித்தாந்த சொரூபமாகிய அனுக் கிரகம் உடையவனே என்று சொல்லப் பட்டது.

பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர் அருட் டுறையுள் அத்தா (எ-து): கருணைக் கடற் பெருக்கான பெண்ணையாற்றுக் கரையிலே திருவெண்ணெய் நல்லூரென்ற தலமும் அருட்டுறை என்னும் கோவிலுமான ஞான குருத்தானமான இடத்தில் விளங்கும் பிதா என்னும் தன்மையுடைய சிவானந்தப் பெருக்கே! என்றவாறு.

உனக்காளாயினி அல்லேன் எனலாமே (எ-து): என்றும் அடிமைச் சுபாவமாயிருக்க, இனி மேல் அல்ல என்று சொல்வதற்கு வேதாக மங்களாலும் மற்றுமுள்ள பிரமாணங்களா லும் சொல்லக் கூடாதே எனக் காண்க.

அகலவுரை :

பித்தன் என்றபடியினலே, தன் வசமாக இருக்கிறவன் காலம் பார்த்து, இடம் பார்த்து, பக்குவம் பார்த்து, ஏற்றக்குறைவு அறிந்து ஒரு காரியமும் செய்யமாட்டானே! கர்த்தா மாயையிலே யிருந்து கொடுக்கிற கருவிகளைப் பக்குவம் பார்த்து, எவ்விடங்களில் எவ்வளவு உண்டோ அவ்வளவே அருளுகையால், தன் வசம் என்று சொல்லக் கூடாதே என்னில், தன்னுடைய சுதந்தரத்துக்குச் சொன்னது. அதற்கு விடை ஏது? என்னில், 'பிறைசூடி' என்றது. மதியைத் தரித்தது ஏன்? என்னில், அதன் குணத்தைச் சொன்னது. குணம் ஏது? என்னில், அதில் அமிர்தகலையிருப்பதே குணம்; அந்த அமிர்தகலை சகல ஒஷதிகளையும் வளர்க்கிறது; மறுபடி சூரியனிடத்திலிருந்து கலையை வாங்குகிறது. இப்படிப் பிரபஞ்சத்தை நடத்துகையாலும், அச்சக்தியைத் தரித்திருக்கையாலும், சர்வ சுதந்தர சத்தியிருந்தும் அவர் காலம் பருவம் பார்த்துச் செய்கிறுர் என்பதற்கு அடையாளம்.

பெம்மான் என்றது, அப்படிச் செய்கிறவர் அழியாரோ என்னில், ஆக்க வல்லமையுடையவராகையால் ஆயாசம் தீர்தற்பொருட்டு மாயையில் ஒடுங்குவதே அழித்தலாகையால், சங்காரகர்த்தாவே முதலாளியானதால்: பெம்மான் - பெருமையுடைய மான் என்றறிக (?)

ஆனல் ஆக்குகிறதும் அழிக்கிறதுமல்லாமல், நீக்குகிறதில்லையோ என்னில், 'அருளாளாய்' என்றது—அருளினலே உயிர்களினுடைய பரிபாகத்துக்குத் தக்கதாகப் பொய்யை மெய்யாக ருசுப்பித்துப் புசிப்பித்துப் பரிபாகமானவுடன் பொய்யை நீக்கி மெய்யைக் காட்டியருளும் சக்தியுடையவன்; ஆனல் நற்கருவி கரணங்களெல்லாம் கொடுத்து மறவாமலிருக்கும்படி செய்து வைத்து, வேதாகமங்களையும் விதிவிலக்குக்களையும் கற்பித்து வைத்திருக்கிறபடியினலே அந்தப்படி மறவாமல் கதியடையலாமே என்னில்,

'எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை வைத்தாய்' என்றமையால், நான் மறவாமலிருக்கிறதற்கு எனக்கென ஆளும் கருவியாக ஒன்றுண்டோ? நான் நினைத்தற்குப் பெத்தம் முத்தம் ஆகிய இரண்டிலும் என்ன கருவி இருக்கின்றது? ஆனல், நினைப்பும் மறப்பும் யார் செய்தி யென்னில் 'எனக்கு இல்லை' என்று சொல்லவே, 'தனக்கென்பது' சொல்ல வேண்டுவதில்லை. தனக்கானல், இதாகிதம் எனக்கு வரவேண்டுவதில்லை. ஆகையால் என்னிடத்துத் தன்னை வைத்தது என்று சொன்னது.

வைத்தலாவது, உள்ளத்திருந்து கள்ளத்தை வெளிப்படுத்தி, அருளே நான் என்னும்படி நிற்கும்; முத்திக் காலத்துச் சுத்தாவத்தை முறைமையில் அறிந்து கொள்ளலாமென அனுக்கிரகித்ததாம். இந்த அனுக்கிரகம் உள்ளே நின்று செய்ததோ, வெளியே நின்று செய்ததோ, உள்ளும் புறமுமாக நின்று செய்ததோ என்னில், வெளியே நின்று செய்ததே முன்சொன்ன மூன்றும் என்றறிக.

அஃது எப்படி என்னில், 'பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூரருட்டுறையுள் அத்தா உனக்காளாயினி அல்லேனெனலாமே' என்றதில், பெண்ணையாறும் வெண்ணெய்ப்பதியும் அருட்டுறைக்கோயிலும் ஆதி என்னும் மகாலிங்கமும் கருணைப் பெருக்கும் ஆனந்தவிடமும் அதனல் விளைந்த இன்ப சுக உல்லாசமுமான முறையே அறிக. ஆகையால் அடிமை என்பது பெத்தமுத்தமிரண்டினும் என்றறிக.'

நுட்ப உரை:

ஐந்து கிருத்தியம் சொன்னபடியால் பஞ்சாக்கரமான ஐவகைப் பொருளும் இவற்றுள் அடங்கும். அவை சிவானுபூதியாற் காண்க.

எச்ச உரை:

இந்த ஐவகைப் பொருளாகிய கிருத்தியங்களெல்லாம் கேவலத்திலோ, சகலத்திலோ, சுத்தத்திலோ என்னில், கேவலத்தில் வெளிப்படா; சகலத்தில் பருவப்படுத்தப்படும்;

சுத்தத்தில் தோன்றும் எனக் காண்க. இதற்குப் பிரமாணம் ‘சாக்கிரத்தில் அதீதத்தைப் பொருந்தினோர்கள் சர்வசங்க நிவர்த்தி வந்த தபோதனர்கள்; அவர்கள் பாக்கியத்தை என்னென்று பகர்வேன்!’ என அருளியதைக் காண்க.

## 4. அறிவே சொரூபம்

என்பதற்குச் சுருதி.

திருச்சிற்றம்பலம்

மெய்த்தாறு சுவையும் ஏழிசையும் எண்குணங்களும்
[விரும்பு நால்வே
தத்தாலும் அறிவொண்ணா நடைதெளியப் பளிங்கே
[போல் அரிவைபாக
மொய்த்தாறு சமயங்கட் கொருதலைவன் கருதுமூர்
[உலவுதெண்ணீர்
முத்தாறு வெதிருதிர நித்திலம்வா ரிக்கொழிக்கும்
[முதுகுன்றமே.

திருச்சிற்றம்பலம்

(திருஞான. 1 : 131 : 1)

இதன் கருத்து :—

மெய்ஞ்ஞான குருவுபதேச சம்பிரதாய அநுபவ நிட்டை.

பதவுரை :

மெய்த்து (எ - து) : நித்திய சுத்த மெய்ப்பொருளாகிய,

ஆறு சுவையும் (எ - து) : ‘சுவை யொளி ஊறு ஓசை நாற்றம் மனம் ஆறும்’ எனவே தொண்ணூற்றாறு தத்துவங்களும் அடங்கும் வகை அறிந்து கொள்க.

ஏழிசையும் (எ - து) : 'பண்ணு மிசையும் பாலும் சுவையும், கண்ணும் ஒளியும் கருத்தும் எழுத்தும், விண்ணும் மழையும் வேதமும் சைவமும், மண்ணும் தலமுமாக' ஏழிசையாக இருக்கும்; இவை மாறி மாறி வருதலே சகல இசைகளும்.

எண்குணங்களும் (எ - து) : கர்த்தவியம், தன்வசம், தூயஉடம்பு, இயற்கை, உணர்வு, எல்லாமறிதல், ஒழியாஇன்பம், நின்மலத்துவம்—ஆக எட்டாகிய அபேத சக்திகளும்,

விரும்பு நால்வேதம் (எ - து) : மோட்சத்துக்குப் பிரியமாகிய நான்காகிய சத்னிபாதச் சரியாதி நான்கு மறைகளாலும் இச்சதுர்வித நிட்டைகளாலும்,

அறிவொண்ணு (எ - து) : வேறாகி நின்றால் அறிய வேண்டும்; 'வேறாகி பேத மபேதமாகாது அறிவை அறிவது அறிவென்'றருளியிருக்கிற உபதேச மொழியாலே அதுவாய் நிற்றற்கு அறிய வேண்டியதில்லையே. அவைகளால் அறிவது அறிவாகிய சிவமே. எனக் கொள்க. ஆகையால் இவை பரிபூரண தரிசனம்.

அவை எப்படி யென்னில்,

நடைதெளியப் பளிங்கேபோல் (எ - து) : குற்றமற்ற ஒளியினையுடைய படிகத்தின் தன்மைபோல.

இது முன்சொன்ன நால்வகைக்கும் திட்டாந்தரமாவது; எப்படி யென்னில், சுத்தபடிகம் சேர்ந்த வண்ணமெல்லாம் தனக்கு வண்ணமாக விருக்கும்; அவ்வண்ணமும் படிகமும் பேதமல்ல; அபேதமுமல்ல; பேதாபேதமுமல்ல. அம்மூன்ருக இயல்பாக இருக்கும். ஆனல், அந்தத் தன்மை காணுகிற கண்ணுக்கோ, கதிரவனுக்கோ, படிகத்துக்கோ? என்னில், கண்ணும் கதிரவனும் ஒன்று; கதிரும் ஒளியும் ஒன்று; உள்ளொளியும் புறவொளியும் ஒன்று;

தன்மயம் என்பது அநுபூதியால் அறிந்து கொள்ளலாம். இந்தத் திட்டாந்தரம் சேர்ந்ததன் வண்ணமாகிய ஆன்மாவுக்குப் பொருளாயிற்று. சத்தாகிய சிவத்துக்கு உவமை யாமோ என்னில், இதுவே உவமையாம்.

இன்னும், விளங்கத் தோன்ற வேண்டுமானுல், பூரண உவமையாகிய திட்டாந்தரமொன்றுண்டு. அதை வைத்துப் பார்த்தால் இந்தத் திட்டாந்தரத்துக்குத் தாட்டாந்தரமாக இருக்கும். அஃது எப்படி என்னில்,

அரிவை பாக மொய்த்து (எ - து): வெள்ளையாகிய தன் நிறம் நீலநிறமாகிய தேவியுடன் சேர்ந்த படியினுலே அந்த வெள்ளை நிறத்துக்கும் நீல நிறம் வந்ததென்று சொல்லவே ஐந்து நிறங்களும் சக்தியின் நிறங்களென அறிக. ஆகையால் எடுத்த வடிவெல்லாம் அருள் வடிவு என்பதற்கு இதுவே பொருள். மேலும் சத்தியும் சிவமும் பேதமுமல்ல; அபேதமுமல்ல; பேதாபேதமுமல்ல; சுபாவ உண்மை. இதற்குச் சகல சாத்திரங்களும் சாட்சியாமேயானுல், பரஞானமாகிய ஆகமத்திலே முத்தி பேதங்கள் அநேகமாகச் சொல்லியிருக்க ஒன்ருகச் சாதித்தது ஏனென்னில்,

ஆறு சமயங்கட்கு ஒரு தலைவன் (எ - து): அபேதத்துக்கு ஒரு பொருட்குப் பல சொற்கள் இருப்பனபோல, ஆறு திட்டாந்தர அத்துவித பேதங்களைச் சொன்னுலும் அவற்றிற்கெல்லாம் கருத்தா ஒன்றே. அனுபவ இலக்கணம் ஆருக இருக்கும்; இன்னும் அநேகமாக இருக்கும். இருந்தாலும் இவ்வாறும் ஆகமப் பொருள் ஒன்ருகவே இருக்கும்.

கருதுமூர் (எ - து): இப்படிப் பரிபூரணமாய், அபேதமாய், ஒன்ருய், உண்மை உபதேசமாய், சிவாநந்த வடிவாய் இருப்பதொன்று சுத்தான்மாக்களுக்குக் கொடுத்த கருவி கரணங்களுக்

குப் புலப்படுதலுண்டா? அது புலப்படும் பொருளன்றோ? புலப்படாவிட்டால் பிரயோசனமில்லையே! ஆகையால் புலப்படும் பொருளாகவே இருக்கவேண்டும். மெய்ப் பொருட்கு ஊர் வேண்டும்; பேர் வேண்டும்; திருமேனி வேண்டும்; அனுக்கிரகம் வேண்டும்; என்றால் அப்பொருளும் புலன் பொருந்தும் பொருளாகவே இருக்கும்.

அப்பொருட்கு உண்டாகிய ஊரில்,

உலவு தெண்ணீர் முத்தாறு (எ - து): ஊர் முதலாயின உண்டெனவே, ஊர்க்கு அடையாளம் ஏது என்னில், பிரவாகமாகிய சலத்தை உடையது மணிமுத்தாறு என்பது.

இதனிலுள்ள உவமைப் பொருள்களாவன :—

ஆற்றுக்கு அழகு பிரவாகம்; பிரவாகத்திற்கு அழகு மணியும் முத்தும். ஆகவே, கருணையே பிரவாகமாகிய ஞான ஒளிபோன்ற மணிமுத்தாறு. இவ்வாறு கருணைப் பிரவாகமென்று ஆற்றையும், ஞான ஒளி என்று மணியையும் முத்தையும் சொல்ல வேண்டுவதென்னெனில், சலத்தால் புற அழுக்கு ஒழியும்; உள் அழுக்கு ஒழியமாட்டாது. இந்த ஆறு ஆன்மாக்களுடைய ஆணவாதி பஞ்ச பாசங்களாகிய உள்ளழுக்கைக் கழுவிப் பேரானந்த முத்தியைக் கொடுக்கிறபடியினலே மணிமுத்தாறு என்ற பெயர் பெற்றது.

ஆனல், முத்தைப் புலப்படுத்தினது ஏதென்னில்,

வெதிருதிர் நித்திலம் வாரிக் கொழிக்கும் (எ - து): நதிக்குப் பக்கங்களிலே இருக்கிற சுத்தான்மாக்களாகிய மகாவிருடிகள் [1]சர வடிவாகிய மூங்கில்களாக நின்று கொண்டு ஆனந்த பாட்பமாகிய கண்ணீர்களை உதிர்க்குமாறு போல, சிந்தின முத்துக்களைக் கருணை அலைக்

1. சரம் - நாணல்.

கரங்களால் வாரி இரு கரைகளிலும் வாழும் ஆன்மாக்களுக்கெல்லாம் 'இப்படி ஆனந் தத்தை அடையுங்கள்' என்று இறைக்கும் தலமாகிய பதிக்குப் பெயர் ஏது என்னில்,

முதுகுன்றமே (எ - து): பழமலையென்று பெயரை யுடைய விருத்தகிரியே அனுக்கிரகம் பண்ணு கிற இடமெனக் காண்க.

முதுகுன்றமாவது :—

மாயாகாரியமாகிய பிரபஞ்சத்தில் எடுத்த தனுக் களில் மலையும் ஒரு தேகமானபடியினலே, மலையென்றது ஆன்மாக்களுக்கு ஒரு தேகமென்று தோன்றுமே; இந்த மலை அம்மலையன்று; இது பழமலை; அதாவது, அநாதி யாய், நித்தியமாய், விபுவாய், பரிபூரணமாய் இருப்பதான ஒரு பொருளே அருள்மலையாய் வந்து பரிபக்குவ சுத்தான் மாக்களுக்கு அனுக்கிரகம் பண்ணும் பொருட்டு எழுந்தரு ளிய பரமகுரு திருமேனியெனக் காண்க.

இன்னும் விரிக்கிற் பெருகுமானதால் சிவானுபவ சுவானுபூதிகத்தாற் காண்க.

## 5. பஞ்சகிருத்தியம் அநாதி

என்பதற்குச் சுருதி.

திருச்சிற்றம்பலம்

புகையெட்டும் போக்கெட்டும் புலன்க ளெட்டும்
பூதலங்க ளவையெட்டும் பொழில்க ளெட்டும்
கலையெட்டும் காப்பெட்டுங் காட்சி யெட்டும்
கழற்சே வடியடைந்தார் [1] களைக ளெட்டும்
நகையெட்டும் நாளெட்டு நன்மை யெட்டு
நலஞ்சிறந்தார் [2] தன்மனத்து மலர்க ளெட்டும்
திகையெட்டும் [3] தரிப்பதற்கு முன்னே பின்னே
திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே.

திருச்சிற்றம்பலம்

(திருநாவுக். திருவாரூர் திருத்தாண்டகம் 9)

(பி - ம்) 1. களைகணெட்டும். 2. மனத்தகத்து. 3. தெரிப்பதற்கு.

இதன் கருத்துரை :—

அநாதி சிருட்டியான பஞ்சகிருத்திய பரமசிவ சொரூபமே அனுக்ரகமாகப் பிரத்தியட்ச சிவானுபவ சுவானுபூதிகம் விளங்க அருளியது.

பதவுரை :

புகை எட்டாவன :—காரண காரியமான அக்கினியைக் காரியமான புகையென்று உபசரித்துச் சொன்னது. மேலுள்ள காரியங்களும் காரணத்தில் அடங்கி நித்திய அநாதியாய் இருக்குமென்பதை அறிய வேண்டித் திருவுளம் பற்றினது.

அவைக்கு விபரம் :

அக்கினி எட்டாவன :—காலாக்கினி, மூலாக்கினி, விந்துவாக்கினி, பூதாக்கினி, யோகாக்கினி, யாகாக்கினி, வடவாமுகாக்கினி, உதராக்கினி ஆக 8.

போக்கு எட்டாவன :—தருமம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதருமம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் ஆக 8.

புலன்கள் எட்டாவன :—சத்தம், ரூபம், ரசம், பரிசம், கந்தம், மனம், புத்தி, அகங்காரம் ஆக 8.

பூதலங்கள் எட்டாவன :—பூ முதல் பாதலம் வரை 8.

பொழில்கள் எட்டாவன :—வ்ானதி மேலுலகம் 8.

கலை எட்டாவன :—வேதம், ஆகமம், புராணம், சாத்திரம், சூத்திரம், தோத்திரம், இலக்கியம், இலக்கணம் ஆக 8.

காப்பு எட்டாவன :—[1] இந்திராதி 8.

---

1. இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

காட்சி எட்டாவன :—பிரத்தியட்சமாகிய வாயிற் காட்சி; மானதக்காட்சி; தன்வேதனைக் காட்சி, யோகக்காட்சி, அனுமானம், தந்திர கலை, மந்திரகலை, உபதேசகலை ஆக 8.

கழற்சேவடியடைந்தார் களைகள் எட்டாவன :— மூலமலம், ஆணவம், திரோதாயி, கன்மம், மாயை, ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவம் ஆக 8.

நகை எட்டும் :—அணிமா, லகிமா, கிரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசுரத்துவம், வசித்துவம், மகிமா ஆக 8.

நாள் எட்டாவன :—பஞ்சாங்கம்; லக்கினம்; ஓரை ஆக 8. (?)

நன்மை எட்டாவன :—இயமம், நியமம், தாரணை, சமாதி, பிரத்தியாகாரம், பிராணயாமம், ஆசனம், தியானம் ஆக 8.

நலஞ்சிறந்தார் தம்மனத்து மலர்கள் எட்டாவன :— கர்த்தவ்யம், தன்வசம், தூயஉடம்பு, இயற்கையுணர்வு, எல்லாமறிதல், பெருங்கருணை, ஒழியா இன்பம், நின்மலத்துவம் ஆக 8.

திக்கெட்டாவன :—பஞ்சபூத சோம சூரிய ஆன்மா ஆக 8.

இவ்வகையோர்களுக்குக் காலந் தோன்றாதபடியால் திருவாரூர்த் திருக்கோயில் கொண்டதும் அப்படியேயென்று பரிபூரணதரிசனம் பண்ணின முறைமையைக் காண்டலே கருத்தாய் நினைந்திருந்து அடிமை பூண்ட ஞான சமாதி எனக் காண்க.

## 6. ஒன்றானவன்

என்பதற்குச் சுருதி.

### திருவெழுகூற்றிருக்கை

திருச்சிற்றம்பலம்

ஒருரு வாயினை மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதற் பூதலம்
ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை ;
இருவரோ டொருவ னாகி நின்றனை.
ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும்
முப்பொழு தேற்றிய நால்வர்க் கொளிநெறி
காட்டினை ; நாட்ட மூன்றாகக் கோட்டினை ;
இருநதி அரவமோ டொருமதி சூடினை ;
ஒருதா ளீரியன் மூவிலைச் சூலம்
நாற்கால் மான்மறி ஐந்தலை அரவம்
ஏந்தினை ; காய்ந்த நால்வாய் மும்மதத்
திருகோட் டொருகரி யீடழித் துரித்தனை ;
ஒருதனு இருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானிலம் அஞ்சக்
கொன்று தலத்தற அவுணரை யறுத்தனை ;
ஐம்புலன் நாலாம் அந்தக் கரணம்
முக்குணம் இருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை ; ஒருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து
நான்மறை யோதி ஐவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை ;
அறுபதம் முரலும் வேணுபுரம் விரும்பினை ;
இகலிய மைந்துணர் புகலி யமர்ந்தனை ;
பொங்குறு நாற்கடல்சூழ் வெங்குரு விளங்கினை ;
பாணிமூ வுலகும் புதையமேல் மிதந்த

தோணிபுரத் துறைந்தனை ; தொலையா இருநிதி
வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை,
வரபுரம் என்றுணர் சிரபுரத் துறைந்தனை ;
ஒருமலை யெடுத்த இருதிறல் அரக்கன்
விறல்கெடுத் தருளினை ; புறவம் புரிந்தனை ;
முந்நீர்த் துயின்றோன் நான்முகன் அறியாப்
பண்பொடு நின்றனை ; சண்பை யமர்ந்தனை ;
ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரரும்
ஊழியும் உணராக் காழி யமர்ந்தனை.
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை ;
ஆறு பதமும் ஐந்தமர் கல்வியும்
மறைமுதல் நான்கும்
மூன்று காலமும் தோன்ற நின்றனை ;
இருமையின் ஒருமையும் ஒருமைதன் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்
அனைய தன்மையினை யாதலின் நின்னை
நினைய வல்லவ ரில்லை நீள்நிலத்தே

திருச்சிற்றம்பலம்

(திருஞானசம்பந்தர்)

திருவெழுகூற்றிருக்கையாவது, நடுவே மூன்று வரை கீறி, குறுக்கே எட்டு வரை கீறி, பக்கத்துக்கு ஒவ்வொன்று கூட்டி, ஒரு புறத்துக்கு ஏழாக, பக்கத்தில் இரண்டு கூட்டி, நடுவே கீறி, ஏழுவரைக்குக் கீழே பக்கத்தில் ஒவ்வொன்று குறைத்துக் குறுக்கே கீறில் எழுபத்திரண்டு அறைகளாம். இதில், நடுவறை பதினாறிலும் ஒன்றென்று இலக்கம் எழுதி, இரண்டு பக்கங்களிலும் இரண்டு முதலாக ஏழு வரை இலக்கம் எழுதி, கீழ் வரை ஆறிலும் ஒன்று முதல் ஆறும் எழுதி, 'ஒருருவாயினை' முதல் இலக்கத்தின்படி வலமிட மாகவும் இடம் வலமாகவும் வாசித்து வருகிறபோது ஒன்றென்றே முடியும்.

இப்படி ஏழு கூறுகளிலும் இலக்கம் இருக்கையால் எழுகூற்றிருக்கை என்று பெயராயிற்று.

இந்தத் தேவாரத்துக்குத் திருஞானசம்பந்தக் கண்ணுடைய வள்ளலாரான பரமகுருநாதன் எழுதிய உரையை எமது குரவர் அடியேற்கு உபதேசித்தபடி அவ்வனுபூதிகம் மிகுந்து சிவ ரகசிய கதையாயிருப்பதால் இந்தத் திருவாசக உரை பொழிப்பனுபூதி அனுக்கிரகம் செய்யும்போது முன் அருளிய தேவாரங்களுடன் இவைக்கும் அருளிய அநுபூதிப்படி ஒன்றே பெரிய நல் அடையாளமென எடுத்துக் காட்டலாக எழுதியது.

திருவருட்பாவின் கருத்துரையாவன :—

முப்பிரமாணங்களினுலும் சொரூபமும் தடத்தமுமானதும், அட்டமூர்த்தியின் முறைமையும், சூட்சும பஞ்சகிருத்தியம் தூலபஞ்சகிருத்தியங்களின் செய்தியும், குரு தரிசனமும், முப்பொருள்களா யுள்ளவைகளெல்லாம் மூன்று நேத்திரமென்னும் இயல்பும், சாட்குணியங்களாக நின்ற சுபாவமும், பாசத்திரயங்களை நீக்கும் தன்மையும், பன்னிரண்டு திருநாமங்களிலும் சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரக் கருத்தின் பயனும் விளங்க முறையே கூறுகின்றது.

பதவுரையாவன :—

ஓருருவாயினை (எ - து) ஓரும் உருவாயினை என்பது பொருளாகும். ஓரும் உருவாவது அறியும் உரு. ஆகவே அறிவுரு என்று பெயர். அறிவாவது சிவம். எதற்கு அறிவு என்னில், உயிருக்கு அறிவு. உயிருக்கு அறிவு என்று சொல்லவே அறியாமையும் ஒன்று உண்டு என்றாயிற்று. ஆகவே, அறிவும், அறியாமையும், அறிகிறவனுமான பதி, பசு, பாசம் மூன்றாயிற்று. இம்மூன்று வடிவும் பரமசிவனுக்குத் திருமேனியாயிற்று. அப்படி



யானல், பாசமும் பசுவும் திருமேனியாமோ என்னில், அப்படியே ஆம். அஃதெப்படி என்னில், ஒருவனுக்குத் தேகமும் உயிரும் தொழிலும் அங்கப் பிரத்தியங்க உபாங்கங் களுமன்றி வேறே உயிர்களுக்கு இவைகளை விட வேறே முறை இல்லையே. இவைகளையே உயிரென்று செய்து வருகிற வரிசைகளெல் லாம் அவ்வுயிர்க்கேயன்றி இவைகளுக்கல் லவே. அப்படிப்போல, பரமசிவனுக்குப் பசு பாசங்களெல்லாம் திருமேனியேயாம். உள்ள படி அகண்டாகார சச்சிதாநந்த சதாநடன குஞ்சிதபாத தரிசனம் பண்ணுகிறபோது வேறென்று கண்டதில்லையே. இன்னும் பரமகுரு சிவஞான உபதேச சம்பிரதாய சிவானுபவ சுவானுபூதிகத்தால் அன்பே இன்பாய்க் கலந்து அனுபோக நிட்டையைப் பெறலாமே.

இப்போது அருளியது பிரத்தியட்சப் பிரமாணம். இனி அனுமானப் பிரமாணம். அவை தடத்த இலக்கணம்.

**மானுங்காரத்தீரியல்பாய்** (எ - து): பிரகிருதிமாயையும் ஆங்கார தத்துவமும் பெயர் வேறே இருந் தாலும், பிரகிருதியினுடைய அவ்யக்தமே ஆங்காரமன்றி வேறன்று. அப்படிப்போல சிவமொன்றே சத்தியும் சிவமுமாகிய இரண் டாயிற்று.

**ஒருவிண்முதல் பூதலம் ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்** (எ - து): ஒன்றாகிய ஆகாசம் முதல் பிருதிவி வரை ஐந்தும், ஒரு தன்மைத்து ஆகிய, சூரி யன் சந்திரன் தேவர் முதலான ஆன்மவர்க் கங்களுமாகிய அட்டமூர்த்தங்களாம். அவற் றில் உளவாகிய அத்துவாக்களையும் மற்றுள காரியங்களையும்,

படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை (எ - து): சிருட்டி திதி சங்காரமாகவே சம்பு பட்சமாக நின்று திரிமூர்த்திகளான தடத்த சொரூபமாக எழுந்தருளி யிருந்தனை.

இருவரோடொருவனாகி நின்றனை (எ - து): பிரகிருதி மாயையில் அனுபட்சமாக நின்று தூல பஞ்ச கிருத்தியம் பண்ணும்போது அந்தப் பிரமா விட்டுணுக்களோடே தாமு மொருவராக உருத்திரமூர்த்தி வடிவாய் எழுந்தருளி நின்றனை.

ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும் முப்பொழுதேற்றிய நால்வர்க் கொளிநெறி காட்டினை (எ - து): சைதன்னியமாகிய சுத்தமாயா சத்தி வடிவாகிய ஆலமரத்தின் கீழே இருந்து ஒளியாகிய பர அபர ஞானமான இரண்டு பொற்பாத கமலங்களாகிய திருவருளை மூன்று காலமும் ஒரு காலமாய் நிட்டை கூடிய சனகாதி நால்வர்க்கும் சுவானுபவ சுவானுபூதிகமான சுபாவ விளக்கத்தைச் சகச நிட்டை பிரத்தியக்ஷமாகப் பெற சிவஞான தேசிக வடிவாக எழுந்தருளி அனுக்கிரகம் செய்தனை.

நாட்ட மூன்றாகக் கோட்டினை (எ - து): முப்பொருள்களாயுள்ள வர்க்கங்களான முச்சத்தி, முவ்வதிகாரம், முவ்வடிவு, முக்கிருத்தியம், முப்பதார்த்தம், முத்தத்துவம், முக்குணம், மூன்றுநாடி இன்னும் வேதாகமங்களிலுள்ள மூவகைகளையும் மூன்று நேத்திரங்களாகத் தரித்து எழுந்தருளினை.

இருநதி அரவமோடு ஒருமதி சூடினை (எ - து): பெருமையிற் சிறந்த கங்காநதி யென்ற பெயரையுடைய சருவஞான சத்தியையும், மாநாகமாகிய பரிதிருப்த

சக்தியையும், ஒப்பற்ற சந்திரனாகிய அநாதிபோத சத்தியையும் தலையணிகளாகத் தரித்தனை.

ஒருதாள் ஈரியல் மூவிலைச் சூல நாற்கால் மான்மறி ஐந்தலை அரவம் ஏந்தினை (எ - து): ஒரு பாதத்தையும், பாவங்களை அறுக்கும் கூர்மையையுமுடைய மூன்று இலைகளாகிய கவரையுமுடைய சூலமாகிய சுதந்திர சக்தியையும், தர்மார்த்த காம மோட்சங்களாகிய நாலு பாதங்களையுடைய மான் குட்டியாகிய அலுப்த சக்தியையும், பஞ்சாக்கரமாகிய ஐந்தலை நாகமென்னும் அனந்த சத்தியையும் கையணிகளாகத் தரித்தனை.

காய்ந்த நால்வாய் மும்மதத் திருகோட்டொருகரி யீடழித்துரித்தனை (எ - து): உக்கிர கிருத்தியத்தையுடைய பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்ற வாயினையுடைய களவு பொய் காமமாகிய மூன்று மதத்தினையுடைய மத மாச்சரியம் என்னும் இரண்டு கொம்புகளையுடைய ஒப்பற்ற களிறு என்னும் ஆணவத்தை வெளிப்படுத்தி அழித்தனை.

ஒருதனு இருகால் வளைய வாங்கி, முப்புரத்தொடு நானிலம் அஞ்சக் கொன்று தலத்துறு அவுணரை அறுத்தனை (எ - து): சுழிமுனையாகிற ஒரு வில்லை, இடை பிங்கலை ஆகிய இருபுறமும் வளையப் பண்ணி, மூன்று மலங்களும் பாகமாம் படிக்குத் தனு கரண புவன போகங்களைக் கூட்டிப் பாகப் படுத்தி இத் தேகத்திலே தானே மாயாமலங்களை நிவர்த்தி பண்ணினை.

ஐம்புலன் நாலாம் அந்தக் கரணம் முக்குணம் இருவளி ஒழுங்கிய வானோர் ஏற்ற நின்றனை (எ - து): சஞ்சிதம் ஆகாமியம் பிராரத்துவம் என்னும் கன்மங்களை நீக்கி, அதனால் பஞ்ச இந்திரியம், அந்தக்கரணம், முக்குணம், இடை, பிங்கலை இவைகளின்

தொழில்கள் அருளின் வழித்தாய் ஒருங்கி நிட்டை கூடிய சுத்தான்மாக்களருளாய் நின்று துதிக்க எழுந்தருளி யிருந்தனை.

ஒருங்கிய மனத்தோடு இரு பிறப்பு ஓர்ந்து முப்பொழுது குறை முடித்து, நான்மறை ஓதி, ஐவகை வேள்வி அமைத்து, ஆறங்கம் முதலெழுத்து ஓதி, வரன்முறை பயின்று எழுவான் தனை வளர்க்கும் பிரமபுரம் பேணினை (எ - து): பஞ்ச இந்திரிய ஒருமைப்பாட்டுடன் இகபரம் வரும் நாமம் ஓர்ந்து, முக்காலமும் ஓர் காலாதீத மாக அன்பால் நித்யானந்த கன்ம சிவஞான அநுபூதி கூடித் திரு மறை துதித்து, திருநாம சதா சேவை வேள்வி செய்து, சாட்குணியப் பொருளான தாரக பிரம குண்டலிபுர மூலப் பிரணவத் திருத்தோணியான பிரசாத முத்தி பஞ்சாக்கர முதலெழுத்து ஓதாமலோதி, வேதாகம புராண சித்தாந்த மகாவுபநிடத வாக்கிய அனுபவ நியமம் தவறாது உள்ளத் தெழும் ஞான சூரியனைப் பிரியாது பேரின்பம் வளர்ப்பதான பிரமாவினாலே அன்பு மலரால் அருச்சனை செய்து வணங்கும் பிரமபுரத்தில் எழுந்தருளி யிருந்தனை.

பிரமபுரத்துக்கு நுட்பமாவன :—

பிரமபுரம் என்ற பதத்துக்கு ஸ்ரீமத் வள்ளலார் அருளிய ஏகபாத தேவார உரையில் ஞானகாசமாகிய பரிபூரணத்தை மிக வும் வியந்து அப்பராசக்திக்கு அதீதமானவனும், சுகமே வடிவான முதல் நடு இறுதி காண, உற்பத்தி திதி நாச மில்லாத பேரியோனென்றமையானும், சிதம்பர புராணத் தில்,[1] 'பெரிய நலத்தால் இந்த வுடல் பிரமபுரமெனப்பெயர்

1. புரிகாரணந் தனைக்கடந்து நிற்றலாற் சொற்றகைய புவனத் தியார்க்குந்
தெரிவரிதா யுண்மையாய்ச் சித்தாயா னந்தமாய்த் திரியா தோங்கற்
குரியபரி பூரணமா யிருக்கின்ற பரம்பிரம முள்ளே காணும்
பெரியநலத் தாலிந்த வுடல்பிரம புரமெனப்பேர் பெற்ற தம்மா
(சிதம்பரபு: மான்மியச்சருக். 60)

பேசிற்று' என்றமையானும், தலமகிமையில்,[1] 'உன்போல் அநேகர் தலமீதிறைஞ்சி வொளிபெற்ற மூலவுரு' என்றமை யானும், சிவஞானபோத முதற் சூத்திரக் கருத்தான 'அவனவளது' என்ற சுலோகத்துக்கு வள்ளலார் அருளிய சிவஞான போத விருத்தப்பாவில், 'மூவகையும் செய்ய ஒரு முதலுண்டாகும்; அது பதியாம்' என்றும், சூத்திரக் கருத்தநுபூதியில் அதனுலே உடையதென்றும் 'சங்கார கர்த்தாவே முதலாளி' என்றும் கூறினமை யாலும், இவ்வகை அநுபூதியால் பிரமபுரம் பதி சொரூப மெனக் காண்க.

அறுபதம் முரலும் வேணுபுரம் விரும்பினே (எ - து): வண்டுகள் சப்திக்கும் மூங்கில் வடிவாகி சூரன் உபாதி தீர இந்திரன் பூசித்தல் விரும்பும் சிவன் எனக் காண்க.

இந்திரன் சகலரில் விஞ்ஞானகலன் ஆதலாலும், முதற் சூத்திர அநுபவ விளக்கப்படி திருவடியகலாத இரண்டாம் சூத்திரமான 'அவையே தானே' என்றபடி ஆன்மா ஒருவன் உளனென அருளியதைக் காண்க.

இகலியமைந்து உணர் புகலி அமர்ந்தனே (எ - து): குற்றமற்ற ஞானமே வடிவான அறக்கடவுள் தருமம் விளங்கப் பூசித்து, 'புகலிடம் பிறிதில்லை' என அனுக்கிரகம் பெற்ற தலத்தில் எழுந்தருளி யிருந்தனே

எனவே, மூன்றும் சூத்திர 'உளதிலதென்றலின்' என்ற கருத்தின் பயனுன திருவடியணையும் சுத்தான்மாக்கள் இலக்கண மெனக் காண்க.

---

2. உன்போ லநேகர் தலமீ திறைஞ்சி யொளிபெற்ற மூல வுருவில்
முன்பூ சைசெய்து தடமொன்று கண்டு முழுமுத்தி பெற்ற முறையே
நின்பூ சைசெய்து வலியும் படைத்து நிகிலம் படைத்தி டுதிநீ
நின்போ தமென்று நினையேன் மறந்து மென்போ தமென்று நினைவாய்

(சீகாழிப்பு : பிரமபுரமானசுத் : 15)

பொங்கு நாற் கடல் சூழ் வெங்குரு விளங்கினை (எ - து): சமுத்திரம் சூழ்வதான தலங்களுள் எமனாலும் சுரர் குருவாலும் பூசிப்ப விளக்கமான அனுக்கிரகம் செய்வோன் எனக் காண்க.

இதற்கு நான்காம் சூத்திரம், 'அந்தக்கரணமவற்றில்' என்ற கருத்தாதலால் சுத்தாவத்தைப் பொருளெனக் காண்க.

பாணி மூவுலகும் புதைய மேல் மிதந்த, தோணிபுரத்து உறைந்தனை (எ-து): சங்கார சலப் பிரளய காலத்தில் எல்லா உலகும் அழியத் தேவர்கள் அனைவரும் பூசிப்பதாகக் குண்டலி சத்தியே பிரணவத் திருத்தோணியாகப் பிரளய விடங்கப் பெருமாளாகப் பெருந்திருவாழ்வுடன் எழுந்தருளி எல்லாத் தேவர்களையும் இரட்சிப்பதாகவும், மாயாதாரக உயிர்களைப் புனருற்பத்திக்கு உபகாரமாக எழுந்தருளிய நாதன் எனக் காண்க.

இதற்கு, ஐந்தாம் சூத்திரம் ஞான வாய்மையான் 'விளம்பிய உள்ளம்' உபகாரப் பொருட்டென்றமை அருளிய பயன் காண்க.

தொலையா இரு நிதி வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை (எ - து): அழிவில்லாத சங்கநிதி பதுமநிதி பெற குபேரன் பூசித்ததன்றியும், பொன்னிநதி இருபுறமும் சூழ்ந்திருப்பதான தலத்திலே, இப்பூமியைப் பாயாகச் சுருட்டிப் பாதலத்தின் கீழ்ச் சென்ற [1]இராட்சதனை, வராகவுருவங் கொண்டு பூமிக்குள் சென்றவனை வதைத்து, இப்பூவைத் தாங்கிய கோலவடிவில் திருமால் சிவனை மறந்தபடியால், அக்கொம்பு சண்முக தேவநாயனாரால் முறிக்கப்பட்டவுடன் சிவஞானப் பிரஞ்ஞை பிறந்து விட்டுணு பூசிக்க எழுந்தருளிய சுவாமி எனக் காண்க.

1, இரணியாட்சன்.

இதற்கு ஆறும் சூத்திரம் 'உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்' என்றதனால் ஆன்ம நிச்சயம், பசு வர்க்கம் விட்டுணு வெனக் காட்டியதென அனுபவப்படி காண்க.

வரபுரமென்றுணர் சிரபுரத்தமர்ந்தனை (எ - து): சகல வர குணப் பிரசாதம் அருள்வது சிவனே என, இராகு கேது இருவரும் சிரத்தாலும் உடலாலும் இரண்டு கூறாகி, அவர்கள் பூசிப்ப, அவர்கள் கருத்துப்படி நித்ய வாழ்வு அருளி எழுந்தருளியிருந்தனை.

இதற்கு, ஏழாம் சூத்திரம் 'யாவையும் சூனியம் சத்தெதி ராகலின்' என்ற ஞானப்பயன் அனுபவப்படி காண்க.

ஒரு மலை எடுத்த இருதிறல் அரக்கன் விறல் கெடுத்தருளினை (எ - து): பலம் பொருந்திய இராவணன் செய்த சிவத்துரோகத்தை அழித்தருளி எழுந்தருளினை எனக் காண்க.

புறவம் புரிந்தனை (எ - து): புகாரில் சிவிச்சக்கரவர்த்தியான இராசன் அன்பு வெளிப்பட அவன் யாகசாலையில் அக்னிபகவான் புறாவும், யமன் பருந்துமாக வரவிட்டருளி, நியமம் தவறாது தன் உடலை ஈந்தபடியால், புறவாநதி சூழ அனுக்கிரகம் செய்து எழுந்தருளியிருந்த சுவாமி எனக் காண்க.

இதற்கு எட்டாஞ் சூத்திரம், 'ஐம்புல வேடரிலயர்ந்தனை' என்ற நேயத்தழுந்தல் அனுபூதியாற் காண்க.

முந்நீர்த் துயின்றோன் நான்முகன் அறியாப் பண்பொடு நின்றனை சண்பை அமர்ந்தனை (எ - து): பிரமா விட்டுணு இருவருமறியாத பெருமையுடன் நின்றனை; சட்சமய உள்ளாரும் பூசிப்பது மன்றி, துவாரகாபுரிக்கு இறைவரான கிருஷ்ண தேவர் அறுபதினாயிரம் பிள்ளைகள் பெற்று,

அறிவில்லாது அப்புத்திரர்கள் இருடியைப் பழிக்கப் பெரியோர் சாபம் அப்புத்திரர்கள் சம்பைக் கோரையால் மடியத் தானும் மடிவதாகலான், அச்சாபமும் பழியும் தீரப் பூசிப்ப அனுக்கிரகம் செய்து எழுந்தருளி யிருந்தனை.

இதற்கு, ஒன்பதாம் சூத்திரம் 'ஊனக்கண்பாசம்'; இது அஞ்செழுத்தருணிலை உபதேசப்படி காண்க.

ஐயுறும் சமணரும் அறுவகைத் தேரரும் ஊழியும் உணராக் காழி அமர்ந்தனை (எ - து): தன்னை, வினையை, தலைவனை உண்மை கொள்ளாத சமணரும், அறுவகைப் புத்தரும், காலவாதியும், காணமாட்டாதவராயும், பத்திரகாளி பரமசிவன் சந்நிதியிலே சம நிருத்தம் செய்யும்படி நினைத்த படியால், அவளை ஊர்த்த நடனம் செய்து அடிமையாக்கி, காளி அக்குற்றம்தீரப் பூசிப்ப அனுக்கிரகம் செய்தும் எழுந்தருளினை.

இவைக்குப் பத்தாம் சூத்திரம் 'அவனே தானேயாகி' என்ற அவன் நெறி ஞானத்தில் ஞானம் என்பதை அருளாற் காண்க.

எச்சன், ஏழிசையோன் கொச்சையை மெச்சினை (எ - து): தேவேந்திரனாலும் நாரதனாலும் பூசிப்பதன்றியும், பராசரரிஷி மச்சகந்தியைப் பரிமளகந்தியாகச் செய்து புணர்ந்த பாவந்தீரப் பூசிப்ப மகிழ்ந்தின்பருளி யிருந்தனை.

இவைக்குப் பதினோராம் சூத்திரம், 'காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம் போல' என ஞானயோக மருளியதை அன்பாற் காண்க.

ஆறுபதமும், ஐந்தமர் கல்வியும், மறைமுதல் நான்கும், மூன்று காலமும் தோன்ற நின்றனை (எ - து): அறுவகை உட்சமயிகட்கும், பஞ்சப்பிரமத் திருநாமப் பொருட்கும், சத்தினிபாத நான்கு உபதேச

மறைக்கும், மூன்று காலமான எற்றைக்கும், திருவருளுருவாக எழுந்தருளி அனுக்கிரகம் செய்யும் நாதனே!

**இருமையின் ஒருமையும் ஒருமைதன் பெருமையின் மறுவிலா மறையோர் கழுமலம்** (எ - து): பெத்தம்போலவே முத்தியென்ற அன்புருவமும் இவ்விரண்டினு முளதும் சிவபோக சாட்குணியப் பெருமையிற் குற்றமற்ற ஞானமறையோர் பூசிக்கும்படி வாழும் கழுமலம். கழுமலம் என்றது கழுவாற் பூசிப்பதுமன்றிக் **கழுமல முதுபதி** என்றது, **ரோம மகரிஷி** சைவம் விளங்கக் கவுணிய வடிவாக வந்து பூசிப்ப அவரது மலத்தைக் கழுவும் பெரிய திருப்பதி எனக் காண்க.

**கீழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை** (எ - து): கவுணிய கோத்திரம் விளங்கத் திருவவதாரம் செய்த திருஞானசம்பந்தவடிகள் அருளிய சத்திய வாசகத் துதியெனக் காண்க.

**கவுணியன் அறியும்** (எ - து): கழுமல முதுபதிக் கவுணியனே திருவுளம் இவ்வனுபூதி அறிவது.

இவற்றிற்குப் பன்னிரண்டாம் சூத்திரம் 'செம்மலர் நோன்றாள் சேர லொட்டா, அம்மலங் கழீஇ' என்ற அணைந்தோர் தன்மைப் பொருளென அனுபூதி பெறத் தக்கது.

**அனைய தன்மையினை யாதலின் நின்னை, நினைய வல்லவர் இல்லை நீணிலத்தே** (எ - து): இப்போதருளிய சிவானந்த போக நிட்டைத் துதியைச் சுவானுபூதி பெற்ற அடியார்கள் இப் பூவிலே சீவன்முத்தராய்ச் சஞ்சரிப்பதும், அவர்கட்கு ஒப்பு வேறொருவரும் இல்லையென்பதும் சீரடியாரை வியந்தருளிய அனுபூதியெனக் காண்க.

பிரமபுரம் என்ற திருநாமத்துக்கும், சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரக்கருத்தும் சமரசம் விளங்கப் பிரமபுரத்துக்குச் சொல்லியபடி காண்க.

---

## [1]சிவஞான போதமவையின் கருத்து:
## வள்ளலார்
## சிவஞான போத விருத்தம்

சிவஞானபோதம்
வள்ளலார் அருளிய சிவஞானபோதம்

(மங்கல வாழ்த்து)

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

(முதற் சூத்திரம்)

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

இதன் கருத்து:

சகம் பிறப்பிறப்பாகிய முத்தொழிலையுடையது (1)
அது அரனாலே உடையது (2)
மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள் (3)

ஆக 3

இவைக்கு ஸ்ரீமது வள்ளலார் அருளிய திருவிருத்தம் :—

பதிபசு பாசமெனத் தெரித்த மூன்றிற்
பதியாவ தொருபடிப் பட்டுள்ள சகத்திற்கு
முதுமறைநூ லவனவ ளதுவென் றோதுமூவகையுஞ்
செய்ய வொரு முதலுண் டாகும்
அதுபதியாஞ் சகந்தன்னை யழித்துப் பின்னு
மாக்குதலா லவனரனேயாவன் மற்று
விதிதனையு மரிதனையுங் காட்டி யெல்லாம்
விளைந்தழியக் கண்டு நிற்பன் விமலன்றானே.

---

1. எட்டுச் சுவடியில், பின்வரும் நூலின் செய்யுட்களும் உரைகளும் அவற்றின் முதன் மொழிகளாலேயே குறிக்கப்பட்டுள்ளன. எங்கள் நூல் நிலயத்திலுள்ள எட்டுச் சுவடியில் முழு நூலும் கிடைக்கின்றமையால், இவ்வரிய நூலை இங்கே பெயர்த்தெழுதியுள்ளோம். (ப - ர்)

(இதன் கருத்து) பொன்னழியாமல் மணியானாற் போலவும் காரணங் கெடாமல் காரியப்பட்ட மாயையைக் கொண்டு கர்த்தாவை அறுதியிடலால் இது காரியம் கொண்டு காரண முரைத்தது. (1)

(இரண்டாம் சூத்திரம்)

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

(இ-க) ஆன்மா ஒருவனுளனென்றும் (1), மூவகை உயிரென்றும் (2), அச்சுமாறியே பிறக்குமென்றும் (3), கன்ம பலனை யானே கொடுப்பனென்றும் (4), யான் சருவ வியாபகன் (5) என்றும் கூறியது. ஆக 5

(திருவிருத்தம்)

விமலன்றா னான்மாவை வேறா யெங்கும்
வியாபியா யெவ்வுயிர்க்கும் வொத்
தமையவே நிற்பான் கிரியா சத்தி
யகலாத வான்மாவை யறம் பாவத்தாற்
சமையவே யனுபவத்தைப் பண்ணு வித்துச்
சங்கரித்துத் தற்பரமாய்த் தாணுவாகி
நிமலமா யானந்த ரூப மாகி
நித்தமுமா யேகமுமாய் நிற்குநிலை யதுவே.

(இ-க) நவநீதபங்கங்கள் இரண்டினையும் உருக்கியும் இறுக்குவித்தும் இவ்வாறு தினகரனால் செய்யப்படினும், இவ்விரண்டு தொழிலினும் விகாரமறச் செய்தலாலும், அவனை ஒழிந்தவை உருக்குதல் இறுகுதல் செய்ய வொண்ணாதலான்; என் போல வென்னில், சேற்றை உருக்கி வெண்ணெயைத் தடிப்பிக்க மாட்டான்; ஆதலால் அவனே கற்பிக்கப்பட்டவனும் அன்றாமாதலால் அவனைப் போல அனாதியாய் வரப்பட்ட ஆன்மாக்களுக்குப் பெத்த முத்தி இரண்டினையும் பக்குவா பக்குவங்களிலே நடாத்துவன்; ஆதலால் அருளுருவாகி ஐந்தொழில் செய்யும் போதும் அருளுரு அதற்கும் அப்பாலாகிச் சந்ததம் ஐந்தொழில் தனதே ஆயினும் ஐந்தொழில் போதல் அவாய் நிற்பது. (2)

(மூன்றும் சூத்திரம்)

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
னுண்டி வினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

(இ-க) இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிருண்டு; எனதுடலென்று பொருட் பிறிதின் கிழமைபற்றி வருகையினாலே வேறாயறிகிற அறிவுயிருண்டு; ஐந்தையும் ஒவ்வொன்றாய் அறிகையினாலே சரீரத்துக்குப் புசிப்பும் தொழிலும் இல்லததினால் ஐந்திற்கும் வேறாயறிகிற வுயிருண்டு; கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே கனவுடற்கு வேறாயுயிர் உண்டு; நித்திரையிலும் வாயு தொழிற் பண்ணுகையினாலே பிராணவாயுவுக்கு வேறாயுயிர் உண்டு; மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவா அரனுக்கு வேறாயுயிருண்டு; எல்லாத் தத்துவங்களுக்கும் பெயர் வெவ்வேறே இருக்கிறபடியினாலே தத்துவங்களுக்கு வேறாய் உயிருண்டு. ஆக 7

(திருவிருத்தம்)

அதுவல்ல விதுவல்ல வென்கை யானு
மறிந்தென்கை யென்காலென் றறைத லானும்
இதுவென்ன திவையென்ன தென்கை யானு
மிந்திரிய மொடுங்கியசொல் லியம்ப லானும்
சதியல்ல கனவகத்தி லறியா தானுஞ்
சாக்கிரத்தி லேயறிவு தருத லானு
மதிவல்லா ரிவ்வுடலுக் குள்ளே யான்மா
மன்னியிடு மென்றறைவர் வளைத்துந் தானே.

(இ-க) சேடமாகிய தேக சேட்டையைக் கொண்டு இதிலே ஒரு பொருளுளவாதலாற் செய்யுங் குறிகொண்டே சீவனுண்டென்றது. (3)

(நான்காம் சூத்திரம்)

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

(இ - க) அந்தக்கரணங்கள் உயிருடன் கூடினலன்றித் தொழிலில்லாத படியால் அந்தக் கரணங்களுக்கு வேருய் உயிருண்டு; மலமறைப்பால் உயிருக்கு அறிவில்லை; உயிர் மூன்றவத்தைப்படும். ஆக 3

(திருவிருத்தம்)

வளைத்தந்தக் கரணங்க ளுன்கின் வேருய்
மந்திரியு மரசனும்போன் மருவிச் சேர்ந்து
கிளைக்கின்ற மலத்தின் மறைந்திச்சா ஞானக்
கிரியைதனை யுடையனுமாய்க் கெழுமி யாங்கே
விளைக்கின்ற வஞ்சவத்தைப் படுவ ளுகி
வேந்தனுடன் மந்திரிக்கு வினைவந் துற்ரு
லிளைக்கின்ற திருவாக்கு மொக்கு மாபோ
லேகவுயி ராய்ப்பிரிந்து மிருக்குந் தானே.

(இ - க) ஆணவ மலத்தில் பிரிவொடு கரணமும் தானும் கலந்துரைத்தது. (4)

(ஐந்தாம் சூத்திரம்)

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தளந் தறியா வாங்கவை போலுந்
தாந்த முணரிற் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

(இ - க) உயிராலே தத்துவங்கள் தொழிலறியும்; அரனலே உயிர்களறியும். ஆக 2

(திருவிருத்தம்)

இருந்தறியுஞ் சத்தாதி விடைய மைந்து
மிந்திரியந் தானறியா வான்மா வாலே
திருந்தவறிந் திடுமந்த வான்மாத் தானும்
சிவனுடனே சேர்ந்தறியு மவத்தை சேர்த்தாற்
கரந்துடனுஞ் சிவனவத்தைப் படுமோ வென்னிற்
காந்தம்ப சாசம்போலக் கலந்து நீங்கிப்
பொருந்தியபோ துடனுகி வேறு மாகிப்
போக்குவா வான்மாவைப் புரிவிப்பன் ருனே.

(இ - க) தன்னலே இந்திரியங்கள் அறியுமா போலத் தானும் சிவன் சன்னிதியில் இத்தன்மையன் ஆதலால்

எக்காலமும் தன்னை ஒழியவில்லாத இந்திரியம் போலச் சிவனை ஒழியவில்லாத பொருள் தானென்று தெளிதற் பொருட்டு இந்திரியங்கட்கு இவன் போல் இவனையும் அந்த மிலரனே ஆட்டுவ னென்றது. (5)

(ஆறும் சூத்திரம்)

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

(இ-க) உயிரறியப்பட்டதெல்லா மழியும்; அப்பிர மேயமாக வறிபவன் சிவன். ஆக 2

(திருவிருத்தம்)

புரிதரவே காணப்ப டாதென்னி லாகாயப்
பூவுமுயற் கோடுமெனப் புகல்வான் போலும்
விரிதரவே காணப்பட் டுள்ளதென்னின் மேவு
கடபடா தியென விளம்பல் வேண்டும்
கருதியவர் காணுத பொருளு மற்றுக்
காண்கின்ற பொருளுமவை கழிய நோக்கித்
தெரிதரவே யறியப்பட் டுள்ள தந்தச்
சிவமென்றே யறிந்தடைதல் சித்தி தானே.

(இ-க) விகாரப்படுமாகில் சகலனென்றும், அவிகாரப்படுவனுமாகில் பாடாண் முத்தியென்றும், இவை இரண்டு மற்ற விடம் பொதுநிலை யென்றும், அந்தப் பொதுநிலையில் நின்றால் தன்னை அறியாமல் தனக்குள்ள செயல் மாளு மென்றும், தற்போத மொழிந்த விடத்துத் தான் சுத்த சைதன்னியனுய்ச் சிவனைப் பெறுவன் ஆதலால் அவ்விடத் துப் பாவாபாவங் கடந்தது. பாவமென யோவா வின்பத் துறுதி உரைத்தது. (6)

(ஏழாம் சூத்திரம்)

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலில்
சத்தே யறியா வசத்தில தறியா
விருதிற னறிவுள விரண்டலா வான்மா.

(இ-க) அரன் பாசமனுபவியான்: பாசம் அரனை அனுபவியாது: உயிரிரண்டையு மனுபவிக்கும். ஆக 3

(திருவிருத்தம்)

சித்திருந்த சன்னிதியிற் சேடமோ வில்லைச்
சேடமறியாச் சித்தினுக்கு மறிய வேண்டா
வொத்தசட மென்றசகந் தனக்குஞ் சித்தென்
றுரைக்கின்ற சிவன்றனக்கு முண்மையறிந் [துளனாய்
நித்தமெனுஞ் சிவத்துடனே சேடமோ கூடி
நில்லாதென் றுண்மையினை நிகழ்ந்து நோக்கி
அத்துவித வேறுபா டறியான் யாவ
னவனேயவ் வான்மாவை யறிந்து ளானே.

(இ-க) பெத்தத்திற்கூடி நிற்கிலும் அந்தப் பெத்த மானது நாமல்லவென்றும், முத்தியிலேகூடி நிற்பினும் அடியானாய் நிற்பதொழிந்து சிவமாக மாட்டானென்று அருளாலே கண்டு அனுபவங் குலையாமல் நிற்கையால் மலத்தையும் சிவத்தையும் வகுப்பனென் றுரைத்தது. (7)

(எட்டாம் சூத்திரம்)

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மிலாமை யரன்கழல் செலுமே.

(இ-க) உயிர்க்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்; உயிர்க்குச் சற்குருவாய் வருவது அரன்; உயிர் பஞ்ச விந்திரியங்களிற் பற்றுகையினாலே தன்னையும் அறியான்; இந்திரியப்பற்றற்றால் தன்னை யறியும். ஆக 4

(திருவிருத்தம்)

அறியாம லிந்திரிய வேடரிடத் தணைந்த வான்மாவாம்
புதல்வ னைமுன் னறிவிப்பான் போலக்
குறியான குருபரன் வந்தருளி னாலே
குறிப்புணர்ந்த வேடருடன் கூடா னாகி
நெறியான கருவி கடன்படையுந் தானே
நிருபனு மாய் நின்றபடை நிலைமைகண்டு
செறிவான தறிந்துபழஞ் செல்வ மான
சிவனடிக்கே சென்றணைவன் சீவன் றானே.

(இ - க) ஞானனந்த ஐசுவரியத்தைப் பாழாக்கி மாயா போகத்தை ருசிப்பித்து நிற்கப்பட்ட கருவி சாலங்களாகிய உபாதிகளைப் பிரித்துக் காட்டி உறவுபோல நிற்கும் பகையை உணர்த்தினது. (8)

(ஒன்பதாம் சூத்திரம்)

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

(இ - க) உயிர் ஞானத்தினலே அரனைக் காணும்; பாசம் பற்றற்ருல் அரன் உயிரில் வெளிப்படுவன்; பஞ்சாக்கர சபம் பண்ணினல் வாசனுமலம் போம். ஆக 3

(திருவிருத்தம்)

சீவனுந்தன் ஞானக் கண்ணலே யந்தச்
சிவனைக்கண் டிந்தக் கண்ணலே கண்ட
பாவநெடுங் கானலைவிட் டிறைவன் செம்பொற்
பாதமலர்க் கீழிருந்து பிரம ஞான
மேவியவஞ் செழுத்ததனை யருளா லுன்னி
மேலிருளு மாணவமுங் கீழே யாக
யாவையுமா மருளின்ப மேலே யாக
வின்னிலையே யன்னிலையா யெய்து மன்றே.

(இ - க) உயிரையும் சிவத்தையு மொழித்தவை யெல்லாம் மயறரும் பொய்யென வகுத்தமை யதனல் அமுத போசனற்குப் புருடனுகர்ச்சி பொருந்தாது போலத் தனியஞ்செழுத்தாந் தன்மையற்கு உண்மை யனுபவ மொழிந்தல்லவை யென்றது. (9)

(பத்தாம் சூத்திரம்)

அவனே தானே யாகிய வந்நெறி
யேக ஞகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னெடு வல்வினை யின்றே.

(இ - க) சிவனுடன் ஒன்ருகி நிற்றல்; உன்ருெழில் எல்லாம் அரன் பணி. ஆக 2

(திருவிருத்தம்)

எய்தாத பரசிவத்தோ டொன்றுபட்டா லிவனவனும்
அதுவொழிந் திட்டிவ னவனு காதே
செய்திகளா மைவகையு மவனுக் காக்கிச்
சிவானுபவ மொன்றுமே யிவனுக் காக்கி
மைதிகழு மூலமலந் தானுய் நிற்கும்
வல்லிருளாங் கேவலத்தின் மாயா கன்மம்
எய்தரிய வாறுபோற் சிவமே யாகி
எல்லையிலாப் பேரின்ப மிசைவன் றனே.

(இ-க) சாணகம் திருநீருனல் திரும்பச் சாணகம் ஆகாதே போலும், அரையுண்ட சந்தனக்குழம்பு குறடாகா தாற் போலவும், கடைந்தெடுத்த வெண்ணெய் தயிராகா தாற் போலவும், தானில் வகையிற்ருன் சிவமேயான வனுபவ வற்புத நிலையாய்ப் பொல்லா மலத்தைக் கழித்து அருள் புதல்வனெல்லாஞ் சிவமா யிருப்பனென் றுரைத்தது. (10)

(பதிேனுராம் சூத்திரம்)

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

(இ-க) ஞானிக்கு வருகிற விஷயங்களை அரனே அனுபவிப்பன். அரனை மறவாமல் இருந்தால் அவனிடத்தில் ஐக்கியமாய்ப் போவன். ஆக 2

(திருவிருத்தம்)

இசையவரு கண்களுக்குத் தெரிசிப் பானு
யிருக்கின்ற வான்மாப்போ லான்மா வுக்கும்
அசைவி லருட்சிவன் றெரிசிக்கு மென்பதறிந்
தணுவி னுபகார யடியிணையிற் சிக்கக்
கசியவரு மனத்தி னுடன்கம்பித் தாகங்
கண்ணருவி சோர வுரை கழன் றுஞானப்
பசையினராய் மெய்புளகக் காடு மெய்திப்
பாவிப்பாய் மேவியிடும் பரவசமாய்த் தானே.

(இ - க) தற்போதத்திலுண்டாகிய வைராக்கியமும், சிவனிடத்திலுண்டாகிய ஆராத போதமும், சுகாதீதத்திலுண்டாகிய தன்னழிவும், இந்த மூன்று வகையும் சிவனுள்ளளவுங் கெடாமற் பெறுவான் ; ஆதலால் ஞானம், பத்தி, வைராக்கியம் இவை ஞானிகட்குண்டென் றுரைத்தது. (11)

(பன்னிரண்டாம் சூத்திரம்)

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

(இ - க) மும்மலங்களையுங்களைக ; ஞானிகளுடனே கூடுக ; சிவஞானிகளையும் சிவனையும் சிவனெனவே தெரிய வழி படுக ; வழி படாமையை ஒழிக. ஆக 4

(திருவிருத்தம்)

மேவரிய மெய்ஞ்ஞானத் தலைவ ராய
வித்தகரை யடைந்தவர்தம் வேட முண்மைத்
தேவமருஞ் சிவலிங்கந் தேசி கன்றன்
றேய்க்கவொண்ணு மும்மலத்தைத் தேய்க்க [வின்ப
மூவகையால் நம்பொருட்டால் வந்த தென்று
மூர்த்திகளால் வினைகுருவால் மாயை மூலம்
பாவனையிற் சிவபூசை யதனாற் பாற்றப்
பரனருளாற் சிவானுபவம் பதியுந் தானே.

(இ - க) கோயிலும் வேடமும் குருவும் மெய்ப்பொருளொன்று யனுபவராக்கையிற் கதியினும் பொருட்கதியினும் பிரிவறக் கண்டே யாரருட் சிவமா யழிவரென் றுரைத்தது. (12)

இவ்வனுபூதிப்படியே வழி நூலாக சூள திருவிருத்தம் அருணந்தி சிவாச்சாரியா ரருளிற்று.

முற்றும்.

---

## 7. திருத்தொண்டடிகள் பெறும் அன்பு விலாசப் பெரும் பயனுன அனுபூதி எடுத்துக் காட்டல்

திருச்சிற்றம்பலம்

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

திருச்சிற்றம்பலம்

(பெரியபுராணம் 1)

இதன் கருத்துரை :—

பரமசிவன் எடுத்தருளும் திருமேனிகளாகிய லயம் என்ற நிட்களத் திருமேனியையும், போகம் என்ற சகளா களத் திருமேனியையும், சகளம் என்ற அதிகாரத் திருமேனியையும் மனம், வாக்கு, காயம் ஆகிய திரிவித கரணங்களாலும் உணர்ந்து வாழ்த்தி வணங்குவோம் என்பதை நிரனிரைப் பொருளாக உணர்த்துதல் நுதலிற்று.

*அந்வயம்

நிலவுலாவிய நீர்மலி வேணியன், மலர் சிலம்படி உலகெலாம் உணர்ந்து, அலகில் சோதியன், ஓதற்கரியவன், உலகெலாம் மலர் சிலம்படி வாழ்த்தி, அம்பலத்தாடுவான், உலகெலாம் மலர் சிலம்படி வணங்குவாம்.

பதவுரை

நிலவுலாவிய நீர்மலி வேணியன் (எ - து): நிலாப் போலும் பரிபூரண வியாபகத்தையும் தட்பம் மிகுந்த விளக்கத்தையுமுடைய அருவமாகிய லயத் திருமேனியையுமுடையவனது,

மலர் சிலம்படி (எ - து): எங்கும் விளங்கும் மூலமாகிய அருட்பரையை,

---

*அந்வயமும் பதப்பொருளும் முன்பின் முரண்படும்படி அமைந்துள்ளன. ஏட்டிற் கண்டவாறே அவை பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

உலகெலாம் உணர்ந்து (எ - து) : எல்லா உலகங்களிலும் நிறைந்த சிவம் என்னும் அப்பரையாகிய மனத்தால் தியானித்து,

ஓதற்கரியவன் உலகெலாம் மலர் சிலம்படி வாழ்த்தி—சொல்லு வதற்கரியவனென்ற பரையாகிய சொல்லால் பணிவு தோன்ற வாழ்த்தி,

[1]அலகில் சோதியன் (எ - து) : (இதற்குப்பொருள் எழுதப் படவில்லை)

அம்பலத்தாடுவான்—பொதுவென்ற திருவம்பலஞான போதாகாச சிற்சபையில் இடைவிடாது அனவரதமும் நடிக்கும் அதிகாரத் திருமேனி யையுடையவனது,

உலகெலாம் மலர் சிலம்படி வணங்குவாம்—எங்கும் விளங் கும் அருட்பரையை வணங்குவாம்.

அதாவது, அப்பரையாகிய தலையால் நமக்காரம் பண் ணினேன் என்றவாறு.

அகலவுரை

ஒரு பொருளாகிய பரங்கருணை யென்ற பரையினலே இச்சா ஞானக் கிரியா சக்திகளாகிய [2]நவந்தர போத, [3]லய போகவதிகாரமாகிய மூன்று வடிவுகளை எடுத்துக்கொண்டு சுத்தான்மாக்களுக்கு அநுக்கிரகம் பண்ணுகிறபடியினலே அம்மூன்று மூர்த்தங்களையும் தனக்குக் கொடுத்த மூன்று கரணங்களாகிய மனம், வாக்கு, காயங்களால் வாழ்த்தி வணங்குவாமென்றருளிற்று. நிரனிரைப் பொருளாகக் கொள்க.

உலகெலா மலர் சிலம்படி என்ற பதத்தை மூவிடத்தும் கூறுக. உலகெலாம் என்பதை எல்லா உலகமென்று

1. அளவற்ற ஒளியையுடையான்.
2. உருவம் 4 ; அருவம் 4 ; உபயம் 1.
3. லய, போக, அதிகாரமாகிய மூன்று வடிவுகள்.

மாறுக. உணர்ந்து வாழ்த்தி வணங்குக என்பது மன வாக்குக் காயங்களை அவாவி நின்றது. ஓதற்கரியவன் எனவே உணர்தற்கும் வணங்குதற்கும் அரியவனென்பது தானே பொருள் தரும். உணராமலுணர்ந்து, வாழ்த்தாமல் வாழ்த்தி, வணங்காமல் வணங்கி என்க.

நுட்பஉரை

ஓதற்கரியவனாகி, நீர்மலிவேணியனாகி, அலகில் சோதியனாகி, அம்பலத்தாடுவானாகிய பரம்பொருளினது சிலம்படி உணர்ந்து வாழ்த்தி வணங்குவாம். அளவுபடாத பிரகாசத்தையுடைய அருவுருவாகிய போகத்திருமேனியையுடையவனது எங்கும் விளங்கும் மூலமாகிய அருட்பரையை ஓதற்கரியவனென வாழ்த்தி வணங்குவாம் எனக் காண்க.

எச்சவுரை

யாம் என்னும் எழுவாயும் இப்புராணம் நிறைவேறும் பொருட்டு என்னும் செயப்படு பொருளும் எஞ்சி நின்றன. ஓதற்கரியவன் என வாழ்த்தி எனவே, உணர்தற்கரியவனென உணர்ந்து, வணங்குதற்குரியவனென வணங்கி என்க. இதற்கிலக்கணம் விரிக்கிற் பெருகும்.

இன்னுமொரு சம்பிரதாயப் பொருள் :—

அலகில் சோதியன், உலகெலாமுணர்ந்தோதற்கரியவன் என்னும் பதங்களை விசேடணமாக்கி, அம்பலத்தாடுவான் என்பதற்கு நீர்மலி வேணியன் என்னும் பதத்தைச் சொரூப தடத்தமாக்கி இரண்டுமுடைய பொருளை வணங்குவாமென்று கொள்ளலாம்.

இனி, பெரியபுராணம் முழுதும் உரையெழுதி முடியாதென நாயன்மார்கள் திருத்தொண்டின் அன்புச் சுருக்க அனுபூதியாவன :—

பரம்ப ரையாகப் பரானந் தநடன
தரிசனம் செய்து மனைவிநீல கண்டமென்னும்,
நின்மல னாணையை நெடுநாட் காத்தும்[1]
தலைவனடி யாரென்று தாரத்தை ஈந்தும்,[2]

1. திருநீலகண்ட நாயனர் 2. இயற்பகை நாயனர்

முளைவாரி யன்ன முதல்வற் கீந்தும்,[3]
பகையென் றறிந்தும் வேடம் பாதுகாத்தும்,[4]
நாய னடிமைக் குநாம்புற கென்றும்,[5]
தலைவி மைந்தன் தன்னொடு கோவண
நிலைமை பெறவே துலையி லேறியும்,[6]
திருமலர் சிதறும் தந்தியைச் செகுத்தும்,[7]
முன்னிலா வேட முன்பு கண்டு
தன்னுயிர் வாளொடு நின்று தந்தும்,[8]
காளத்தி யார்க்குத்தன் கண்ணை அப்பியும்,[9]
தாலிமாறிக் கலவ(?) வடந் தந்தும்,[10]
பஞ்சவடிக்கு மகளைம் பாலைக் கொடுத்தும்,[11]
கமரில் மாவடுவிழக் கண்ட மரிந்தும்,[12]
பஞ்சாக்கரம் வேயங் குழலாற் பகர்ந்தும்,[13]
முதலவனுக் காரமாய் முன்கை யரைத்தும்,[14]
புகலூ ரற்குப் பூப்பணி புரிந்தும்,[15]
உருத்திர மோவா தோதிப் பயின்றும்[16]
கனலின் மூழ்கிக் கதிநடங் கண்டும்,[17]
ஆடை யுலராது கனசிலை முட்டியும்,[18]
தலைவன் பணிக்காய்த் தாதையைச் செகுத்தும்,[19]
கற்புணை யாகக் கடலி னீந்தியும்,[20]
மாணிக்குத் துணையாய் யமனை வதைத்தும்,[21]
தம்பிரான் றோழற்குத் தான்முன் னேகியும்,[22]
கயிலையிற் றலையால் கண்டு நடந்தும்,[23]

---

3. இளையான்குடிமாற நாயனர்
4. மெய்ப்பொருள் நாயனர்
5. விறன்மிண்ட நாயனர்
6. அமர்நீதி நாயனர்
7. எறிபத்த நாயனர்
8. ஏனாதி நாயனர்
9. கண்ணப்ப நாயனர்
10. குங்கலியக்கலய நாயனர்
11. மானக்கஞ்சாற நாயனர்
12. அரிவாட்டாய நாயனர்
13. ஆனாய நாயனர்
14. மூர்த்தி நாயனர்
15. முருக நாயனர்
16. உருத்திரபதி நாயனர்
17. திருநாளைப்போவார் நாயனர்
18. திருக்குறிப்புத்தொண்ட நாயனர்
19. சண்டேசுவர நாயனர்
20. திருநாவுக்கரசு நாயனர்
21. குலச்சிறை நாயனர்(?)
22. பெருமிழலைக்குறும்ப நாயனர்
23. காரைக்காலம்மையார்

அடியார் பணிக்கிடை யூறுகு மென்று
விடமுண் மகனை வேரு யொழித்தும்,[24]
பாணற் குறைவிடம் யாகத்திற் பரிந்தும்,[25]
நீரால் விளக்கு நெறியில் வைத்தும்,[26]
அடியா ருறைவிட மனலிடு மமணர்
முடியக் கழுவின் முனையி லேற்றியும்,[27]
சிவனைத் தூது செலுத்து மாரூரற்
குவமையில் நட்பா யுவந்து வாழ்ந்தும்,[28]
திருவருண் மூல சிவாகம முப்பொருளை
மூவாயிரத் தமிழ் மந்திர மருளியும்,[29]
கண்பெற் றமணர் கண்ணிழப் பித்தும்,[30]
சூதில்வென் றடியார் சொல்பணி புரிந்தும்,[31]
மகம்புரிந் தூரற்கு வாய்த்த நட்பாகியும்,[32]
பரனைமறந் தோமென்று பதைத்தோர்
[கல்லெறிந்தும்,[33]
யாகஞ் செய்பல னரற்கு நல்கியும்,[34]
தலைவ னுண்ண மகன் றலை யரிந்தும்,[35]
தலைவன் ருட்சிலம்பு தவரு து கேட்டும்,[36]
சிவபணி புரிவோர் திறமறிந் தளித்தும்,[37]
தலைவ னடிமுடி தரித்துல காண்டும்,[38]
சங்க மிருந்தான் றன்னைப் பாடியும்,[39]
சடைத்தலை யொடுமனல் தன்னில் மூழ்கியும்,[40]
தூர்த்தற் கிரட்டி பொன்றுயர றக் கொடுத்தும்,[41]
விலையிலா மீனரன் றனக்கென விடுத்தும்,[42]

---

24. அப்பூதியடிகள் நாயனர்
25. திருநீலநக்க நாயனர்
26. நமிநந்தியடிகள் நாயனர்
27. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்
28. ஏயர்கோன்கலிக்காம நாயனர்
29. திருமூல நாயனர்
30. தண்டியடிகள் நாயனர்
31. மூர்க்க நாயனர்
32. சோமாசிமாற நாயனர்
33. சாக்கிய நாயனர்
34. சிறப்புலி நாயனர்
35. சிறுத்தொண்ட நாயனர்
36. சேரமான்பெருமாள் நாயனர்
37. கணநாத நாயனர்
38. கூற்றுவ நாயனர்
39. பொய்யடிமையில்லாத புலவர்
40. புகழ்ச்சோழ நாயனர்
41. நரசிங்கமுனையர்
42. அதிபத்த நாயனர்

அடியார்பத நீரளி யாக்கையைப் புரிந்தும்[43]
விளக்கெண்ணெ யின்றி மிடற்றினை யரிந்தும்[44]
அன்பர் நிந்தை செய்பவர்நா வரிந்தும்,[45]
பதிதொறு மணைந்து வெண்பாவொன்று
[பாடியும்,[46]
புற்கு(றை) தனக்குப் புனைமுடி யெரித்தும்,[47]
அரசரைப் பாடி யடியார்பணி செய்தும்,[48]
பாரி மாணியாற் பரன்பணி புரிந்தும்,[49]
அந்தரி யாக மளவில புரிந்தும்,[50]
அரசர் பகைவென் றரன்பணி புரிந்தும்,[51]
மூக்குப் புறகென முன்கை யறுத்தும்,[52]
கள்வ னெனவடி யாரைக் கொடுவரக்
கொள்ளையாய்ப் பலபண் டாரங் கொடுத்தும்,[53]
முதல்வ னவன்மலர் மோந்தமூக்கை யறுத்தும்,[54]
பரனரு ளாலே காசு படைத்தும்,[55]
பானெல் லுண்டவள் பாலருந் தியதொன்
றருமை மழவை வாள்தனி லேற்றும்,[56]
பத்தராய்ப் பணிந்தும் பரமனைப் பாடியும்,[57],[58]
சித்தஞ் சிவன்பாற் றிருந்த வைத்தும்,[59]
திருவா ரூர்த்திரு வெல்லைக்குட் பிறந்தும்,[60]
முப்பொழுது மரன் பூசை முயன்றும்,[61]

---

43. கலிக்கம்ப நாயனர்
44. கலிய நாயனர்
45. சத்தி நாயனர்
46. ஐயடிகள்காடவர்கோன் நாயனர்
47. கணம்புல்ல நாயனர்
48. காரி நாயனர்
49. நெடுமாற நாயனர்
50. வாயிலார் நாயனர்
51. முனையடுவார் நாயனர்
52. கழற்சிங்க நாயனர்
53. இடங்கழி நாயனர்
54. செருத்துணை நாயனர்
55. புகழ்த்துணை நாயனர்
56. கோட்புலி நாயனர்
57. பத்தராய்ப்பணிவார்
58. பரமனையேபாடுவார்
59. சித்தத்தைச்சிவன்பாலே வைத்தார்
60. திருவாரூர்ப்பிறந்தார்
61. முப்பொழுதும்திருமேனி தீண்டுவார்

முத்தி விதிப்படி முழுநீ றணிந்தும்,[62]
பரம னடியைப் பரமெனச் சார்ந்தும்,[63]
மனத்தா லாலயம் வருந்த வகுத்தும்,[64]
மானி யாகிச் சைவம் வளர்த்தும்,[65]
அடியார்க் காடை கோவண மளித்தும்,[66]
சிலந்தி சோழனுய்த் திருப்பணி செய்தும்,[67]
பலகை பெற்றுயாழ் பாடிமணைத் தணைத்தும்,[68]
நாவலூர் நம்பியை நலமுற நல்கியும்,[69]
சடைய நாயனர்தந் தேவி யாகியும்,[70]
திருந்துமிவ் வுலகிற் சைவம் விளங்கப்
பரிந்து தொண்டத் தொகை பாடியும்[71]

இவ்வகை அன்பு செய்த நாயன்மார்கள் அருளின்பமெனக் காண்க.

## 8. பசுகரணம் சிவகரணமான திருவருள் அளவை அனுபூதி

இனி, சிவாகமத்தில் அருளிய அளவைப் பிரமாணத்தின் பயனை நாயன்மார்கள் அன்புருவாய்ப் பிரத்தியக்ஷமாகக் கண்டது.

**வேதத்தில்**

[1]காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன்
மனம்புகுந்தாய் கழலடி
பூண்டுகொண் டொழிந்தேன்
புறம்போயி னலறையோ

(திருநாவுக். திருவாரூர். IV : 20)

என்றமையானும்,

62. முழுநீறுபூசியமுனிவர்
63. அப்பாலுமடிச்சார்ந்தார்
64. பூசலார் நாயனர்
65. மங்கையர்க்கரசியார்
66. நேச நாயனர்
67. கோச்செங்கட்சோழ நாயனர்
68. திருநீலகண்டயாழ்ப்பாணர்
69. சடைய நாயனர்
70. இசைஞானியார்
71. சேக்கிழார்

1. காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன் மனம்புகுந்தாய் கழலடி பூண்டுகொண் டொழிந்தேன் புறம்போயி னலறையோ ஈண்டுமாடங்கள் நீண்டமா ளிகைமேலெழுகொடி வானி ளம்மதி தீண்டிவந் துலவுந் திருவாரூ ரம்மானே.

பரமசிவனுக்கு அங்கம், பிரத்தியங்கம், உபாங்கங்கள் எல்லாம் அருளுருவன்றி வேறில்லையென்று முப்பிரமாணங்களால் உணர்த்துகின்றமையாலும், காண்க.

வண்ணமாகிய ஈசனுக்குப் பிரத்தியட்சப் பிரமாணமாகிற திருமேனி, சூரியனுக்குக் கிரணமே போலல்லாது வேறல்லாத அருளே திருமேனி. 'மின் போலும்' என்னும் அநுமானத்தால், அங்கமாகிய பொருட்கபேத அருட்சடையும், 'வெள்ளிக்குன்றம்' என்னும் ஆகமப் பிரமாணத்தால் உபாங்கமென்னும் வாகனம் உடையதென்றும், பேதவபேத, பேதாபேத திட்டாந்தர முப்பிரமாணங்களாற் கண்ட காட்சியே பொருளெனக் கூறியது.

பொருள் என்றது சூரியன் அபேததிட்டாந்தரம்; மின் என்றது பேதாபேததிட்டாந்திரம்; குன்றமென்றது பேதத் திட்டாந்திரம்.........................................மூன்று ஏதுவில் இந்த மூன்று பக்கமுமாயிற்று; காட்சியினுல் நான்குமாயிற்று. சிவாகமத்திலே மூன்றுமாயிற்று. சகள நிட்கள சகளாகள பரமுமாயிற்று. லயபோக அதிகாரமுமாயிற்று. முப்பொருளும் மூன்று கர்த்தாக்களுமாயிற்று.

அளவைகள்

அளவைகளாவன—காண்டல், கருதல், உரை, அபாவம், பொருள், ஒப்பு, ஒழிவு, உண்மை, ஐதிகம், இயல்பு எனப் பத்தாகும். இவைக்கு மேலும் விரிவாக அநேக பிரமாணங்களுண்டு. இந்தப் பத்தும் மற்றுமுள்ள அளவைகளும் [2]முன் சொன்ன மூன்றுக்குள் அடங்கும். அம்மூன்றும் காண்டலுக்குள் அடங்கும். இந்தப் பத்துக்கும் பிரதிபதம் என்னவென்றுல், காண்டல் - பிரத்தியக்ஷம், கருதல் - அனுமானம், உரை - உபதேசம், அபாவம் - இல்லாமை,

---

1. காண்டல் - பிரத்தியக்ஷம். கருதல் - அனுமானம். உரை - ஆகமம். அபாவம் - அனுபலப்தி. பொருள் - அர்த்தாபத்தி. ஒப்பு - உவமானம். ஒழிவு - பாரிசேஷியம். உண்மை - சம்பவம். ஐதிகம் - உலோகவாதம். இயல்பு - சுவபாவம்.

2. முன்சொன்ன மூன்று - காண்டல், கருதல், உரை.

பொருள் - அருத்தாபத்தி, ஒப்பு - உவமம், ஒழிவு - மீட்சி, மொழிதல், உண்மை - உள்ளது, ஐதிகம் - உலகவழக்கு, இயல்பு - சுபாவம்.

இதற்கு அர்த்தம் :—

பிரத்தியட்சமாவது - பொறிகளைக் கொண்டு புலன்களை அறிதல்.

கருதலாவது - அனுமானத்தால் அனுமேயத்தை அறிதல்.

உரையாவது - தந்திர மந்திர உபதேசங்களால் ஆகமப்படி யறிதல்.

அபாவமாவது - இல்லாதது—முயற்கோடில்லை என்றால் தானுமில்லை என்றே கோடல்.

பொருளாவது—அர்த்தாபத்தி - கங்கையிற் சேரி என்றால், அதன் கரையில் என்றறிதல்.

ஒப்பாகிய உவமமாவது - திருட்டாந்தரத்தால் தாட்டாந்தரத்தை அறிதல்.

ஒழிவாகிய மீட்சி மொழியாவது - மூவரில் இருவர் கள்ளரல்லர் என்றால், ஒருவர் கள்ளர் என்றறிதல்.

உண்மையாகிய உள்ளதாவது - சருக்கரைக்கு இனிப்புள்ளதென்றறிதல்.

ஐதிகமாகிய உலகவழக்காவது - ஒரு மரத்திற் பேயுண்டென்றால் தானுமுண்டென்று கோடல்.

இயல்பாகிய சுபாவமாவது - அக்கினிக்குச் சூடு உண்டென்று அறிதல்.

இவ்வகைப் பத்தையும் முறையே காண்க.

சிவம்

இவற்றைத் திரிபதார்த்தத்திற் சொல்லுமிடத்து இந்தப் பத்தளவைகளும் ஒரு பதார்த்தத்துக் கன்றி வெவ்வேறு சொன்னதல்ல. ஒரு பதார்த்தமாவது இப்பத்தைவிட

வேறன்று. பத்துக்குள்ளும் முதற்சொன்ன பிரத்தியட்சப் பிரமாணத்துக்கே எல்லா அளவைகளாலும் தெளியத்தக்க சம்பிரதாய அனுபூதியெனக் காண்க.

ஆனால், இந்தப் பிரத்தியட்சமாவது நித்தியமாய், அநாதியாய், அழியாததாய், வியாபகமாய் இருக்க வேண்டும். இப்படியிருக்கிற பொருள்களை இப்பத்துப் பிரமாணங்களாலும் தெளிய வேண்டும். இப்படிப்பட்ட பொருள்கள் யாவை எனில், அவை :—சிவம், அருள், ஆவி, மலம், மாயை, கன்மம். இவ்வாறு பொருள்கள் ஒவ்வொன்றுக்கும் இப்பத்தளவைகளுமுண்டு. அவற்றை அறியுமிடத்துச் சிவஞான அனுபூதி விளக்கச் சம்பிரதாயமாவன :—

சிவத்துக்குப் பிரத்தியட்சம் முதலியன

சிவத்துக்குப் (1) பிரத்தியட்சப் பிரமாணம் மகாலிங்கம். காணப்பட்ட உருவத்தைப் பிரமத்துக்குப் பிரத்தியட்சம் சொன்னது ஏது நிமித்தமென்னில், தரிசித்தவர்களுடைய மனதைக் கவரும் தன்மையாகிய (2) அனுமானத்தாற் சொல்லலாம். அப்படிச் சொல்லுவதற்கு விதி என்னவென்றால், காண்டலாலும் கருதலாலும் தெளிவில்லாத சந்தேகத்துக்கு உரையாகிய (3) ஆகம உபதேசத்தால் அறியலாம். அப்படி அறிகிறதை, தோன்றாமல் பண்ணிக்கொண்டிருக்கிற (4) அபாவமாகிய யான் எனது என்னும் பொய் ஒன்று தடையாகையாலும், அறியலாம். ஆனால், தோன்றப்பட்டிருக்கிறதே என்றால், மகாலிங்கத்தினிடத்திலே சிவம் பிரகாசித்திருக்கிறது என்கிற (5) அர்த்தாபத்தியால் அறியலாம். எப்படிப் போலவென்னில், சூரிய விம்பத்தினிடத்திலே கிரணங்கள் தோன்றின போலும் என்ற (6) உவமையாலும் அறியலாம். ஆனால், மற்றிடத்தில்லையோ என்றால், முப்பொருளைச் சொல்லி, இருபொருள் அல்லவென்று, நின்ற பொருளேபோல, ‘உயிர்களுடைய பசுபாசத்தன்மை நீங்கிற்று’ என்ற விடத்தில், நின்றது பதி என்றதுபோல, உலகபதார்த்தமெல்லாம் விஷயமாயிருந்தாலும் சிவக்குறி விஷயமன்று என்று காண்டல் போலும், (7) ஒழிபு: ‘ஆனால், இது எப்போது உண்டானது?’ என்றால் ‘அநாதியே உள்

ளது', (8) உண்மை: 'ஆனால், ஒருவர் பிரதிட்டை பண்ணி இருப்பரே' என்றால், எப்படி ஒப்புக்கொள்கிறது? உலகம் முழுமையும் இதுவே பொருளென்று பெத்தர் முத்தர் இருவரும் ஒப்புக் கொண்டிருக்கிறபடியாலே இந்த மூர்த்தமே பொருளாகும், (9) ஐதிகம்: ஆனால், ஒருவர் பிரதிட்டை, அபிஷேகம், ஆவாகனம், நித்திய நைமித்தியம் நடக்க வேண்டியது, நடக்கிறது, நடந்தது ஒரு காலங்களிலோ அல்லவோ என்றால், முன்னுள்ளதைப் பிரதிட்டை, ஆவாகனம், பூசை பண்ணித் தான் பார்த்தறிந்ததல்லாமல் புதிதன்றே; அப்படி என்றுமுள்ள தன்மையாலும் பரம் பொருளென்று, இந்தப் பிரத்தியட்சமான சிவலிங்கத்தைத் தெளிதல். (10) இயல்பு.

இப்பத்தளவைகளாலும், இன்னும் இவற்றில் விரிந்த அளவைகளாலும் புலப்பட வேண்டும்.

"அருளினால் ஆகமத்தையறியலாம் அளவினாலும் தெருளலாம் சிவனை" (சிவஞான சித்தி. பாயிரம் 5) என்றபடி, சிவகரணமாய் நின்று அருள் வகையால் தரிசிக்கும்படி அளவையென அநேகமாயுள்ளவற்றுள் பத்தே சிறந்தவை. அப்பத்தும் மூன்றளவைகளுக்குள் அடங்கும்; அம்மூன்றுக்குள்ளும் காட்சி என்கிற பிரத்யக்ஷப் பிராமணமே முன்னிருத்தலால் அப்பிரத்தியக்ஷப் பிராமணத்துக்கே மற்றப் பிரமாணங்களையெல்லாம் அறிகருவியாக்கி அருளனுபவத்தால் அறியும்படி உரைத்தது.

அநாதி நித்தியமான அறுவகைப் பொருள்களையும் பிரத்தியக்ஷப் பிரமாணங்களில் வைத்து, மற்றுள்ள அளவைகளையெல்லாம் அறிகருவிகளாக அமைத்தல் எப்படியென்னில், சிவத்துக்குப் பிரத்தியக்ஷம் சிவலிங்கப் பெருமான்; அருளுக்குச் சக்தி திருமேனி; ஆன்மாவுக்குச் சுத்த தேகம்; ஆணவத்துக்கு அசுத்த தேகம்; சுத்தமாயைக்குத் தேவஸ்ரீ; அசுத்தமாயைக்குக் கற்புடைய ஸ்ரீ; கன்மத்துக்குப் போகஸ்ரீ; இப்படி ஆறு பொருள்களுக்கும் பிரத்தியக்ஷங்கள் உண்டு.

சிவப்பிரத்தியக்ஷமான சிவலிங்கப் பெருமானைத் தரிசனமானவுடன் ஐயமுற்றுத் திரிவு பெற்றபின் விகற்பித்து, உடன் தெளிதல் [1]சவிகற்பக் காட்சி; தரிசித்தவுடன் உள்ளபடி பரம்பொருளேயென்று அனுபவப்படுதல் [2]நிர்விகற்பக் காட்சி.

அக்காட்சியும் நாலுவிதம். அவற்றுள்,

[3]வாயிற் காட்சியாவது : சிவகரணமாய் நின்று அப்போது புலப்படும் பொருள்களாயுள்ள அட்ட மூர்த்த வடிவெல்லாம் இந்தத் திருமேனியே என்றல்.

[4]மானதக் காட்சியாவது : அப்புலன்களாகக் கண்ட அட்ட மூர்த்த வியாபகம் இச்சிவலிங்கத்தில் எட்டுத் திசையும் எதிர் எதிர் இனமாயிருக்கும் பரிபூரண வியாபகத்தை மனத்தால் தியானித்துத் தரிசித்தல்.

[5]தன்வேதனைக் காட்சி : அத்துவா, நியாசம், கும்பாபிஷேகம், நித்திய நைமித்திக பூசைகள் கருணையாற் கொண்டருளுகிறபடியால் இத்திருமேனியே பொருளென்றறிதல்.

[6]யோகக் காட்சி : செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் ஆறுமில்லாத பரம்பொருள் இத் திருமேனியே யென்று உணர்வோடும் தரிசித்தல்.

இப்படிப் புலப்படும் திருமேனிக்குத் தன்னியல்பு என்றும், பொதுவியல்பு என்றும் இரண்டுண்டு.

[7]தன்னியல்பாவது : அந்நிய சாதியாகிய பிருதிவியாதி மாயாகாரிய சிருட்டி யுருவமாகாமல் தன் சாதியாகிய இரத்

---

1. சவிகற்பம் - விகற்பத்துடனே கூடியது.
2. நிர்விகற்பம் - விகற்பமில்லாதது.
3. வாயிற் காட்சி - இந்திரியப் பிரத்யக்ஷம்.
4. மானதக் காட்சி - மானஸப்பிரத்யக்ஷம்.
5. தன்வேதனைக் காட்சி - ஸ்வஸம்வேதன ப்ரத்யக்ஷம்.
6. யோகக் காட்சி - யோக ப்ரத்யக்ஷம்.
7. தன்னியல்பு - தனதசாதாரண லக்ஷணம்.

தின சிலாதி வடிவுகளுமாகாமல் மூர்த்தி வித்தியாதேக மூலப்பரம் பொருளாகத் தரிசித்தல். அந்நிய சாதியாகிய மாயா உருவம் போலன்றித் தன் சாதியைப் போன்று ஆவுடையாரும் சிவலிங்கமான வடிவுமாகப் பரம்பொருளையே சிந்தித்தல்.

[1]பொதுவியல்பாவது, அந்நிய சாதியாகிய அஃறிணை வடிவுமாகாமல் தன் சாதியாகிய உயர்திணை வடிவாயிருப்பது.

இப்படிக் காட்சிப்பட்ட ஆன்மா என்னும் பொருளின் உண்மையைத் தனக்கனுபவப் பேருகப் பக்குவ ஆன்மாக்களுக்குப் போதிக்கும்போது, கருதலாகிய அனுமானத்தால் அனுமேயமாகிய ஆன்மாவின் உண்மையை அறிவென்ற ஏதுவினுலே 'இத்திருமேனி' என்று காட்டிய பக்கத்தாலும், அறிவை விளக்குகிற காரிய ஏதுவினுலே இத்திருவுருவே பொருள் என்கிற சபட்சத்தாலும், தரிசனமானவுடன், அறியாமை நீங்குகிற அனுபலத்தி யேதுவினுலே இவ்வுருவே பொருள் என்ற விபட்சத்தாலும், போதிக்கத் தரிசித்தல் தன் பொருட்டு அனுமானம். இப்படி உணர்ந்து தெளிந்து போதித்தல் பிறர் பொருட்டனுமானம்.

காட்சிப் பொருளெல்லாம் இப்படி இருவிதமாகவே யிருக்கும்.

இப்படிச் சிவகரணமாய் நின்று கண்ட காட்சி சிவப் பரம்பொருளைப் பரிபாகத்தோர்க்கு உணர்த்தும்போது [2]அனுமானத்தால் உணர்த்த வேண்டும்.

---

1. பொதுவியல்பு - சாதாரண லக்ஷணம்.

2. பக்க மூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்துணரத்
தக்க ஞானம் தன்பொருட் டாம் பிறர்தம் பொருட்டா மனுமானந்
தொக்க விவற்ருற் பிறர்தெளியச் சொல்ல லாகு மச்சொல்லு
மிக்க வன்னு வயத்திேைடு வெதிரேகச் சொல் லெனவிரண்டாம்

(சிவஞான சித். அளவை 8)

அவ் வனுமானம்,

(1) தன் பொருட்டனுமானம்
(2) பிறர் பொருட்டனுமானம்
(3) பூர்வக் காட்சியனுமானம்
(4) கருதலனுமானம்
(5) உரையாலனுமானம்

என ஐந்து வகை.

### 1. தன்பொருட்டனுமானம்

தன்பொருட்டனுமானம்: பிறர்க்குப் போதிக்கும்போது தான் அனுமித்தறிதல். அது (அ) [1]பட்சம், (ஆ) சபட்சம், (இ) விபட்சம் என மூன்று.

[2]இயல்பேது, காரியவேது, அநுபலத்தியேது என்ற மூன்று ஏதுக்களினுலே ஓரிடத்தில் நிகழ் பொருளைப் பார்த்து உணரத்தக்கது.

(அ) பட்சமாவது: தனக்கு அனுபவமாகிய சிவலிங்கத்தை ஒருவனுக்கு உணர்த்தல் நிகழும்போது வெகு திருமேனிகளையுடைய பரமசிவன் மிகுந்த விளக்கத்தால் இவ்விடத்தில் இத்திருமேனியாய் எழுந்தருளி யிருக்கின்றார் என்று காட்டல்.

(ஆ) சபட்சமாவது: புகையால் அக்கினியிருப்பதென்பது போலத் தரிசித்த ஆன்மாக்களை யெல்லாம் சித்த சுத்திப் படுத்தித் தெளிவித்த காரிய வேதுவினுலே இத்திருமேனியே பொருளென்று உணர்த்த வுணர்தல்

---

1. பக்கம், சபக்கம், விபக்கம்—இவை பக்க மூன்று. இவற்றுள் பக்கம்—துணி பொருட்கிடமாம். சபக்கம்—நிகர்பக்கம்—உவமை—திருட்டாந்தத்தானமாகிய இடமாம். விபக்கம்—நிகரில்பக்கம்—ஆன்ற பொருள் சென்றடையாத இடமாம். (சிவஞான சித். ஞானப். உரை சூ. 8.)

2. இயல்பு - இயற்கை. காரியம் - பண்ணப்படுவது. அநுபலத்தி - ஞானுபாவம்.

(இ) விபட்சமாவது : புகையில்லாததால் அக்கினியில்லை யென்றல்போல, சித்த சுத்தி விளக்கமில்லாத விடத்திற் சிவலிங்கமில்லை யென்னும் அநுபலத்தி ஏதுவினலே உணர்த்த உணர்தல்

2. பிறர்பொருட்டு அனுமானம்

இப்படி யுணரும் தன்பொருட்டனுமான அனுபவப் பொருள் பிறர்க்குப் போதித்துத் தரிசிப்பித்தல் பிறர் பொருட் டனுமான அனுபவப்பொருளாம்.

அப்படி அனுமித்துப் போதித்துத் தரிசிக்கும் சொல் லும் (அ) [1]அந்வயச் சொல் என்றும், (ஆ) [2]வெதிரேகச் சொல் என்றும் இருவிதம்.

(அ) அந்யவயச் சொல்லாவது : 'புகையால் அனலுண்டு; அடுக்களை போல்' என்றல்போல, மகாலிங்கச் சன்னி தானப்பட்டவர்களுக்குச் சித்த சுத்தம் உண்டாகும்; விளக்கும் விளக்கம் அத்திருமேனியிலிருக்கிறது; காண்பிக் கிற பிரகாசம் இருக்கிறபடியினலே, அவ்விடத்துச் சூரிய விம்பம் இருப்பது போல" என்றல்.

(ஆ) வெதிரேகச் சொல்லாவது : 'அனலில்லாவிடத்துப் புகையில்லை; தடாகம்போல" என்றதுபோல, 'சித்த சுத்தியும் விளக்கமும் இல்லாவிடத்துச் சிவலிங்கமில்லை; ஒளியில்லாவிடத்துச் சூரியன் இல்லைபோல்' என்றல்.

இவ் அந்வய, வெதிரேகச் சொல்லாற் போதித்தல் அறி தல்; அன்றிப் பின்னும் ஐந்து சொற்களாகவும் சொல்லு வார்கள். அவை '(அ)' [3]பக்கம், (ஆ) ஏது, (இ) திட்டாந்தம், (ஈ) உபநயம், (உ) நிகமனம் என ஐந்து.

(அ) பக்கமாவது :—இந்தத் தலத்தில் சிவலிங்கம் உண் டென்றறிதல்.

---

1. அந்வயம் - பொருத்தமுள்ளது.
2. வெதிரேகம் - பொருத்தமில்லாதது.
3. பக்கம் என்பதற்குப் பதிலாக பிரதிஞ்ஞை என்பர் ஞானப்ரகாசர் (சிவஞான சித். உரை சூ. 11)

(ஆ) ஏதுவாவது :—சித்த சுத்தி விளக்கத்தால் என்றறிதல்.

(இ) திட்டாந்தமாவது :—தரிசித்தோர் பாவத்தை ஒழித்தலால் சிவமுண்டு என்று அறிதல்.

(ஈ) உபநயமாவது :—தரிசித்துக் கொண்டே வருகிறவர்களுக்குப் புதிது புதிதாய் இன்பம் கொடுத்தலாற் சிவமுண்டு என்றறிதல்.

(உ) நிகமனமாவது :—மேல் தரிசனம் செய்வோர்களுடைய பிறப்பை ஒழித்தலாற் சிவமுண்டு என்றறிதல்.

### 3. [1]பூர்வக்காட்சியனுமானம்

ஒரு தலத்தில் மகாலிங்க மகிமை கேட்டவுடன் முன் தரிசனம் பண்ணின மகாலிங்கத்தின் விளக்கம் என்றறிதல்.

### 4. [2]கருதலனுமானம்

ஒரு தல மகாலிங்க மகிமை கேட்டவுடன், 'பூர்வத்தில் நான் செய்த புண்ணியத் தவப்பேறு இந்த மகிமை கேட்கவும், உள்ளபடி உணரவும், தரிசனம் செய்யவும் கிடைத்தது' என்று அன்பால் இன்பே அனுபவிப்பது.

---

1. பூர்வக்காட்சியனுமானம்—'போது நாற்றத்தாலறிதல் பூர்வக் காட்சியனுமானம்' (சித்தி : 12) புட்பத்தை மணத்தால் தெரிதல் ; முன்னும் பின்னும் பிரத்தியக்ஷ யோக்கியப் பொருளை யுணர்த்துதலால் பிரத்தியட்சானுமானம். இது தன்மானுமானம், திருட்டானுமான மென்றுமாம். (ஞானப். உரை).

2. கருதலனுமானம்—'ஓதுமுறையால் அறிவின் அளவு உணர்தல் கருதலனுமானம்' (சித்தி : 12). இது காரியானுமானம் (சாமானிய) திருட்டானுமானம் என்றுமாம் (ஞானப். உரை).

5. [1]உரையாலனுமானம்

ஒரு தல மகாலிங்க மகிமை கேட்டவுடன், இப்படி மந்திரகிரியா பாவனையுடன் பராபர சிவஞானதேசிக உபதேசப்படி மகாலிங்கம் ஒன்ருகிய சொரூபத்தை உள்ள படி சிவாத்துவித ஆனந்த சிவானுபவ சுவானுபூதிகத்தால் தானும் அனுபவித்துப் பக்குவான்மாக்களுக்கும் உப தேசித்தல்.

இப்படி அனுமானத்தால் அறிவித்த மகிமை அனு பவத்திற் புலப்படும்படி உபதேசித்தல் ஆகமம்.

[2]ஆகமப்பிரமாணமாவது

அநாதி முத்த அறிவுடையான் திருவுளம் பற்றின ஆகமம் (அ) தந்திரகலை, (ஆ) மந்திரகலை, (இ) உபதேசகலை என மூன்று.

(அ) தந்திரகலையாவது—ஆகமத்திற் சொன்ன சரியாதி நாலுபாத விதியுடன் மகாலிங்கபூசை முன் ஞெடுபின் மலைவற, கிரியைகளெல்லாம் வழு வறச் செய்யும் திராணியாயிருக்கும்.

(ஆ) மந்திரகலையாவது—அப்படிப்பட்ட மகாலிங்கத்தை ஆன்மபோத தத்துவ கரணமின்றிச் சிவ போக சிவகரண சித்த சுத்தியுடன் சலன மின்றிப் பாவித்து அறிந்து வழிபடுதல்.

(இ) உபதேசகலையாவது—தனக்கு முன் சிவகரணத் தால் உள்ளபடி உணர்ந்தறிவித்தல்.

---

1. உரையாலனுமானம் 'நீதியான் முற்கன்ம பலன் நிகழ்வது இப் போது இச்செய்தியாக வரும் பயனென்றறிதல் உரையாலனுமானம்' (சித்தி. 12). கருதல், உரை இரண்டினையும் ஆகமானுமானம் என்பர்.

2. ஆ - சிவஞானம்; க - மோக்ஷசாதநம்; ம - மலநாசம்; ஆதலால் ஆகமமெனப் பெயராயிற்று. 'ஆகமம் நாலுபாதமென்ருேதியிருக்க மூன்றென்றதென்னெனில், சரியை, கிரியை இவ்விரண்டும் தந்திரகலையி லடங்கும்; மந்திரகலையில் யோகமடங்கும்; உபதேசகலையில் ஞானபாத மடங்குமென்றறிக' (சிவஞான. சித்தி. 13. மறைஞான. உரை).

# II. திருவருள்

## திருவருளுக்குப் பிரத்தியட்சம்

இனி, திருவருளுங்குப் பிரத்தியட்சப் பிரமாணமாவது :—

அம்மனுடைய திருமேனி தரிசனமானவுடன், 'இவ்வுரு சுபாவமோ? ஒருவரால் செய்யப்பட்டதோ?' என்று காண்கை ஐயக்காட்சி.

உடனே, ஒருவரால் செய்யப்பட்டதென்று காண்கை திரிவுக்காட்சி.

பின்னும் உமை யென்கிற பெயரினுலும், திருவருட் சாதியினுலும், விளங்கும் குணத்தினுலும், பூசை நடக்கிற தொழிலினுலும் பரசிவபரை யென்னும் பொருளாய்த் தெளிதல் சவிகற்பக்காட்சி.

தரிசனமானவுடன் சித்தசலனமின்றி இவ்வடிவே பரம்பொருள் விளக்கமென்றறிதல் நிர்விகற்பக்காட்சி.

உடனே, உயிரறிவாய் நின்று தனது சிற்சத்தியாகிய பரை யென்னும் அருள் சிவகரணமாகிய இந்திரியத் துவாரத்தினுலே அட்டமூர்த்தங்களாகிற புலன்களாய் நின்று தரிசித்தல் வாயிற்காட்சி.

உடனே, அருட் சொரூபையாய்த் தரிசித்தபடி உள்ளும் பரிபூரணமாய்க் காண்கை மானதக்காட்சி.

உடனே, இம்மூர்த்தியைச் சிவபுண்ணியத் தெளிவாகிய ஆகம பூசை செய்ய விரும்பல், தன்வேதனுக்காட்சி.

உடனே, பஞ்ச பாசங்களும் நிவர்த்தியாய்த் தேசம், இடம், காலம், திக்கு, ஆசனங்களின்றிச் செய்வது ஒன்று போல் செய்யாச் செயலாய், ஆனந்த அநுபூதி கூடுதல், யோகக்காட்சி.

இப்படிக் காட்சிப்பட்ட திருவருளுக்குத் தன்னியல்பு ஏதென்னில், அந்நிய சாதியாகிய மானிடப்பெண் வடிவுமாகாமல், தன் சாதியாகிய தெய்வப் பெண்கள் வடிவுமாகாமல், சுபாவ பரை உருப்போல இருப்பது.

பொதுவியல்பு ஏதென்னில், அந்நிய சாதியாகிய மாயா காரிய வடிவப் பெண்ணுருவாகாமல், தன் சாதியாகிய இச்சா, ஞான, கிரியையாகிய எழுவகைச் சக்திகளாய் நிற்பது.

### திருவருளுக்கு அனுமானம்

இப்படிக் காட்சிப்பட்ட பொருளின் உண்மையைத் தனக்கு அனுபவப்பேருகப் பக்குவான்மாக்களுக்குப் போதிக்கும்போது, அருள் என்ற இயல்பேதுவினுல் திருமேனியைக் காட்டிய பக்கத்தாலும், அறிவு விளக்கிய காரிய ஏதுவால் இத்திருவுருவே பொருள் என்கிற சபட்சத்தாலும், தரிசனமானவுடன் அறியாமை நீங்குகிற அனுபலத்தி ஏதுவினுலே இவ்வுருவே பொருள் என்கிற விபட்சத்தாலும், போதிக்கத் தெளிதல் தன்பொருட்டனுமானம்.

இப்படி உணர்ந்து தெளிந்து போதித்தல் பிறர்பொருட்டனுமானம்.

### திருவருளுக்கு ஆகமம்

போதிக்கும்போது 'விளக்கத்தால் அருளுண்டு; பிரகாசத்தால் சூரியனுண்டுபோல்' என்ற அந்வயச்சொல்.

'விளக்கமில்லாதிடத்தருளில்லை; நீரில்லாவிடத்துப் பூவில்லைபோல்' என்றல் வெதிரேகச்சொல்.

இவ்விரண்டுடன் பிறவும் சொல்லுவார்கள்.

(அ) தானறியாவிடங்களில், 'அருளுரு உண்டு' என்று கேட்டால் 'இப்படியே யிருக்கு' மென்று உணர்தல் பூர்வக்காட்சி அனுமானம்.

(ஆ) கேட்டபடி, அனுபவப்படி நினைத்தல் கருதலனுமானம்.

(இ) 'வெகுதவப் பேற்றினுல் தரிசனம்' என்றல் [1]உரைதலனுமானம்.

---

1. உரையாலனுமானம்.

(ஈ) ஆகம விதியால் உள்ளபடி முன்னெடுபின் மலை வற, நாலு பாதத்துடன் வழிபடுதல், போதித் தல் **தந்திரகலை.**

(உ) தான்அற நின்றனுபவித்துப் போதித்தல் **மந்திர கலை.**

(ஊ) ஆதியந்தமில்லாத திருவருளாய் நின்றுனந்த அநுபூதி பெற்றபடி போதித்தறிவது உப **தேசகலை.**

## III. ஆன்மா

### ஆன்மாவுக்குப் பிரத்தியட்சம்

ஆன்மாவுக்குப் பிரத்தியட்சப் பிரமாணமாவது, முத்தான் மாக்களுடைய தேகம். அந்தத் தேகத்தைச் 'சரீரமோ? உயிரோ?' என்று ஐயப்பட்டு, 'உயிரன்று; சரீரம்' என்று மாறுபடக் கண்டபின், தியாகராச பண்டாரம் என்ற ஒரு பெயரும், அபிஷேகத்தான் என்கிற சாதியும், நற்குண மும் நல்ல அநுட்டானமும் உத்தமப் பொருளாய் இருத்த லால் இச்சரீரமே சுத்தான்மா என்று காண்கை **சவிகற்பக் காட்சி.**

கண்ட மாத்திரத்திலே இத்திருமேனியே சுத்தான்ம ரூபமென்று காண்கை **நிர்விகற்பக்காட்சி.**

உடனே, அறிவைக் கொண்டு அறிகிற அறிவாயிருக் கிற ஆன்மாவிடத்து அநாதியே அறியாமையாயிருக்கிற ஆணவ மலத்தைப் பரிபாகப்படுத்தி, அவ்வறிவாகிய தானுக் குகைக்கு ஆன்ம சிற்சத்தியென்று பெயருடைய சிவ னுடைய பிரகாசமாகிய பரையென்னும் சிவசத்தி குடிலை யினின்று இச்சா ஞானக் கிரியைகளாகிய சிவதத்துவத்தாற் பிரேரித்து, லய போக அதிகாரங்களாகிய மாயையைப் பொருந்தி, காலாதீத தத்துவங்களையும் பொருந்தி, இச்சா ஞானக் கிரியைகளாகிய கலாதி தோற்றமான பிரகிருதி தத்துவங்கள் அனைத்திலும் கலந்து, முழுதும் சிவகரணமாய்

நின்று, விகற்பமின்றி இத்திருவுருவே ஆன்ம சொரூபமென்று அருளாய் நின்று காண்கை இந்திரியக்காட்சி.

கண்ட காட்சியைக் கருத்தில் பிரிவில்லாமல் இருத்தல் மானதக்காட்சி.

கண்ட காட்சியால் தனக்கு இகத்திலும் பரத்திலும் புசிப்பாயுள்ள போகம் இதுவேயென்று காண்கை தன் வேதனுக்காட்சி.

சமாதி நிட்டைகளும், பஞ்ச பாசங்களும் நீங்கும் தன்மையும், திரிகாலங்களை அறியும் தன்மைகளும், அட்டமா சித்தி அட்டாங்க யோகங்களும் இதுவே என்று காண்கை யோகக்காட்சி.

இப்படிப்பட்ட சுத்தான்மாக்களுக்குத் தன்னியல்பு ஏதென்னில், அந்நிய சாதியாகிய அஃறிணை வடிவாகாமற் சிவசுபாவத்தில் நிற்பது தன்னியல்பு.

பொதுவியல்பாவது, அந்நிய சாதியாகிய அஃறிணை வடிவு மாகாமல் தன் சாதியாகிய உயர்திணை வடிவாய் இருப்பது.

அனுமானம்

இப்படிப்பட்ட காட்சிப்பட்ட ஆன்மா என்னும் பொருளின் உண்மையைத் தனக்கனுபவப் பேருகப் பக்குவ ஆன்மாக்களுக்குப் போதிக்கும்போது, கருதலாகிய அனுமானத்தால் அனுமேயமாகிய ஆன்மாவின் உண்மையை அறிவென்ற ஏதுவினாலே 'இத்திருமேனி' என்று காட்டிய பக்கத்தாலும், அறிவை விளக்குகிற காரியஏதுவினாலே 'இத்திருவே பொருள்' என்கிற சபட்சத்தாலும், தரிசனமானவுடன் அறியாமை நீங்குகிற அனுபலத்தியேதுவினாலே இவ்வுருவே பொருள் என்ற விபட்சத்தாலும், போதிக்கத் தரிசித்தல் தன்பொருட்டனுமானம்.

இப்படி உணர்ந்து தெளிந்து போதித்தல் பிறர்பொருட்டனுமானம்.

போதிக்கும்போது, 'விளக்கத்தால் ஆன்மாவுண்டு: பிரகாசத்தால் சூரியனுண்டு' போல என்றல் அன்னுவயச் சொல். "விளக்கமில்லாதவிடத்து அருளில்லை; நீரில்லா விடத்துப் பூவில்லை" போல என்றல் வெதிரேகச்சொல்; இவ் விரண்டுடன் [1]ஐந்தும் உண்டென்று சொல்லுவார்கள்.

பூர்வக்காட்சி அனுமானமாவது, முன்னறியாத இடங்களிற் பெரியோருண்டென்று கேட்டால், தரிசனமான இப்படியே இருப்பார்களென்றறிதல். கருதல் அனுமானமாவது பெரியோர் உண்டென்று கேட்டவுடன் தான் அனுபவப்பட்டபடி நினைத்தல். உரையாலனுமானமாவது, வெகு தவப்பேற்றினல் தரிசனம் கிடைக்குமென்றறிதல்.

## IV. ஆணவம்

### ஆணவத்துக்குப் பிரத்தியட்சம்

ஆணவத்துக்குப் பிரத்தியட்சப் பிரமாணமாவது பெத்த னுடைய தேகம். அதை 'தேகமோ, ஆணவமோ?' என்று ஐயுறல் ஐயக்காட்சி; ஆணவமல்லாத தேகம் என்று மாறு படக் காண்டல் திரிவுக்காட்சி. மூடன் என்ற பெயரினலும், குலாலன் என்ற சாதியாலும், கொண்டதுவிடாத குணத் தினலும், தூர்த்த தொழிலாகிய கன்மத்தாலும், அறியாமை என்னும் பொருளாலும், விகற்பித்தறிவது சவிகற்பக்காட்சி; கண்டமாத்திரத்திலே ஆணவமே என்று தெளிதல் நிர் விகற்பக்காட்சி. மேல் அனதியாகிச் சித்தாகிய பரசிவத்துக்கு அனதிசத்தாகிய இடமாகிய சிவானந்தத்தைப் பெறுதற்கு அனதித் தடையான அனதி சூக்ஷ்ம ஆணவத்தைக் கருணை யாகிய பரையொளியிலே அடங்கின இருள்போலே பாகப் படுத்த, சித்தாகிய பசு சிவானந்தாநுபூதியைப் பெறும். பின்னும் பெருங் கருணையினற் சூட்சுமதரமாகிய மலமான இடத்திலிருக்கும் ஆணவமலத்தைப் பரிபாகப்படுத்தி அனுக்

1. ஐந்துறுப்பு: பிரதிஞ்ஞை: ஏது: திருட்டாந்தம்: உபநயம்: நிகமனம்.

கிரகம் பண்ணவேண்டிய பரசிவம் சுத்தசத்தாகிய குண்டலியைப் பொருந்தி, பரசிவமே லய போக அதிகாரமாகி, அருட்பரையே இச்சா ஞானகிரியை ஆகி, அசுத்த தத்துவம் ஐந்தையும் பிரேரித்துச் சூட்சமதர ஆணவ மலமொன்றையும் வசப்படுத்தி, பசுவை விஞ்ஞானகலராக்கச் சிவானந் தானுபூதியைக் கொடுத்துப் பின்னும் கருணையினல் தூலமாகிய ஆணவ கன்மங்களைப் பாகப்படுத்த வேண்டி அப் பரசிவமே மிச்சிராத்துவாவாகிய மாயையைப் பொருந்தி ருத்திர மகேசுவர அனுசதாசிவ மூர்த்திகளாகிறது. அந்த இச்சா ஞானக் கிரியா சத்திகளே கலாதி தத்துவங்களிற் கலந்து அக்கலாதி பஞ்ச புருடனுகிய ஆன்மாவுக்கு இச்சா ஞானக் கிரியைகளாகிய சுத்தா சுத்த கன்மங்களைப் புசிப்பித்துத் தூலமாகிய ஆணவமலத்தைப் பாகப்படுத்துகிறது; பின்னும் பெருங்கருணையால் தூலதரமாகிய கன்ம மாயா மலங்களைப் பாகப்படுத்தி ஒழித்துச் சிவானந்தானுபூதியைக் கொடுக்க வேண்டி மிச்சிராத்துவாக் கலையிற் பிறந்த பிரகிருதி மாயையைப் பொருந்திப் பரசிவமே விட்டுணு, பிரமன், சமயாச்சாரிமார், சந்தனுச்சாரிமார், திருத்தொண்டத் தொகையோர், சுவயகுருதேசிகிராகிய நாதன், குருலிங்க சங்கமம் இவ்வாருகி எழுந்தருளி, திருவருட்சத்திகளே இருபத்துநான்கு தத்துவமுதல் சகல தத்துவங்களிலும் பொருந்தி, நால்வகைச் சத்தினிபாதத்துக்குத் தக்க சரியாதி தொழில்களைச் செய்வித்துத் தீக்ஷாதி அபிஷேக சாட்குணியமான ஞானசாத்திர உபதேச போதனைகளாற் சகல கரணங்களும் சிவகரணமாகப் பண்ணி, மலமாயா கன்மங்களைப் போக்கி, அத்துவித சிவானந்த சுவானுபூதியைக் கொடுத்து, வாழும்போது, அச்சிவகரணத்தால் ஆணவமலசக்தி உபகாரத்தைத் தரிசித்ததுவே **இந்திரியக்காட்சி.**

உணர்வு சிவபோதமாய் நிற்கை **மானதக்காட்சி.**

இராகத் துவேஷ புண்ணிய பாவக் கிரியா வாசனைகளெல்லாம் சுத்தமல பரிபாகமென்றறிதல் **தன்வேதனுக்காட்சி.**

எக்காலமும் எவ்விடமும் எப்பொருளும் எத்தொழிலும் எச்சுகமும் அருளன்றி வேறு காணுமை **யோகக்காட்சி.**

அருளளவை

அருளால் அளத்தல் சுத்தப்பிரமாணம்; அறிவால் அளத்தல் சகலப்பிரமாணம்; அறியாமையால் அளத்தல் கேவலப் பிரமாணம்.

அறுவகைப் பொருட்குப் பிரமாணம் உண்டு.

சுத்தப்பிரமாணமாவது

1. காண்டலாவது—சொரூபமே தடத்தமான சித்தென்று காண்கை.

2. கருதலாவது—கண்ட சத்தை விளக்கத்தால் சித்தென்று காண்கை.

3. உரையாவது—தடத்தமாய்க் கண்ட சத்துச் சித்தை ஆனந்தமாய்ச் சிதானந்த சொரூபமாய்க் காண்கை.

4. அபாவமாவது—கண்டவுடன் யானெனதென்று ஒன்றில்லையென்றறிதல்.

5. பொருளாவது– இத்திருமேனியால் அறிவு விளங்கிற்று என்றறிதல்.

6. ஒப்பாவது—பிரகாசத்தால் சூரியனைக் காண்டல் போல் என்றறிதல்.

7. ஒழிபாவது—இத்தரிசனம் மலநீக்கம் என்றறிதல்.

8. உண்மையாவது—ஒளி இருளை நீக்குந்தன்மையுள்ளது என்றறிதல்.

9. ஐதிகமாவது—உலகமெல்லாம் இதுவே பொருளென்று சொல்லுதல் என்றறிதல்.

10. இயல்பாவது—நெருப்புக்குச் சூடு சுபாவம்போல் என்றறிதல்.

மேலே சொன்ன பத்தளவைகளும் இந்த நூலிற் சொல்லும் அளவைகளும் காண்டல், கருதல், உரை என்ற மூன்றுள் அடங்கும். மூன்றுக்குள்,

காண்டலாவது: (அ) சவிகற்பக் காட்சி, (ஆ) நிற்விகற்பக் காட்சி என இரண்டு; அவற்றுள், (i) ஐயக்காட்சி, (ii) திரிவுக் காட்சி, (iii) விகற்பக்காட்சி என மூன்று.

(i) ஐயக்காட்சியாவது - கண்ட திருமேனியைச் சொரூபமோ தடத்தமோ என்று சந்தேகமுறல்.

(ii) திரிவுக்காட்சியாவது - சொரூபமன்று; தடத்தமே என்று காணல்.

(iii) விகற்பக்காட்சியாவது - பிறகு, சிவலிங்கமென்கிற பெயரினுலும், பஞ்சவிம்சதி விக்கிரகச் சாதியாலும், விளக்கமான அருட்குணத்தாலும், பூசை நிவேதனம் கோவில் நித்திய நைமித்தியம் கொண்டருளுகிற தொழிலினுலும், சிவமென்ற பொருளை விளக்குதலானும் இவை பொருளெனத் தெளிதல்.

(ஆ) நிர்விகற்பக்காட்சியாவது - தரிசனமான மாத்திரத்திலே அறிவிற்கவர்ச்சி தோன்ருமல் இதுவே சச்சிதானந்தப் பொருளென்று தெளிதல். இக்காட்சியுள் (i) வாயிற் காட்சி, (ii) மானதக்காட்சி, (iii) தன்வேதனுக்காட்சி, (iv) யோகக்காட்சி என நான்காமே.

அனுமானம்—(i) தன்பொருட்டனுமானம், (ii) பிறர் பொருட்டனுமானம் என இரண்டாம்.

உரை—(i) தந்திரகலை, (ii) மந்திரகலை, (iii) உபதேச கலை என மூன்ருமே.

இந்த முப்பிரமாணத்தால் அறிகிற [1]பதம் மெய் என்ற பொருள்.

அவை (i) தன்னியல்பு என்றும் (ii) பொதுவியல்பென்றும் இருவகையாயிருக்கும்.

தன்னியல்பாவது—அன்னிய சாதியைப் போலிராமல் தனியேயுள்ள சுபாவமாய் நிற்பது.

பொதுவியல்பாவது—அன்னிய சாதியைத் தவிர்ந்து தன் சாதிக்கொத்தல்.

1. பதம் - அறியப்படும் பொருள்.

இவ்விரண்டும் ஆறு பொருளுக்கும் உண்டு.

எப்படியென்ருல், சுத்தப்பிரமாணத்தால் பதிக்குச் சொன்ன பிரத்தியட்சப் பிரமாணத்துக்குப் பிரமேயமான சிவலிங்கத்துக்குத் தன்னியல்பென்னவென்ருல், அன்னிய சாதியாகிய ஆன்மவர்க்க பாச தேகங்களாகாமல் தன் சாதியாகிய பஞ்சவிம்சதிக்குள்ளுமொன்ருய் நிற்பது.

இவ்வகை ஆறு பொருளுக்கும் அறியலாம்.

பதிப்பிரமாணத்தில் முன் தொகுத்துச் சொன்ன இந்திரியக் காட்சியாவது அறிவாகிய சிவத்தைக் கொண் டறிதலினுல் அறிவென்று பெயரையுடைய ஆன்மா அச் சிவத்திற் பெருங்கருணையென்னும் பரையாகிய சிற்சத்தி யினுலே குடிலையென்னும் பிரேரகத் துவாரத்தினுல் அருட் கருவியாகிய கலாதி அந்தக்கரணத்தைப்பற்றி அவ்வரு ளொளியாகிய ரூபாதி இந்திரியங்களால் அவ்வருளுக்குப் பலனுகிய அட்டமூர்த்தப் பொருளிதுவென விகற்பமின்றி அறிதல்.

சுத்த தரிசனம்

மானதக்காட்சியாவது, மறதியில்லாத இந்த இந்திரியக் காட்சி அனுபவத்துடன் உயிரிற் பதிந்திருத்தல்.

தன்வேதனுக்காட்சியாவது, மறவாமல் உயிரிற் பதிந்த காலத் தில் புசிக்கும் இன்ப துன்பமும் இராகத்துவேஷாதிகளும் சிவகரணமாய்ப் பற்றற நிற்றல்.

யோகக்காட்சியாவது, அப்படிப்பட்ட சிவயோக சமாதி கூடி நிட்டை—தேசகால இயல்பகன்று—இருந்தபடி இருத்தல்.

சுத்ததரிசனம் அநுமானம்

சுத்த சகல கேவல தரிசனமாவது, அனுதியே சிற்சொரூப மாய் ஒன்ருய் அபேதமாய்ப் பிரிவறச் சூரிய சன்னிதானத் துக் கண்போல் இருளென்பது தோன்ருமல் அவ்வொளி யினுலன்றி வேறென்றும் காணுமல், அதுவாய் நிற்கிறது

போலச் சிவமேயன்றி வேறு தோன்றாது பேரின்ப சுகவானந்த சிவானுபவமே சுவானுபூதிகமாய் நிற்கிற ஆன்மாவுக்குப் பிறகு ஆன்மபோத மேலிடவும், அறியாமை, மயக்கம், இன்ப துன்பம் மேலிடவும், சனன மரணப்பட்டுச் சகல கேவலங்களை அடையவும் வேண்டியதென்ன? சுத்தத்துக்கு அசுத்தம் வராதே! மறவா அறிவுக்கு மறதி அஞ்ஞானம் கன்மம் வருவானேன்? வருவது வழக்கன்றே! என்றால், மூன்று மாயைகளும் நித்திய வியாபகமாகையால், அவைகளில் சிவ வியாபகமுமுண்டே! அவற்றில் ஆன்மவியாபகமுண்டே! ஒரு மாயா காரியத்திலே தானே மூன்று மாயாவடிவான ஐந்து கலையிலும் வியாபித்து, சுத்தம் அசுத்தம் பிரகிருதிகளில் சிவம் சக்தி உயிர் ஆணவம் மாயை கர்மங்களெல்லாம் தராதரமாக இருந்தனவே! இப்படியிருப்பானேனென்றால், வாரி நீரில் லவணம் போலச் சிவ வியாபகத்தில் வியாப்பியமான ஆன்மாவினுடைய ஆணவாதி பாசங்களை நீக்கிப் பரிபாகப் படுத்த வேண்டியவைகளிற் கலந்து நிவர்த்தி கலையாதியாய் ஒழித்துச் சாந்தியாதீத சத்தி பரியந்தம் சிவத்துடன் பழையபடி உள்ளதே விளக்கி இவ்வைந்து கலையையும் சிவசத்திப் பிரேரக வருளாக்கி, உலகமே உருவமாக, யோனிகள் உறுப்பதாக வென்னும் வழக்காக்கி, கடல் சிவம், நீர் ஆன்மா, உப்பு மலகன்மம் எனவே அவ்வுப்பு கடலைப்பிடியாது நீரைப்பிடிக்குமெனக் காண்க.

## சகல தரிசனம்

சகலப் பிரமாணமாவது :—

ஒருவன் ஒருவனை மயக்க வேளையில் தூரக்கண்டு,

'ஆணோ? பெண்ணோ? என்று சந்தேகித்தல் ஐயக்காட்சி.

பெண்ணென்று காண்டல் திரிவுகாட்சி.

பிறகு அவன் பெயராலும் சாதியினாலும் குணத்தினாலும் அவன் வரலாலும் தெளிதல் சவிகற்பகக்காட்சி.

கண்டவுடன், 'இன்னுன், இன்னவிருப்பன்' என்றறிதல் நிர்விகற்பக்காட்சி.

அந்தக் காட்சி நாலுவிதம்.

அவற்றுள்,

(i) இந்திரியக்காட்சியாவது—உயிரானது தன்னுடைய சிற்சத்தியினுலே அந்தக் கரணத்தைப் பற்றிப் பஞ்ச இந்திரியங்களை—பஞ்ச விடயங்களை—அறிதல்.

(ii) மானதக்காட்சியாவது—கண்ட விஷயத்தை மனதில் விரும்பல்.

(iii) தன்வேதனுக்காட்சியாவது — சவிகற்பக்காட்சியென்றும், நிர்விகற்பக்காட்சியென்றும் இரண்டு.

சிவதரிசனம்

அவற்றில் சவிகற்பக்காட்சி மூன்று.

அம்மூன்றினில்,

(அ) ஐயக்காட்சி — கண்டபொருளை இரண்டுபடக் காண்டல். அது, பதிக்குச் சொல்லுமிடத்துச் சிவலிங்கத்தைச் 'சிவமோ? சிலையோ' என்று சந்தேகித்தல்.

(ஆ) திரிவுகாட்சியாவது—சிவலிங்கத்தைச் சிலையென்று மாறுபடக்காண்டல்.

(இ) விகற்பக்காட்சி—ஐந்து விதமாயிருக்கும்.

எப்படியென்னில்,

பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என்று ஐந்து விதம்.

பெயராவது—சிவலிங்கம்.
சாதியாவது—சிலை.
குணமாவது—கருப்பு.
கன்மமாவது—பூசை, நிவேதனம்.
பொருளாவது—பரம்பொருள்.

இந்த மூன்றுமன்றி தரிசனமான மாத்திரத்திலே இதுவே பரம்பொருளெனக் காண்டல் நிர்விகற்பக்காட்சி. அக்காட்சியும் (அ) வாயிற்காட்சி, (ஆ) மானதக்காட்சி, (இ) தன்வேதனைக்காட்சி, (ஈ) யோகக்காட்சி என நான்காம்.

அவற்றுள்,

(அ) **வாயிற்காட்சியாவது**—சிவலிங்கத்தைப் பரம்பொருளென்று நிர்விகற்பமாய்க் காணும்போது சிவப்பிரேரகத்தால் அருளாய் நின்றவுயிர் சிவகரணமாகிய மனத்தால் இப்படி நின்ற பஞ்சேந்திரிய வழியால் சத்தாதி அட்ட மூர்த்த புலன்களையறிதல்.

(ஆ) **மானதக்காட்சியாவது**—அப்படிப்பட்ட காட்சியாற் கண்டபடி அந்தரியாகமாய் அனுபவத்திற் காண்டல்.

(இ) **தன்வேதனைக்காட்சியாவது**—அனுபவத்தாற் கண்ட பொருளை அபிஷேகாதி அர்ச்சனைகளெல்லாம் புறத்தில் ஆசைப்பட்டுச் செய்வது போலத் திருவருளே உபகரணமாகக் கொண்டு தானே அதுவாய் நின்று செய்தல்.

(ஈ) **யோகக்காட்சியாவது** — அப்படிச் செய்யும்போது ஞான நிட்டை கூடித் தேசமிடங் காலந் திக்கு ஆசனங்களின்றி எக்காலமும் ஒரு காலமாக அந்தத் திருமேனியிலே சிந்திப்பது.

**காட்சி முற்றும்.**

**கருதல்**

கருதலாவது, இக்காட்சிக்கும் புலப்படாதாகில் அனுமானத்தால் அனுமேயத்தை அறிதல்.

அந்த அனுமானம் (1) தன்பொருட்டனுமானம், (2) பிறர்பொருட்டனுமானம் என இரண்டாகும்; (3) பூர்வக்

காட்சியனுமானம், (4) கருதாலனுமானம், (5) உரையா லனுமானம் என்ற மூன்றுடன் ஐந்தாகவிருக்கும்.

(1) தன்பொருட்டனுமானமாவது—மூன்று பட்சத்தால் மூன்றேதுவுடைய பொருளைப் பார்த்துணரத்தக்க ஞானம்.

மூன்று பட்சமாவன, பட்சம், சபட்சம், விபட்சம் என்பன. அவற்றிற் பட்சமாவது, பிரத்தியட்சப் பொருளுக்கிடமாக விருக்கும். சபட்சமாவது, துணிந்த பொருளுக்குத் திட்டாந்தரமாக விருக்கும். விபட்சமாவது, துணிந்த பொருளில்லாதவிடமாக விருக்கும். முந்தின இரண்டும் (பட்சம், சபட்சம்) பொருளுண்மைக்கிடமாக விருக்கும்; விபட்சம் பொருளின்மைக்கிடமாக விருக்கும்.

ஏது மூன்ருவன: இயல்பேது, காரியவேது, அனுபலத்தியேது என மூன்ரும். இயல்பேதுவாவது, மாவென்று மரத்தைக் காட்டல். காரியவேதுவாவது, புகை தனக்காதியான அக்கினியைக் காட்டல். அனுபலத்தியேதுவாவது, குளிரில்லாவிடத்துப் பனியில்லாததைக் காட்டல்.

இப்படி, மூன்று பட்சங்களையும் மூன்று ஏதுக்களினலே அறியத்தக்கது தன்பொருட்டனுமானம்.

(2) பிறர்பொருட்டனுமானம் — இப்படியறியத்தக்க பொருளைப் பிறர்க்குப் போதிப்பது.

அவ்வாறு போதிப்பது அன்னுவயச்சொல் என்றும் வெதிரேகச்சொல் என்றும் இருவகைப்படும்.

அன்னுவயச்சொல்லாவது — புகையிருக்கிறதனலே அனலுண்டு; மடைப்பள்ளியைப் போல் என்றல்.

வெதிரேகச்சொல்லாவது—அக்கினியில்லாவிடத்திலே புகையில்லை; மலர்களும் மொட்டுக்களும் உடைய சலத்திலே புகையில்லை என்றது போல்.

இந்த இரண்டு அனுமானத்தோடும் ஐந்தனுமானங் கூட்டியும் சொல்லலாம்.

அவ்வைந்தாவன :—

பக்கம், ஏது, திட்டாந்தம், உபநயம், நிகமனம் என்பன.

பக்கமாவது—ஓரிடத்தில் ஒரு பொருள் உண்டென்று கேட்டறிதல்.

ஏதுவாவது—மழை பெய்ததனுல் வெள்ளம் பெருகுதல் என்றறிதல்.

திட்டாந்தமாவது—யானே மேலிருந்து காளமூதக் கேட்டவன் காளங்கேட்குந் தோறும் யானே மேலிருந்தூதுகிறுன் என்றே அறிதல்.

உபநயமாவது—மழையின்றி அணேயுடைந்து வெள்ளம் வருதலுமுண்டு என்றறிதல்.

நிகமனமாவது—யானே மேலன்றியும் காளமூதுகிறதுண்டு என்றறிதல்.

(3) பூர்வக்காட்சியனுமானமாவது — முன்பு புட்பத்தைக் கண்டு வாசனேயறிந்தவன் பின்ஞெருநாள் வாசனேமாத்திரம் தெரிந்து இன்ன பூ என்றறிதல்.

(4) கருதலனுமானமாவது—ஒருவன் சொல்லும் வார்த்தையைத் தன்னறிவுக்குத் தக்கதாகவறிதல்.

(5) உரையாலனுமானமாவது — இப்போதிந்தக் காரியம் நடக்கிறபடியாலே முன்பு இன்ன கருமஞ் செய்திருக்குமென்றறிதல்.

இந்த அனுமான இலக்கணத்தைப் பதிக்குச் சொல்லுமிடத்து, முன் யோகக் காட்சியாற் கண்ட சிவலிங்கப்பெருமான் அனுபவத்திற் புலப்படாதாகில், இந்த அனுமானத்தால் அறியலாம்.

எப்படியென்ருல், மூன்று பக்கத்தால் மூன்று ஏதுவுடைய பொருளே அறிதல் தன்பொருட்டனுமானம். அவை சிவலிங்கப்

பெருமானென்று தெளிதலுற்றவன் அந்தச் சிவலிங்கத்துக்கு ஓரிடமும் விளக்கமும் இன்னதுபோல் என்றும், அந்த விளக்கமில்லாதவிடம் இன்னதென்றும் அறியுமிடத்து இடமென்று சிதம்பரத்துத் திருமூலத்தானத்தைக் காட்டல் பட்சம். விளக்கத்துக்கு உவமை எப்படியென்னில், அப்பிரகாசமிருக்கிற ஏதுவினலே, சூரியவிம்பம் காண்டல் போலத் தரிசனம் பண்ணுகிறவர்களுடைய சித்தத்தை விளக்குகிற ஏதுவினல் இந்த மூர்த்தி என்றறிதல் சபட்சம். சூரியனில்லாவிடத்தில் இருள்போல இந்தச் சிவலிங்கத்தைக் காணவிடத்து மயக்கம்போலத் தோன்றுவது விபட்சம். முன்னிரண்டிலும் பொருளுண்டு; விபட்சத்திற் பொருளில்லை.

இப்படிப்பட்ட தரிசனத்தைப் பிறருக்குத் தெளியச் சொல்லலாவது—"சிவலிங்கத்தைத் தரிசனம் பண்ணின மாத்திரத்திலே பஞ்ச பாசங்களும் நிவர்த்தியாகின்றன; சூரியனைக் கண்ட கண்ணுக்கு இருள் நீங்கினதுபோல" என்று உணர்த்தல் அந்நுவயச்சொல். 'சிவலிங்கத் தரிசனமில்லாவிடத்துப் பஞ்சபாசங்களும் நீங்கா; சூரியனைக் காணத கண்ணுக்கு இருள் நீங்காதுபோல்' என்றல் வெதிரேகச்சொல்.

புண்ணியச் சேத்திரங்களில் சிவதரிசனம் பண்ணுதல் பட்சஅனுமானம்.

சிவலிங்கத்தைத் தரிசித்தோர் ஞானநிட்டை பெற்றிருத்தல் ஏதுவனுமானம்.

தரிசித்த சகல ஆன்மாக்களும் கதியடைதல் திட்டாந்தரவனுமானம்.

இப்படிப்பட்ட தரிசனமில்லாமல் வெகு கூட்டங்களாய்ப் பல முயற்சிகளாகித் திரிகிறவர்கள் கதியடையாதது உபநயவனுமானம்.

தரிசன மகிமை கேட்டிருந்தும் அறிவில்லாமலிருத்தல் நிகமனவனுமானம்.

சிவலிங்கத்தைக் கண்டு தரிசித்தவன் பின்னொரு காலத்தில் சிவகதைகளைக் கேட்கும்போது இந்த மகிமை சிவலிங்க தரிசனத்தாலும் பூசையாலும் கிடைத்தது என்று அனுபவ நிட்டை பெறுதல் பூர்வக்காட்சியனுமானம். இந்தச் சிவகதைகளைக் கேட்குந்தோறும் தன்னுடைய பக்குவ அனுபவத்துக்குத் தக்கதாகத் தோன்றுதல் கருதலனுமானம். பூர்வ தத்துவ முயற்சி பெற்றதனால் இக்காலத்தில் இத்தேகத்தில் சிவகரணத்தால் இந்தத் தரிசனம் கிடைத்தது என்றறிதல் உரையாலனுமானம்.

முற்றும்.

---

சிவகரண அநுபூதி

சிவகரணமானதற்கு அனுபவம் எப்படியென்னில், இவ்வகைக் காட்சி அனுமானங்களால் அறியும் பொருள் (1) தன்னியல்பு என்றும், (2) பொதுவியல்பு என்றும் இரண்டாகும். அவற்றில்,

தன்னியல்பாவது—அன்னிய சாதியுமல்லாமல் தன் சாதியுமல்லாமல் வேறாய் நிற்பது.

பொதுவியல்பாவது—அன்னிய சாதியைத் தவிர்ந்து தன் சாதிக் கொத்திருத்தல்.

சிவலிங்கம் அந்நிய சாதியாகிய நவரத்னதிகளுமாகாமல், தன் சாதியாகிய சிவலிங்கமுமாகாமல் மந்திர வடிவாய்ப் பஞ்சசாதாக்கியமாய் நாதவிந்து சேகர சொரூபமாயிருத்தல் தன்னியல்பு. அன்னிய சாதிகளாகாமல் தன் சாதியாகிய சிவ வடிவில் ஆவுடையாரும் சிவலிங்கமுமாகி, பிரமா, விட்டுணு ருத்திரபாகமுமாகி, ஆகமபூசை கொண்டருளுதல் பொது வியல்பு.

இப்படி ஆறு பதார்த்தங்களும் இரண்டாகவே இருக்கும். இந்தப் பிரத்தியட்ச அனுமானங்களாற் புலப்படாத அனுபவத்தை ஆகமவளவைப் பிரமாணத்தால் அறிய வேண்டும்.

ஆகமவளவை : தந்திரகலை யென்றும், மந்திரகலை யென்றும், உபதேசகலை யென்றும் மூன்றாகும். ஆகமம் அனாதி பரசிவத்தாற் சொல்லப்பட்டது. அதனில்,

தந்திரகலையாவது, முன்னொடு பின் மலைவின்றி மந்திர, அனுட்டான, கிரியா, சம்பிரதாயத்துக்கு வழுவின்றி யிருத்தல்.

மந்திரகலையாவது, கரணமெல்லாம் சிவகரணமாய் நிட்டையில் வழிபாடும் அடிமைத் திறமுமாயிருத்தல்.

உபதேசகலையாவது, அபேத, அத்துவித, ஆனந்த, சுக, இன்ப அன்பு.

இவ்வகை மந்திர கிரியா பாவனையா யிருக்கும்.

அளவை முற்றும்.

இந்த அளவைகளைப்போல அளவைப்போலி அறுபத்தைந்துண்டு. அவை எப்படியென்றால் பக்கப்போலி 4, ஏதுப்போலி மூன்றைப்போல 21, உவமப்போலி 18, உபநய நிகமனமென்ற தோல்வித்தானம் நிக்ரகத்தானம் இவ்விரண்டிலும் 22; ஆக [1]அறுபத்தைந்து சொல்வார்கள். அவையெல்லாம் இம்மூன்றிலொன்றிலடங்கும். சிவானுபவ சுவானுபூதிகத்தால் அருளாய் நின்றறியலாம்.

## பஞ்சகிருத்திய அநுபூதி

அநாதியாகிய பரசிவன் அநாதியாயிருக்கிற ஆன்மாக்களுக்கு அநாதியாகிய ஆணவாதி பாசங்களைப் பக்குவப்படுத்தற் பொருட்டுப் பஞ்சகிருத்தியங்களைப் பண்ணுகிறதற்கு துணைக்காரணமாகிய மூன்று மாயைகளும் பஞ்சசத்திகளும், முதற்காரணமாகிய மூன்று மாயைகளும், நிமித்தகாரணமாகிய லய போக அதிகார மூர்த்தங்களுமுண்டு. எப்படிப் போலவென்னில், பொன்னும் இரும்பும் மண்

1. ஈண்டு பக்கப் போலிநான் கேதுப் போலி யொருமூன்றாய்
வேண்டு மெழுமூன் றாகும்விளங் குவமைப் போலி யீரொன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண்டிருபத் திரண்டாங் கருதிலிவை
யாண்டு மொழிவ ரவையெல்ல மளக்கி லறுபத் தைந்தாகும்.
(சிவஞான சித். அளவை. 14)

ணும்போல முதற் காரணமாகவும், சுத்தியாதி கருவிகள், சம்மட்டியாதிகள், குறடுகள், தண்டசக்கராதிகள், முயற்சிகள் ஆகிய துணைக்காரணமாகவும், தட்டான், கொல்லன், குயவனைப்போல நிமித்தகாரணமுமாக மும்மூன்ருயிருக்கும்.

அவை எவையென்ருல், பரமசிவன் நிமித்தகாரணம்; சத்தி துணைக்காரணம். மாயை முதற்காரணம். இவை ஐந்து தொழில்களுக்கு மொன்ருகாமல் மும்மூன்ருமோ வென்றும் அப்படியாவது எவ்வாறென்றும் கூறுவாம்.

மூன்று மாயைகளுக்கும் மூன்று புவனம், மூன்று தத்துவம் உண்டு: மூன்று அத்துவாவாகவே யிருக்கும். இந்த மூன்று மாயைகளுக்கும் இடம் தனித்தனியே ஒன்ரே வெனில் வியாபகமாகையால் மூன்று மாயைகட்கும் இடம் ஒன்று. எப்படியென்னில், தேகமொன்றில் முப்பொருளாயுள்ளவைகளெல்லாம் அடங்கி யிருத்தல்போல, அந்த மூன்று மாயைகளும் காரியப்பட்டவையென்னில், சுத்தமாயை குண்டலியென்று வியத்தமானபோது, பொற்கட்டியிலே பலபல ஆபரணம் பிறப்பதுபோல, பரநாதாதி ஐந்தும் பிறக்கும். அவ்வியக்தமாக விந்து என்னும் பெயருடனிருக்கும்போது, பொன்னின் சத்துத்தானே நவரத்தினுதியானது போல, நாலு வாக்காதிகளெல்லாம் பிறக்கும். சுத்தமாயை வியக்தமாக மாயையென்று பெயருடனிருக்கும்போது, இருப்புக்கட்டியிலே பலபல ஆயுதம் பிறப்பதுபோலக் கலாதிகள் பிறக்கும். அவ்வியக்தமாய் மோகினி யென்ற பெயருடனிருக்கும்போது அதன் சத்தாகிய தாதுக்கள் பிறந்தனபோல முக்குணமும் சித்தம் முதலானவையும் தோன்றும். அந்தப் பிரகிருதி அவ்யக்தமாயிருக்கிறபோது மண்ணிற் கடாதி தோன்றுவதுபோல ஆங்காராதி பிரகிருதி தத்துவங்களெல்லாம் பிறக்கும் வியக்தமாய் மான் என்ற பெயருடனிருக்கும்போது அதன் சத்தாகிய தைலாதி வர்க்கம் பிறப்பதுபோல வாழையடி வாழையாய்த் தத்துவ காரியமெல்லாம் பிறக்கும்.

இவ்வகை அநுபூதி ஞானகுரு உபதேச சம்பிரதாய சிருட்டியால் அனுபவம் காண்க.

---

## 9. துறையன்பு முதிர்ச்சி

### திருச்சிற்றம்பலக் கோவையார் பேரின்பத்துறையனுபூதி உரைக்குறிப்பு விளக்கம்

திருச்சிற்றம்பலக் கோவையார் அருளிச்செய்த வாதவூரடிகளாகிய மாணிக்கவாசக சுவாமியார் திருவுளக்கருத்தின் பயனான பேரின்பத்துறை மூலப்பொருளைத் திருவாசகப் பொதுப்பாயிர முகவுரையில் எழுதியிருப்பதால், பின்னும் இவ்விடத்திற் சுருக்கி எழுதலாயிற்று.

அன்புத் தொடர்ச்சியான துறைமூலமாவன :—

பரமசிவன் பெருங்கருணையினலே கேவலாதீதமான உயிர்கட்கு அறிவு விளங்க, மாயையிடமாகப் பிரேரித்து, தனு கரண புவனங்களும் போகங்களும் அருட்சத்தியால் அருளி, சத்தினிபாதத்தன்மை பெருகினவுடன், பொது நூலாகிய நால்வகையின்பம் கடந்து, சிவபுண்ணிய முதிர்ச்சியான சிறப்பு நூலாகிய ஆகமப்பொருளின் திறம் ஞான குருவுபதேசம் பெற்று, அபேத அத்துவித அன்பே இன்பக்காட்சியாக நிட்டைகூடி, சிவகரணமாய், அடிமைத் திறம்பெருகி, எப்பதம் எவ்வுலகு எவ்வுயிரையும் அப்படியே சிவமாய்க்கண்டு, மூவுருவும் உண்மைப் பயனென ஆனந்த பாட்பம் முதலான புளகாங்கிதமுற்று, ஆன்மபோதாதீத உள்ளத்தில் தோன்றிய ஆனந்தமான மகிழ்ச்சியிற் றோன்றிய பாடல்களான தோத்திரங்களான, நாயன்மார்கள் துதிகளில் சில துறை நங்கை தலைவன் தாளே (?) தலைப்படுதலென விருக்கும்; இந்த நாயனர் துறை முழுதும் சாதிக்கும் பொருட்டுப் பொருளதிகாரக் கருத்து முற்றும் பற்றிப் பாடினர்.

பத்தி முத்திக்கு உவமை பெத்தம், பேரின்பத்துக்கு உவமை சிற்றின்பம் என வைத்து உடம்பையுடைய யோகிகள்பாலுற்ற சிற்றின்பம் அடங்கத் தன் பேரின்பமாக, பேரின்பமான பிரமக்கிழத்தியோடு ஓரின்பமான அன்பே சிவமாய், அருளே காரணமாக, சுத்தாவத்தையே நிலமாக,

---

1. பக்கம் 25.

நாயகி பரம்பொருளாக, நாயகன் பக்குவான்மாவாக, தோழி திருவருளாக, தோழன் ஆன்மபோதமாக, நற்றாய் பரையாக, திரோதாயி செவிலித் தாயாக, மேலும் நாயகன் கூற்றெல்லாம் நாயகி கூற்றாகவும், நாயகி கூற்றெல்லாம் நாயகன் கூற்றாகவும் நிகழ்ந்து வரும்.

அவை அநுபூதியாற் காண்க.[1]

நாயகியைச் சிற்றம்பலம்போல வருணிக்கையால் நாயகி பரம்பொருளாயிற்று. பெறுவான் நாயகனும், பேறு நாயகியுமாக இரசமும் நாவும்போல இருத்தலானும், கொத்தும் துறையும், கருப்பொருளும் உரிப்பொருளும் இடமும் எல்லாம் அருளின்பமெனக் கொள்க.

ஞானக்கோத்து

நிலமாவன :—

தத்துவாதீதத்தில் தரிசன சுத்த சாக்கிரத்தானமே குறிஞ்சிநிலம்.

போதாதீதத் திருவருட்டரிசன சுத்த சொப்பனத் தானமே பாலைநிலம்.

அருளாதிக்கந்தானே சுத்த சுழுத்தித்தானமான முல்லைநிலம்.

அருளுருவபேத சுத்த துரியத்தானமே மருதநிலம்.

பரசிவவின்ப சுகாதீதமே நெய்தல்நிலம்.

இப்படி ஐந்து நிலங்களும் சுத்தாவத்தைத் தானங்களாகவும் பஞ்சசத்தி அதிட்டானத் தானங்களாகவும் காண்க. முதலவனார் அருளுக்கால் பரசிவப்பொருளான மெய்ஞ்ஞான குருவருட்டிருமேனியைப் பக்குவான்மா பிரத்தியட்சமாகத் தரிசன அநுபூதி.

1. இப்பகுதி திரு. சுவாமிநாத பண்டிதர் அவர்களால் பதிக்கப்பெற்ற 'திருசிற்றம்பலக்கோவையார் உண்மை' என்ற நூலிலும், இதன் கருத்து, திரு. விசாகப்பெருமாளையர் அவர்களின் பதிப்பிலுள்ள 'திருக்கோவையார் உண்மைக்கருத்து' என்ற பகுதியிலும் சிற்சில மாறுபாடுகளுடன் காணப்படுகின்றது.

1. இயற்கைப் புணர்ச்சித் துறையீ ரொன்பதும்
சத்திநி பாத மொத்திடுங் காலத்
துத்தம சற்குரு தரிசன மாகும்.

2. பரங்கற் கூட்டம் பதினெட் டின்பந்
தாங்குதற் போதந் தான்கண் டகறல்.

3. இடந்தலைப் பாட ராறு மொன்று
மருளுரு தரிசனத் தன்பு மிகுதியாற்
பேரா னந்தம் பெற்றனு பவித்தல்.

4. மதியுடம் படுத்தல் வருமீ ரைந்துங்
குருவறி வித்த திருவரு ளதனு
லின்பிணை யெய்த வன்புயி ருரைத்தது.

5. இருவரு முள்வழி யவன்வர வுணர்தல்
அன்புயி ரின்பிணை யணைந்துசி வம்பெறல்
முன்பரு ளறிந்து மொழிந்த தாகும்.

6. முன்னுற வுணர்தற் றுறையென லொன்று
மன்புயி ரின்பிணை யணைந்துசிவ மாதலை
யின்புட னருளே யெடுத்து வினயது.

7. குறையுற வுணர்தல் துறையொரு நான்கு
மின்புயி ரிடைச்சென் றேகிப் பவித்தலை
யன்புயி ரப்பிணி கண்டருள் வினவியது.

8. நாண நாட்டத் துறையோ ரைந்து
மருளே யன்பிணை யதிசயித் துயிரின்
பக்குவந் தன்னுற் பலவியந் துரைத்தது.

---

பின்வரும் குறிப்புக்கள் விசாகப்பெருமாளையரவர்கள் பதிப்பிலிருந்து எடுக்கப்பெற்றன :—

1. சற்குருதரிசனம்.
2. ஆன்மபோத தரிசனம்.
3. அன்பாலானந்தம் பெற்றனுபவித்தல்.
4. அருள்சிவங்கலந்து, உயிர்தரிசனஞ் செய்தல்.
5. சிவமுயிர் விரவிய தருளேதேறல்.
6. சிவமுயிர்கூட அருள் வினவுதல்.
7. சிவமுயிர் கலத்தல் அருள் பணியாற்காண்டல்.
8. அருளுயிர்ப்பக்குவ மறிந்துவியத்தல்.

9. நடுங்க நாட்ட மொன்று முயிரிடை
யின்புருச் சிவத்தின் மன்பெருங் கருணை
யென்றன் பாயரு ளேயறிந் திடலாகும்.

10. மடற்றுறை யொன்பதுஞ் சிவத்திடை மோக
முற்ற வுயிரருள் பற்றி யுரைத்தது.

11. குறைநயப் புத்துறை யவையிரு நான்குஞ்
சிவத்தி லுயிரைச் சேர்க்க வேண்டி
யுயிர்ப்பரி வின்புக் கருள்புகன் றிடுதல்.

12. சேட்படை யிருபத் தாறு துறையுங்
கிடையா வின்பங் கிடைத்தலா லுயிரை
யருமை காட்டி யறியாள் போலப்
பலபல வருமை பற்றி யுரைத்த
வருளே சிவத்தோ டாக்க லாகும்.

13. பகற்குறித் துறைகள் முப்பத்திரண் டென்பது
மியற்கைபோ லின்பி னியல்பெறக் கூட்டிச்
சிவத்தின னந்தஞ் செய்தபின் னுயிரைப்
பிரித்த வருளின் பெருமை யாகும்.

14. இரவுக் குறித்துறை முப்பான் மூன்றும்
அருளே யின்பி லணைத்துச் சிவத்தின்
முற்றிய வருமை தெரிய வற்புறுத்திச்
சிவனது கருணையி னிச்சைபல வுயிர்கள்
எடுத்தெடுத் துரைத்த லென்ப தாகும்.

15. ஒருவழித் தணத்த லொருபதின் மூன்றும்
இன்புருச் சிவனது கருணை யிசைப்பல்
அன்புயிர்க் கருளறி வித்த லாகும்.

---

9. சிவமே கருணை யென்றருள் நோக்கல்.
10. உயிர் இன்புறவே யருளோடுரைத்தல்.
11. உயிர்ப்பறிவின்புக் கருள்புகன்றிடுதல்.
12. கிடையாவின்பத் தருமைகாட்டல்.
13. இயற்கைபோற் சிவத்தோ டியலுறக் கூட்டல்.
14. அருளே சிவத்தோடாக்கி யவ்வருமை கருணை பலவுமெடுத்துக் காட்டல்.
15. சிவனது கருணை யருள் தெரிவித்தல்.

16. உடன்போக் கைம்பதோ டாறு துறையும்
அருளுயிர்க் கின்பி னருமை யுணர்த்தலும்
ஆனந்தத் திடை யழுத்தித் திரோதை
பரைவரை வழியாகப் பண்புணர்த் தியதாம்.

17. வரைவு முடுக்க மொருபதி னாறுஞ்
சிவனது கருணை தெரிய வுரைத்தவ்
வின்பம் பெறவரு ளெடுத்தியம் பியதாம்.

18. வரைபொருட் பிரிதற் றுறைகள் முப்பத்து
மூன்றுங் கருணை தோன்ற வுயிர்க்கு
அருளே யுணர்த்தலு முணர்தலுஞ் சிவத்துடன்
திரோதையும் பரையுந் தரிசன மாகித்
திவ்விய வின்பஞ் சேர்ந்திடுங் குறியுங்
குலாவி யுரைத்த குணமரு ளாகும்.

19. மணச்சிறப் புரைத்தல் வருமோ ரொன்பது
முயிர்சிவ மணம்பெற் றுண்மை யின்பாகிப்
பரைகடந் தின்பப் பண்பாய் நிற்றல்.

20. கல்வியிற் பிரிவொரு நான்குங் காதல்
புல்லுமா னந்த வின்ப பூரணஞ்
செல்லும் பயனின் றிறம்பா ராட்டல்.

21. காவற் பிரிவுத் துறையோ ரிரண்டும்
இன்பத் திறத்தை யெங்குங் காண
அன்பா முயிரே யறைமொழி தென்றது.

---

16. அருளுயிர்க்கருமை யறியவுரைத்தலு மானந்தத்திடையழுத்த வித்தலும்.

17. சிவனது கருணை தெரியவுரைத்தல் வின்பம்பெற வருளெடுத் தியம்பியது.

18. கருணை யருடிரோதை பரையின் புணர்தல்.

19. உயிர் சிவமணம் பெற்றுண்மையாதல்.

20. இது ஓதற்பிரிவு எனவும்படும்; பூரணவின்பத் திறம்பாராட் டல்.

21. இன்பத் திறத்தை யெங்குங் காண்டல்.

22. பகைத்தணி விந்தற் றுறையோ ரிரண்டும்
இன்பக் கனமென் றியங்குமென் றென்றல்.

23. உற்றுழிப் பிரிவி ரெட்டுமா னந்தம்
பெறவுயி ரின்பிரி வாற் றூயை
யின்பே யருளோ டிசைத்த லாகும்.

24. பொருட்பிரி விருபது முயிர்ப்பிரி வுணர்த்தி
இன் பின் பரிவு மன்புயிர் நிலையுந்
தானே யதுவு மதுதா னகு
மானது கருணை யறைத லாகும்.

25. பரத்தையிற் பிரித லெண்ணு ரென்றும்
பரமா னந்தம் பெற்றபி னெப்பத
மெவ்வுல கெவ்வுயி ரப்படி யேகண்
டறிவு பூரண மாகி யின்பப்
பொருள்வசத் தாகிப் பரச மயங்களும்
பண்புற வதுவாய்ப் பிரித்த வுயிர்பே
ரானந்தத் தழுத்திய பின்வந் தகலாதிருத்தல்.

துறை முற்றும்.

---

22. இது பகைதணி வினைப்பிரிவு எனவும்படும். இன்பக்கனமன்றி வேறிலையுலகென்றல்.

23. இது வேந்தற்குற்றுழிப்பிரிவு எனவும்படும். இன்பாராமை யன்பேயென்றல்.

24. இது பொருள்வயிற்பிரிவு எனவும்படும். தானது வதுதானுகுந் தன்மை.

25. அறிவு பூரணமாகியின்பாதல்.

## 1. இயற்கைப் புணர்ச்சி

[சற்குரு தரிசனம்]

1. காட்சி

செய்யுள் : திருவளர் தாமரை.

கிளவி : குருவின் திருமேனி காண்டல்.

அவை தற்பரமல்ல; சதாசிவமல்ல; நிட்களமல்ல; நிராமயமல்ல: அற்புத மாதி வனுபோகத் தாமே; கற்பனை யின்றிக் கலந்து நின்ற பரசிவகுருவெனக் காண்க.

ஐவகைச் சுத்தாவத்தை யின்ப நிலத்தி லுளதாகிய மலர் அருளுருவெனவே இரண்டறக் கண்ணுற்ற இன்பமெனக் காண்க. அன்னநடை திருவருண் மூலாதார வசைபை. காமன் றன் வென்றிக்கொடி அன்பே ஆனந்த குஞ்சிதபாத அருளுரு வெனக் காண்க. ஈசர் தில்லை என்றது உடலே; பிரமபுரம் என்ற புண்டரிகபுரமெனக் காண்க.

காண்டலே பொருளென்பதற்கு [1]அருளளவை யனு பூதியாலும் [2]திருவாசக முதன் மொழியாலும் அவைக்கு எடுத்துக் காட்டலான புறனடை நாயன்மார்கள் அருளிப் பாடல்களுக்கு எழுதிய உரையனுபூதிகளாலும் பிரத்தியட்சமே குஞ்சிதபாதமாகிய பமரகுருவெனக் காண்க.

குறிப்பு :—கிளவிகளின் ' திருக்கோவையார் உண்மைக்கருத்து ' அச்சுப் பிரதியோடு ஒத்துவரும் பகுதிகள் தடித்த எழுத்துக்களில் அச்சிடப்பெற்றுள்ளன. [ ] குறிகளுக்குள்ளுள்ளவை ' திருக்கோவையார் உண்மை 'யிற் கண்டவை.

2. ஐயம்

செய்யுள் : போதோ.

கிளவி : திருமேனியை வியந்து ஐயமுறுதல்.

ஆன்ம போதத்தால் தெரிவரிய திரு மேனியென வியந்தது.

---

1. பக்கம் 137.

2. பக்கம் 41 - 104.

3. தெளிதல்

செய்யுள் : பாயும்.

கிளவி : குருவின் அவயவக்குறி குணங்களை நோக்கி, உயிரை வசப்படுத்த மானிடச் சட்டை சாத்திப் பார்வைபோலும் வந்த திருவுருவென்றது.

4. நயப்பு

செய்யுள் : அகல்கின்ற.

கிளவி : வண்டமர்புரி குழலுடைத்தாகிய மடந்தையான ஆசாரியன் திருமேனியால் ஆன்மலாபம் பெறலாமென அவயவம் நயந்து, அண்ணல் வியந்து, 'உள்ளிய அனுபூதி திருவுருவே' என உரைத்தது.

5. உட்கோள்

செய்யுள் : அணியும்.

கிளவி : திருவுளம் தன்னிடத்தில் கருணை உண்டென்று அறிந்தது.

6. தெய்வத்தை மகிழ்தல்

செய்யுள் : வளைபயில்.

கிளவி : அசபை நிர்த்தானந்தக் கருணையைக் காட்டின தவத்தினை வியந்தது.

7. புணரத்துணியாநிற்றல் [புணர்ச்சி துணிதல்]

செய்யுள் : ஏழுடையான்.

கிளவி : ஆசாரியரிடத்தணைந்து திருவருளுருவின்பம் பெற வெண்ணியது.

8. கலவியுரைத்தல்

செய்யுள் : சொற்பால்.

கிளவி : அருளுருவிடத்து அளவளாவி ஆனந்தம் பெற்ற அள்ளூறி ஆன்மா உரைத்தல்.

9. இருவயினொத்தல்

செய்யுள் : உணர்ந்தார்.

கிளவி : பெறுங்கோறின்பம் பெருகுதல் கண்டு பேணி யுரைத்தல்.

10. கிளவிவேட்டல்

செய்யுள் : அளவியை.

கிளவி : குருவுபதேசம் கொள்ள வேண்டி.
உருவியந்து உயிரே குறையிரந்துரைத்தது.

11. நலம்பாராட்டல் [நலம்புனைந்துரைத்தல்]

செய்யுள் : கூம்பல்.

கிளவி : ஆசாரியனது அருட்பண்பு உயிரன்பால் நலங்கொண்டு வந்து மனத்தோடுரைத்தது.

12. பிரிவுணர்த்தல்

செய்யுள் : சிந்தாமணி.

கிளவி : குருவின் திருமேனியை விட்டுப் பிரியில் உயிர் ஆற்றாதென மயங்கியுரைத்தல்.

13. பருவரலறிதல்

செய்யுள் : கொங்கில்.

கிளவி : ஆசாரியர் திருவுளத்திரக்கம் உயிர் கண்டது.

14. அருட்குணமுரைத்தல்

செய்யுள் : தேவரிற்.

கிளவி : அன்புயிரிடத்துக் குருவருள் பிரிவில்லை யென்றது.

15. இடமணித்துக்கூறி வற்புறுத்தல்

செய்யுள் : வருங்குன்றர்.

கிளவி : குருவருளுக்கும் பரிவுயிர்க்கும் மருவிட மொன்றென வற்புறுத்தியது.

16. ஆடிடத்துய்த்தல்

செய்யுள் : தெளிவளர்.

கிளவி : குருவரு ளின்பச் சிவவரு ளுடனே
மருவுத லறிந்த வகையுயி ருரைத்தல்.

17. அருமையறிதல்

செய்யுள் : புணர்ப்போன்.

கிளவி : அனுபவ வின்பங் கனவென வியந்து
அறிந்த வுயிரன்பினை யிரந்து ரைத்தல்.

18. பாங்கியையறிதல்

செய்யுள் : உயிரொன்.

கிளவி : குருவருட் சிவமே திருவருள் காட்டப்
பரிவுயி ரருணைப் பண்பா லறிதல்.

முற்றும்.

---

## 2. பாங்கற் கூட்டம்

[ஆன்மபோத தரிசனம்]

19. பாங்கனை நினைதல்

செய்யுள் : பூங்கணை.

கிளவி : அனுபவ மின்ப மரிதென வுயிர்தான்
மனதுட னுரைக்க மதித்த லாகும்.

20. பாங்கன் வினுதல்

செய்யுள் : சிறைவான்.

கிளவி : மனதுயிர் கண்டு வருந்த லென்னென வினுதல்.

21. உற்றதுரைத்தல்

செய்யுள் : கோம்பி.

கிளவி : உயிர் உளத்துடனே வற்புறுத்தி உற்ற
துரைத்தது.

22. கழறியுரைத்தல்

செய்யுள் : உளமாம்.

கிளவி : மனமு யிருடனே
மயங்கி யுரைத்தது.

23. கழற்றெதிர் மறுத்தல்

செய்யுள் : சேணிற்.

கிளவி : போதத்தாற் காணும் பொருளல்ல வென்றது.

24. கவன்றுரைத்தல்

செய்யுள் : விலங்கலை.

கிளவி : பின்னும் போதந் தன்னிலை சொல்லியது.

25. வலியழிவுரைத்தல்

செய்யுள் : தலைப்படு.

கிளவி : உயிர் வலியழிந்ததற் கின்புருக்குருகி இளைத்தலை மனதுடன் மயங்கி யுரைத்தல்.

26. விதியொடு வெறுத்தல்

செய்யுள் : நல்வினையும்.

கிளவி : பின்னும் உயிர் மனதுடன் பேதுற்றுரைத்தல்.

27. பாங்கனேர்ந்துரைத்தல்

செய்யுள் : ஆலத்தினல்.

கிளவி : உயிர் வலியழிந்ததற்கு மனம் தளர்ந் துரைத்தது.

28. இயலிடங்கேட்டல்

செய்யுள் : நின்னுடை.

கிளவி : உயிர்க் குறுதியுண்மை கண்டு இன்புக்கு இய லிடம் மனம் கேட்டல்.

29. இயலிடங்கூறல்

செய்யுள் : விழியால்.

கிளவி : அனுபவ வின்ப மாவி நெஞ்சுக் குயிரே யுரைத்த உண்மை யாகும்.

30. வற்புறுத்தல்

செய்யுள் : குயிலே.

கிளவி : உளமறிந் துரைப்பனென்
றுயிர்க்குறுதி செப்பல்.

31. குறிவழிச்சேறல்

செய்யுள் : கொடுங்கால்.

கிளவி : மனதனுபவ மின்ப மறிய நாட்டல்.

32. குறிவழிக்காண்டல்

செய்யுள் : வடிக்கண்ணி.

கிளவி : போதமு மருளிடத் தழுந்திப் போயின்புறு
வறிந்தது.

33 தலைவனை வியந்துரைத்தல்

செய்யுள் : குவளை.

கிளவி : உள்ளம் உயிர் வலுவை வியந்தது.

34. கண்டமை கூறல்

செய்யுள் : பணந்தாழ்.

கிளவி : போதநம்மாற் பொருந்துவ தரிதென
ஆதரவாயுயிர்க் கறியவுரைத்தது.

35. கருத்துக்கேற்பச் செவ்வி செப்பல் [செவ்வி செப்பல்]

செய்யுள் : கயலுள.

கிளவி : இன்ப மறியு மியல்பன் றெனினும்
இன்புரு வினதியல்பு கண்டு நெஞ்சமுயிர்க்
குரைத்தல்.

36. அவ்விடத்தேகல்

செய்யுள் : எயிற்குலம்.

கிளவி : போதநீங்கப் பொற்பருட்குரவன்
தெரிசனத்தின் புக்குச்சென்றதன்மை.

முற்றும்.

---

## 3. இடந்தலைப்பாடு

[*அன்பாலானந்தம் பெற்றனுபவித்தல்*]

37. மின்னிடை மெலிதல்

*செய்யுள் :* ஆவியன்.

*கிளவி :* இன்புருச் சிவமே அன்புயிர்க் கிரங்கல்.

38. பொழில்கண்டு மகிழ்தல்

*செய்யுள் :* காம்பிணையால்.

*கிளவி :* பார்க்கு மிடமெல்லாம் பரானந்தமாக உயிர் கண்டே உரைத்தல்.

39. உயிரென வியத்தல்

*செய்யுள் :* நேயத்த.

*கிளவி :* அனுதியின்புரு அரனெனக்கண்ட இயல்பு உயிருரைத்தல்.

40. தளர்வு கண்டுரைத்தல் [*தளர்வகன்றுரைத்தல்*]

*செய்யுள் :* தாதிவர்.

*கிளவி :* நிர்விகாரமாய் நிலைபெறக்கண்டது.

41. மொழிபெற வருந்தல்

*செய்யுள் :* காவிநின்.

*கிளவி :* இன்புருத்திருவாய் மலர்ந்தருளாவிடில் உயிருய்யேனென்றல்.

42. நாணிக்கண் புதைத்தல்

*செய்யுள் :* அகலிடந்.

*கிளவி :* இன்பநாணுதல் *அருளில் மறைந்ததைக்* கண்டதுபோல் உயிரின்ன லெய்தியது.

43. கண்புதைக்க வருந்தல்

*செய்யுள் :* தாழச்செய்.

*கிளவி :* *அருட்குண மறைய* உயிர் வருத்தமுற்றது.

44. நாண்விட வருந்தல்

*செய்யுள் :* குருநாண்.

*கிளவி :* *இன்பங் குறைபாடின்றி* உயிர்க்கிரங்கியுறல்.

45. மருங்கணைதல்

செய்யுள் : கோலத்தனி.

கிளவி : உயிர் இன்புருவிடத்து அன்பாற் பெருகு சுகம் பெற்றது.

46. இன்றியமையாமை கூறல்

செய்யுள் : நீங்கரும்.

கிளவி : சித்தியெவையும் சேர்ந்திடுமாயினும் இத்தகையின்பம் இகழேனென்றது.

47. ஆயத்துய்த்தல்

செய்யுள் : சூளாமணி.

கிளவி : மெய்யடியாரிடை வேறறக்கலந்து ஐயமின்றி. இன்புருச் சில வியாபகத்திலடங்கி அருட்சக்தி முதல் அனந்த சக்திகளிடத்து இன்பசக்தி இசைதல் இயம்பியது.

48. நின்று வருந்தல்

செய்யுள் : பொய்யுடை.

கிளவி : இன்புருவை நீங்கும் திறம் அரிதாதலால், அதற்கு ஆதாரமாம் விந்து நாதங்களையும் விட்டு நீங்குதல் அரிதென்றது.

49. பொழிலிடைச்சேறல்

செய்யுள் : என்னறிவால்.

கிளவி : முற்செய்த தவத்தாற் பெற்ற இன்பாதலால் இன்னமும் உயிர் அவ்விடத்தெய்தலாமென்றெண்ணி ஏங்கியது.

[1] 'ஆவியன்னாய்' (37) முதல், 'என்னறிவால்' (49) என்ற இப்பதின்மூன்றும் கண்டு கொள்க (?)

இதனுட் பொழிலிடைச்சேறல் ஒன்றுமே இடந்தலைப்பாடாக வைத்து மற்றப் பன்னிரண்டும் பாங்கற் கூட்டத்திலும் சேர்க்கலுமாம்.

முற்றும்.

---

1. ஏடுகளில் 'பூங்கணைமுதல்' என்று எழுதப்பெற்றுள்ளது.

## 4. மதியுடன்படுத்தல்

*மதியுடன் படுத்தலாவது, அருள்சிவங் கலந்து உயிர் தரிசனம் செய்தல். அவையாவன :—*

50. பாங்கியிடைச் சேறல்

*செய்யுள் :* எளிதன்றினி.

*கிளவி :* திருவருளால் சிவானந்தம் பெறலாமென்று உயிர் *எண்ணியது.*

51. துணிதல் [*குறையுறத்துணிதல்*]

*செய்யுள் :* குவளை.

*கிளவி :* *இன்பருளிருந்தவிடத்து உயிர் சென்று துன்பருட்குணர்த்த அவை* சிவமே காட்டத் திருவருளையுணர்தல்.

52. வேழம் வினுதல்

*செய்யுள் :* இருங்களி.

*கிளவி :* *அருளிடத்து உரைபெற ஆன்மா* வினு*தல்.*

53. கலைமான் வினுதல்

*செய்யுள் :* கருங்கண்ண.

*கிளவி :* இன்பம் *பெறு நெறியை* யருள் விடை பெருமல் வினுவல்.

54. வழி வினுவல்

*செய்யுள் :* சிலம்பணி.

*கிளவி :* வழிமேல் வைத்துப் புகலிலை யென்றல்.

55. பதி வினுதல்

*செய்யுள் :* ஒருங்கட.

*கிளவி :* இன்ப தேசத்தை *அருள் அறிவிக்கா* விடில் உயிர் அறியே னென்றது.

56. பெயர் வினுதல்

*செய்யுள் :* தாரென்ன.

*கிளவி :* இன்பருள் நாமம் ஏதெென உயிர் வினுயது.

57. மொழிபெறுது கூறல்

செய்யுள் : இரதமுடைய.

கிளவி : திருவாய் மலர அருளருமை உயிர் எடுத்துரைத்தல்.

58. கருத்தறிவித்தல்

செய்யுள் : விண்ணிற.

கிளவி : சாத்தும்பச்சிலை தான்கொண்டருளி அருளுந்திறத்தை அறியவுரைத்தது.

59. இடை வினவல்

செய்யுள் : கலைக்கீழ்.

கிளவி : சிவத்திடையன்பு செல்லுவதன்றி வேறில்லையென்று விரும்பியுரைத்தது.

முற்றும்.

---

## 5. இருவருமுள்வழியவன் வரவுணர்தல்

என்பது, சிவமுயிர் விரவியதருளே தேறல்.

60. ஐயுறுதல்

செய்யுள் : பல்லிலனுக.

கிளவி : உயிரின்ப சத்தியைக் கலந்து அருளதேறி வினயது.

61. அறிவினுடல்

செய்யுள் : ஆழமன்னே.

கிளவி : உயிர்ச் செயலறு துறைகளை அருளறிந்து இன்ப சத்தியிடத்து அன்பு மிகுதியென்று அருளே உரைத்தது.

முற்றும்.

---

## 6. முன்னுறவுணர்தல்

[சிவமுயிர்கூட அருள்வினவுதல்]

62. வாட்டம் வினவாநிற்றல்

*செய்யுள் :* நிருத்தம்.

*கிளவி :* சிவனது கருணையும் உயிரது தெளிவும் அருளே கண்டு இன்பதனுடன் வினயது.

*முற்றும்.*

---

## 7. குறையுறவுணர்தல்

*ஆவது, சிவமுயிர் கலத்தலருள்பணியாற் காண்டல். அவை வருமாறு :—*

63. குறையுற்று நிற்றல்

*செய்யுள் :* மடுக்கோ.

*கிளவி :* திருவுளப் பணியைச் செய்வேனுயிர் என்றது.

64. அவன் குறிப்பறிதல்

*செய்யுள் :* அருளியை.

*கிளவி :* பளிங்குபோற் சிவத்திடைப் பதிந்தது உயிர் என்றது.

65. அவள் குறிப்பறிதல்

*செய்யுள் :* பிழைகொண்.

*கிளவி :* கருணையுயிரிட்த்துக் கண்டருடேறல்.

66. இருவர்நினைவு மொருவழியுணர்த்தல்

*செய்யுள் :* மெய்யே.

*கிளவி :* இன்புயிரொன்றென் றருளதிசயித்தது.

*முற்றும்.*

---

## 8. நாணநாட்டம்

ஆவது, திருவருள் உயிர்ப்பக்குவமறிந்து வியந்தது; அவை வருமாறு :—

67. பிறைதோழுகென்றல்
செய்யுள் : மைவார்.
கிளவி : அருள்சிவத்திடையுயி ரார்ந்ததன்மை வெளிப்படநின்று வினவியுரைத்தது.

68. வேறுபடுத்துக்கூறல்
செய்யுள் : அக்கின்.
கிளவி : இன்பில் உயிரடைந்த தன்மை கண்டு வந்து அருளுரைத்தல்.

69. சுணையாடிக்கூறி நகைத்தல் [சுணையாடல்கூறி நகைத்தல்]
செய்யுள் : செந்நிற.
கிளவி : கருணையுயிர்க்குக் காட்டும்பரிவு தானறிந்தறியாத் தன்மையுரைத்தது.

70. புணர்ச்சியுரைத்தல்
செய்யுள் : பருங்கண்.
கிளவி : இன்பசக்தியால் உயிர் கலந்து சிவனுந் தன்மை பெற்ற உண்மைக்குறி அருளே தேறி இந்த அதிசயம் எங்குமில் என்றது.

71. மதியுடன்படுத்தல்
செய்யுள் : காகத்திரு.
கிளவி : உயிர்சிவமொன்றல் தொழிலால் அறிந்தது.

முற்றும்.

## 9. நடுங்கநாட்டம்

[சிவமே கருணை யென்றருள் நோக்கல்]

இவை ஐந்தும் நிற்க, நடுங்கநாட்டம் ஒன்றாவது :—

72. [புலிமிசைவைத்தல்]

செய்யுள் : ஆவாவிரு.

கொளு : உயிர்க்கின்பின் கருணை அளவின்மை உரையால் அருள் கண்டு உண்மகிழ்தல்.

முற்றும்.

---

## 10. மடல்

[மடற்றிறம்]

மடலாவது, உயிரின்புறவே அருளோடு உரைத்தல்.

73. ஆற்றாதுரைத்தல்

செய்யுள் : பொருளா.

கொளு : அருளை நம்பி உயிர்மிகவு மயங்கிக் குறையுற்றிரங்கல்.

74. உலகின்மேல் வைத்தல் [உலகின்மேல் வைத்துரைத்தல்]

செய்யுள் : காய்சின.

கொளு : இன்பம்பெறுர்க்குஉடல் வம்பென்றுரைத்தது.

75. தன்றுணிவுரைத்தல்

செய்யுள் : விண்ணை.

கொளு : இன்புருச் சிவம் பெருவிடில் அன்புயிர் அழியுமென்றருளுடன் செப்பல்.

76. மடலேறும் வகையுரைத்தல்

செய்யுள் : கழிகின்ற.

கொளு : இவன் சிவனடிமையென்றெவரும் செப்ப இழிபாய்த்திரிதலியல் பலவென்றது.

77. அருளாயெழுதறி விலக்கல் [அருளாலரிதென விலக்கல்]
செய்யுள் : நட்னும்.
கொளு : பக்குவவுயிர்கள் அன்பருளுடையாதல் நிந்தை தகாதென முந்தியருள் மொழிதல்.

78. மொழிநடை யெழுதலரிதென விலக்கல்
செய்யுள் : படிச்சந்தம்.
கொளு : சிவ இன்பினது குறி, குணம், செயல்கள், மனவாக்குக்காயத்துக்கு எட்டாதனவென்று அருள் இயம்பியது.

79. அவயவமெழுதலரிதென விலக்கல்
செய்யுள் : யாமும்.
கொளு : சிவனது கருணையும் செயலும் ஒருவரால் அறியப் படாது : அஃது அரிது என்றது.

80. உடன்படாது விலக்கல்
செய்யுள் : ஊர்வாய்.
கொளு : என்வழிச் சிவமே யிருத்தலால், உன்தன் குறையுங்கூறிக் கூட்டுவேன் என்றது.

81. உடன்பட்டு விலக்கல்
செய்யுள் : பைந்நாண்.
கொளு : இன்பமென்வழி திருத்தலால், உன்றன் குறையும் கூறிக்கூட்டுவே னென்றது.

முற்றும்.

## 11. குறைநயப்பு

[உயிர்ப்பறிவின்புக் கருள்புகன்றிடுதல்]

குறைநயப்பாவது உயிர்க் கருணைக்கு இன்பருள் புகன்றிடுதல். அவை வருமாறு :—

82. குறிப்பறிதல்

செய்யுள் : தாதேய்.

கொளு : சிவத்தோ டுயிரைச் சேர்க்க வேண்டி
உவப்ப ருளின்பச் சிவக்குறி யறிதல்.

83. மென்மொழியாற்கூறல்

செய்யுள் : வரிசேர்.

கொளு : உயிர்ப்பருவர லின்புக்கருளறிவித்தல்.

84. விரவிக்கூறல்

செய்யுள் : நீகண்டனே.

கொளு : உயிர்ப்பரிவுவமையால் உவந்தருளுரைத்தது.

85. அறியாள்போன்றல்

செய்யுள் : சங்கந்தரு.

கொளு : சிவமருட்கறியமற் றென்றேசெப்பல்.

86. வஞ்சித்துரைத்தல்

செய்யுள் : புரம்கடந்தான்.

கொளு : உயிர்க்கின்பம் இரங்கலே உள்ளுறு மாற்றாலருட்கறிவித்தல்.

87. புலந்துகூறல்

செய்யுள் : உள்ளப்படுவன.

கொளு : இன்பமிசையாததற்கு அருடன்னை வெறுத்துக்கூறியது,

88. வன்மொழியாற்கூறல்

செய்யுள் : மேவியந்.

கொளு : இன்பமருளாவிடில் உன் கருணைக்கு இழிவுவர உயிரழியும என்றருளுரைத்தல்.

89. மனத்தொடு நோதல்

செய்யுள் : பொன்னார்.

கொளு : உயிர் ஆனந்தத்தையடைய இன்புருச் சிவமிரங்கல்.

முற்றும்.

---

## 12. சேட்படை.

சேட்படையாவது, கிடையா இன்பத்தருமை காட்டல். அவை வருமாறு :—

90. தழைகொண்டுசேறல்

செய்யுள் : தேமென்.

கொளு : உயிர் அறிவாம் தனி மலரெடுத்து அருள் வழியே சென்றது

91. தழைமறுத்தல் [சந்தனத்தழை தகாதென்றுமறுத்தல்]

செய்யுள் : ஆரத்தழை.

கொளு : உன்னறிவாம் தனிமலர் இன்புக்கிசையா தென்றது.

92. நிலத்தின்மை கூறிமறுத்தல்

செய்யுள் : முன்றகர்த்.

கொளு : உன்னறிவு இன்பிடைச் சென்றால் உண்மை யடியார் இகழ்வர் என்றது.

93. நினைவறிவு கூறிமறுத்தல்

செய்யுள் : யாழார்.

கொளு : இன்புருச்சிவத்தி னிசைவுகண்டு பின்புனைப்பேணுவன் பெறுநீயென்றது.

94. படைத்துமொழியான் மறுத்தல்

செய்யுள் : எழில்வாய்.

கொளு : இன்புருச்சிவமுனை விரும்புமுன் போதம் பொருந்தாதென்றல்.

95. நாணுரைத்து மறுத்தல்

செய்யுள் : உறுங்கண்.

கொளு : உயிர்ப்போதம் நீங்கின ஓர்திருஞான [நேயநிலையினும்
இன்பம் பொருந்தாதென்று [அருளுரைத்தல்

96. இசையாமைகூறி மறுத்தல்

செய்யுள் : நறமனை.

கொளு : இன்பவடியார்க்குள்ளன்பு ஒவ்வாதென் றது.

97. சேவ்வியிலளேன்றல்

செய்யுள் : கற்றில.

கொளு : இன்புருச் சிவக்கனி பழுத்ததில்லை யுனக் கென்றது.

98. காப்புடைத்தென்று மறுத்தல்

செய்யுள் : முனிதரு.

கொளு : முத்திச் சகல மெய்ஞ்ஞான வொளி மழுங்கலால், மேலரமின்புபெறக் காலமல வென்றது.

99. நீயேகூறேன மறுத்தல்

செய்யுள் : அந்தியின்.

கொளு : இன்பிடையுன்குறையுற்றிடலென்று அன்பாமுயிர்க்கருளறிய வுரைத்தல்

100. குலமுறைகூறி மறுத்தல்

செய்யுள் : தெங்கம்.

கொளு : உயிர்ப்பண்புக்கின்பப்பண்பொவ்வா தென்றருளுரைத்தல்.

101. நகையாடி மறுத்தல்

செய்யுள் : சிலையொன்று.

கொளு : உன்னறிவின்புறலரிதென்றல் தோன்ற இழிவு சிறப்பாய் அருளுரைத்தல்.

102. இரக்கத்தோடு மறுத்தல்
செய்யுள் : மைத்தழை.
கொளு : உயிரறிவிழந்தே அத்தற்கு அருள் இரங்கியது.

103. சிறப்பின்மைகூறி மறுத்தல்
செய்யுள் : அக்கும்.
கொளு : இன்பத்திடையுன்னன்புமறிவும் விரிவிலை யென்றது.

104. இளமைகூறி மறுத்தல்
செய்யுள் : உருகுதலை.
கொளு : இன்ப முதிர்ந்த பருவ முனக்கிலை யென்றது.

105. மறைத்தமைகூறி மறுத்தல் [மறைத்தமைகூறி நகைத் துரைத்தல்]
செய்யுள் : பண்டால்.
கொளு : என்னையன்றி யுனக்கின்பமமையாதென் றருளுரைத்தல்.

106. நகைகண்டு மகிழ்தல்
செய்யுள் : மத்தகம்.
கொளு : அருணோக்கங்கண்டுயிர் மகிழ்ந்துரைத்தல்.

107. அறியாள்போன்று நினைவுகேட்டல்
செய்யுள் : விண்ணிறந்தார்.
கொளு : இன்பம்பலவதி லெங்ஙனஞ்சிவமென்றல்.

108. அவயவங்கூறல்
செய்யுள் : குவவின.
கொளு : இன்பக்கனம் அரன்திருமேனியென்றல் (இன்பக் கனம் ஆனந்தமயம்).

109. கண்ணயந்துரைத்தல்
செய்யுள் : ஈசற்கு.
கொளு : திருநோக்கின்பச் சேதனமென்றல்.

110. தழையெதிர்தல்

செய்யுள் : தோலாக்கரி.

கொளு : இந்திரியத்தைவென்று இன்புக்கு அருமைசெய்து வருந்தல்; உன்னறிவை அடிமைத்திறப்பணியால் சிவத்து ஆக்குவேன் என்றது.

111. குறிப்பறிதல்

செய்யுள் : கழைகாண்டலும்.

கொளு : பரிவுயிர்க்கருளெனப் பகரருள்கூறல்.

112. குறிப்பறிந்துகூறல்

செய்யுள் : தவளத்த.

கொளு : உனையன்றி இவை அடிமை வேறறியா உயிர்க்கு அருளவேண்டுமென்று அருள் அறிவித்தல்.

113. விரித்துரைத்தல் [வகுத்துரைத்தல்]

செய்யுள் : எறும்பழி.

கொளு : உயிர்ப்பரிவெடுத்து அருள் இன்புக்கு இயம்பியது.

114. தழையேற்பித்தல்

செய்யுள் : தெவ்வரை.

கொளு : அருளேயுயிர்ப்பணிச் சிவத்துக்காக்கல்.

115. தழைவிருப்புரைத்தல்

செய்யுள் : பாசத்தளை.

கொளு : உன்னருட் பணிசிவத்துக்குவப்பெனவுரைத்தது.

முற்றும்.

---

## 13. பகற்குறி

பகற்குறியாவது, இயற்கைபோற் சிவத்தில் இயலுறக் கூட்டல் வருமாறு :—

116. குறிப்பிடங்கூறல் [*குறியிடங்கூறல்*]

*செய்யுள்* : வானுழை.

*கொளு* : அருளுயிர்க்கின்பம் ஆர்விடமுரைத்தது.

117. ஆடிடம்படர்தல்

*செய்யுள்* : புயல்வளர்.

*கொளு* : இன்பந்தனைக் கொண்டேகாந்தத்தேகல்.

118. குறியிடத்துக் கொண்டுசேறல்

*செய்யுள்* : தினைவளம்.

*கொளு* : அருமையாற்சிவத்தை யுயிரிடத்தாக்கல்.

119. இடத்துய்த்து நீக்கல் [*இடத்துய்த்து நீங்கல்*]

*செய்யுள்* : நரல்வேய்.

*கொளு* : *அருள்சிவத்தை அறிவித்தகன்றது.*

120. உவந்துரைத்தல்

*செய்யுள்* : படமாசுணம்.

*கொளு* : உயிர் நிர்மல துரியத்திற் சிவத்தைத் தரிசித்துண் மகிழ்ந்துரைத்தல்.

121. மருங்கணைதல்

*செய்யுள்* : தோத்தீன்.

*கொளு* : *இவனன்பணுக இன்பக்கனம் பெருக்குக் கண்டு அதனியல்பு உயிருரைத்தல்.*

122. பாங்கியறிவுரைத்தல்

*செய்யுள்* : அளிநீ.

*கொளு* : *அருளின்பத்தைக் கண்டதிசயித்தல்.*

123. உண்மகிழ்ந்துரைத்தல்

*செய்யுள்* : செழுநீர்.

*கொளு* : *இன்பத்தேறலுண்டவுயிர் அருட்கு உவந்துரைத்தல்.*

124. ஆயத்துய்த்தல்
*செய்யுள் :* கொழுந்தாரகை.
*கொளு :* அடியார் கூட்டத்தன்பாலுற்றது.

125. தோழிவந்து கூடல்
*செய்யுள் :* பொன்னனை.
*கொளு :* அருள்சிவங்கலந்த அபேதங்கண்டது.

126. ஆடிடம் படர்தல் [ஆடிடம் புகுதல்]
*செய்யுள் :* அறுகால்.
*கொளு :* அன்பர்க்கின்ப மருளேயாக்கல்.

127. தனிகண்டு மகிழ்தல் [தனி கண்டுரைத்தல்]
*செய்யுள் :* தழங்கும்.
*கொளு :* அருளுயிர்தனைக்கண் டகமகிழ்ந்துரைத்தது.

128. பருவங்கூறிவரவு விலக்கல்
*செய்யுள் :* தள்ளி.
*கொளு :* சிவத்தின்பெடுத் தருளுயிர்க் கறிவுறுத்தல்.

129. வரைவுடம்படாது கூறல் [வரைவுடம்படாது மிகுத்துக் கூறல்]
*செய்யுள் :* மாடம்.
*கொளு :* இன்ப மெளியேற் கெய்துமோ வென்றன்பாருயிரருளுடனுரைத்தல்.

130. உண்மைகூறி வரைவுகடாதல்
*செய்யுள் :* வேய்தந்த.
*கொளு :* அன்புயிர்க்கருளு மின்பமெளிதென்றது.

131. வருத்தங்கூறி வரைவுகடாதல்
*செய்யுள் :* மன்னு.
*கொளு :* சிவங்கருணைகூற வுயிரின்புறு திருத்த லென்பிழையென்றருளுரைத்தல்.

132. தாயச்சங்கூறி வரைவுகடாதல்
*செய்யுள் :* பனித்துண்டம்.
*கொளு :* பரையின் கருணைமிகுதி கண்டதருளுயிர்க் குரைத்துப் பக்குவங்காண்டல்.

133. இற்சேறிவித்தல் [இற்செறிவித்து வரைவுகடாதல்]
செய்யுள் : ஈவிலை.
கொளு : அருளினிலின்ப மரிதென்றுயிரின் பரிவு காண்டல்.

134. தமர் நினைவுரைத்தல் [தமர்நினைவுரைத்து வரைவுகடாதல்]
செய்யுள் : சுற்றும்.
கொளு : இன்பின் பிரிவுமிகுதிகண்டு நீ பெருவிடிலுலகி கழுமென்றல்.

135. எதிர்கோள் கூறல் [கூறி வரைவுக்டாதல்]
செய்யுள் : வழியுமது.
கொளு : திரோதையும் பரையும் சேர்த்திடு மென்றது.

136. ஏறுகோள் கூறல் [ஷை]
செய்யுள் : படையார்.
கொளு : அன்புபுரிபவர்க் கின்பெளிதென்றுரைத்தல்.

137. அயலுரையுரைத்தல் [ஷை]
செய்யுள் : உருப்பனை.
கொளு : அயலாரின் பார்வரென்றருளிரங்கியுரைத்தல்.

138. தினைமுதிர்வுரைத்தல் [ஷை]
செய்யுள் : மாதிடம்.
கொளு : பணியொழிந்தாற் சிவம்பலியாதென்றது.

139. பகல்வரவு விலக்கல் [ஷை]
செய்யுள் : வடிவார்.
கொளு : பசுகாணத்தாற் சிவம்பலியாதென்றது.

140. தினையோடு வேறுத்தல் [ஷை]
செய்யுள் : நினைவித்து.
கொளு : தவங்கள் செய்தும்பலிப்பிலை யென்றருளுரைத்தல்.

141. வேங்கையோடு வெறுத்தல் [ஷ]
செய்யுள் : கனைகடல்.
கொளு : பசுகரணங்கள் பகையாமென்றது.

142. இரக்கமுற்று வரைவுகடாதல்
செய்யுள் : வழுவாவிய.
கொளு : அருளுயிர்க்கிரங்கி யின்பெடுத்துரைத்தது.

143. கோய்தமை கூறல் [கூறி வரைவுகடாதல்]
செய்யுள் : பொருப்பர்.
கொளு : சரியையாதி மூன்றுங் கட்த்தல்.

144 பிரிவருமை கூறல் [ஷ]
செய்யுள் : பரிவுசெய்.
கொளு : பழக்கந்தவிரப் பழகலரி தென்றருளுரைத்தல்.

145. மயிலோடு கூறல் [கூறி வரைவுகடாதல்]
செய்யுள் : கணியார்.
கொளு : சுத்தாவத்தையில் அருள் சிவகரணத்தைச் சேர்ந்து பசுகரணத்தைப் பரத்துயிர்க்குரையென்றல்.

146. வறும்புனங்கண்டு வருந்தல்
செய்யுள் : பொதுவின்.
கொளு : அருளன்றி யின்பமாராதென்றுரைத்தலுயிரே.

147. [1]பதிநோக்கி வருந்தல்
செய்யுள் : ஆனந்தமாக்.
கொளு : இன்பருணட்டில் எய்துவதரிதென உயிர் கலக்கமுற்று வருந்தல்.

முற்றும்.

---

1. பொதுநோக்கி வருந்தல் என்று சுவடியில் காணப்படுகிறது.

## 14. இன்பக்குறி

[அருளே சிவத்தோடாக்கியவ்வருமை கருணை பலவு மெடுத்துக் காட்டல்].

இரவுக்குறி : அருளே சிவத்தோடாக்கிய அருமை தெரியவுரைத்தது.

148. இரவுக்குறிவேண்டல்

செய்யுள் : மருந்து.

கொளு : முத்திக்கேவலாவத்தையின் அருளையிரந்து உயிருரைத்தல்.

149. வழியருமை கூறல் [வழியருமைகூறி மறுத்தல்]

செய்யுள் : விசும்பினுக்.

கொளு : அருளுயிர்ப்போத மகறல்கண்டின்புறல்.

150. நின்று நெஞ்சுடைதல்

செய்யுள் : மாற்றே.

கொளு : இன்புறக் கேழுற்றுயிர் நெஞ்சுடைந் துரைத்தல்.

151. இரவுக்குறிநேர்தல்

செய்யுள் : கூளி.

கொளு : உயிர்ப்பரிவுகண் டருளுரைத்தது.

152. உட்கோள்வினுதல்

செய்யுள் : வரையன்.

கொளு : அருளுயிர்கண்ட் வனுபவங்கேட்டது.

153. உட்கோண்டுவினுதல்

செய்யுள் : செம்மலர்.

கொளு : அறிவித்தாலறிவ னென்றனுபவஞ் சொன்னது.

154. குறியிடங்கூறல்

செய்யுள் : பணிவளர்.

கொளு : கேவலாதீதத்தில் உயிர்க்கருள் இன்பமா விடம் எடுத்துரைத்தது.

155. இரவுக்குறியேற்பித்தல்

*செய்யுள் :* மலவன்.

*கொளு :* சிவத்துக்கருளுயிர் செய்கையுரைத்தது.

156. இரவுவரவுரைத்தல்

*செய்யுள் :* மோட்டம்.

*கொளு :* மலத்தடைகடந்துயிர் மருவுமென்றது.

157. அச்சங்கூறல் [*ஏதங்கூறி மறுத்தல்*]

*செய்யுள் :* செழுங்கார்.

*கொளு :* மலத்தடை நீங்கியருட்பட ருயிரின்
மெலிவுக்கிரங்கி விளம்பியதின்பாம்.

158. குறைநேர்தல்

*செய்யுள் :* ஓங்கும்.

*கொளு :* திருமேனி தெரிதலாமெனல்.

159. குறைநயந்தமை கூறல் [*குறைநேர்ந்தமை கூறல்*]

*செய்யுள் :* ஏனற்பசுங்.

*கொளு :* உயிர்க்குக் கருணையுண்மை யுரைந்தது.

160. மயில்மிசை வைத்தல் [*வரவுணர்ந்துரைத்தல்*]

*செய்யுள் :* முன்னும்.

*கொளு :* பசு சிவத்துக்கு அருளுயிர்த்திறமெடுத்துரைத்தல்.

161. தாய் துயிலறிதல்

*செய்யுள் :* கூடார்.

*கொளு :* பரைக்கும் ப்ரங்காம் பண்பருள் கண்டது.

162. தலைவி துயிலெழுப்பல் [*துயிலெடுத்துச் சேறல்*]

*செய்யுள் :* விண்ணுக்கு.

*கொளு :* உயிர்ப்பக்குவங்கண் டுவந்தறிவுரைத்தது.

163. இடத்துய்த்துநீங்கல்

*செய்யுள் :* நந்தீ.

*கொளு :* சிவத்துச்சேர்த்தருள் சென்றுநின்றது.

164. இடங்கண்டுரைத்தல் [*தளர்வகன்றுரைத்தல்*]
*செய்யுள்* : காமரை.
*கொளு* : உயிர்சிவங்கண்டின் புறவுவந்தது.

165. மருங்கணைதல்
*செய்யுள்* : அகிலன்.
*கொளு* : இன்பக்கனங்கண் டின்பனுபவித்தது.

166. முகங்கண்டு மகிழ்தல்
*செய்யுள்* : அமுந்தேன்.
*கொளு* : திருமேனிகண்டின்பதுவாய்த் தேறியது.

167. பள்ளியிடத்துய்த்தல்
*செய்யுள்* : சுரும்புறு.
*கொளு* : அடியரிடத்தன்பா யமர்தலுயிர்கண்டது.

168. வரைவு விலக்கல்
*செய்யுள்* : நந்பகற்.
*கொளு* : *அருளுயிர்க்குச் சிவத்தருமை கூறியது.*

169. ஆற்றாதுரைத்தல்
*செய்யுள்* : பைவாய்.
*கொளு* : *இன்பமன்றியென்னுயிர் தரித்துமில்லா தென்றருட்குயிருரைத்தல்.*

170. இரக்கங்கூறல் [*கூறி வரைவுகடாதல்*]
*செய்யுள்* : பைவாய்.
*கொளு* : கருணையேயின்பக் கனமெனவுரைத்தது.

171. நிலவு வெளிப்பட வருந்தல்
*செய்யள்* : நாகந்தொழ.
*கொளு* : உயிர்க்கு மாயையு மொளியென் றிரங்கியது.

172. அல்லகுறியறிவித்தல்
*செய்யுள்* : மின்னங்.
*கொளு* : உன்பரிவுக்கின்புக் *குருதென்றருளுயிர்க்கறிவித்தல்.*

---

1. *விண்டலை என்று ஏட்டில் காணப்படுகிறது.*

173. கடலிடை வைத்துத்துயரறிவித்தல்
செய்யுள் : சோத்துன்.
கொளு : அருளுயிர்மோகங் கடலோடியம்பியது.

174. காமமிக்ககழிபடர்கிளவி
செய்யுள் : மாதுற்ற.
கொளு : உயிர்மோகங்கண்டருளுவகையோடியம்பியது.

175. காப்புச்சிறைமிக்க கையறுகிளவி
செய்யுள் : இன்னற.
கொளு : உயிர்ச்சிவ போகமுற்றின்பமருந்தக் கருவித் தடைக் கருளழுங்கல்.

176. ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி
செய்யுள் : தாருறு.
கொளு : இன்பத்தின் வழியேகலரிதென்றது.

177. தன்னுட்கையாறெய்திடுகிளவி
செய்யுள் : விண்டலே.
கொளு : சிவத்தின்கருணைத் திறம் பரிவானது.

178. நிலைகண்டுரைத்தல்
செய்யுள் : பற்றெுன்.
கொளு : அருளேயுயிர்க்குப் பரிவாயுரைத்தது.

179. இரவுறு துயரங்கடலோடு சேர்த்தல்
செய்யுள் : பூங்கணை.
கொளு : உயிரின்பம் பெறவரும் காலத்திற் சிவங் கருணையாய்க் கனிந்து விந்துச் சத்தியைச் சேர்த்தியுரைத்தல்.

180. அலரறிவுரைத்தல்
செய்யுள் : அலராயிரம்.
கொளு : அருளுயிர்க்கின்பம் பெறவுறுத்தியது.

முற்றும்.

---

## 15. ஒருவழித்தணத்தல்

*ஒருவழித்தணத்தலாவது, சிவனது கருணையருடெரிவித்தல்.*

181. அகன்றணைவுகூறல்

*செய்யுள்* : புகழும்.

*கொளு* : *பிரியிற் பழியும் பொருந்திற் புகழுமா மென்றருளுரைத்தல்.*

182. கடலோடு வரவுகேட்டல்

*செய்யுள்* : ஆரம்.

*கொளு* : *இன்பசிவமுயிர்வரவு விந்துவாரங்கேடலைக் கேட்டல்.*

183. கடலோடு புலத்தல்

*செய்யுள்* : பாணிகர்.

*கொளு* : பின்னுமுயிராய் மன்னியுரைத்தது.

184. அன்னமோடாய்தல்

*செய்யுள்* : பகன்றுமரை.

*கொளு* : *இன்பேயுயிரன் பாராய்தல்.*

185. தேர்வழிநோக்கிக் கடலோடுகூறல்

*செய்யுள்* : உள்ளும்.

*கொளு* : *இன்புருச் சிவமே யன்பாமுயிராவர் முன்புனல்வழியை மூடாதென்றது.*

186. கூடலிழைத்தல்

*செய்யுள்* : ஆழிதிருத்தும்.

*கொளு* : *இன்பசக்தியுயிர் சிவமாயுறுமோ வென்னுங் குறி பார்த்தல்.*

187. சுடரோடு புலம்பல்

*செய்யுள்* : கார்த்தரங்கம்.

*கொளு* : இன்பேயுயிரா யிடருற்றியம்பியது.

188. பொழுதுகண்டு மயங்கல்
செய்யுள் : பகலோன்.
கொளு : கருவிகழிந்த பருவம்நோக்கி யின்பேயுயிருக் கன்பாயழுங்கல்.

189. பறவையோடு வருந்தல்
செய்யுள் : பொன்னும்.
கொளு : இன்பருனேக்க மெங்குமாய்க்கண்டது.

190. பங்கயத்தோடு பரிவுற்றுரைத்தல்
செய்யுள் : கருங்கழி.
கொளு : இன்புற்றிட்நோக்கி யன்புற்றிரங்கியது.

191. அன்னமோடாய்தல்
செய்யுள் : மூவறழீஇய.
கொளு : இன்பமுயிர்க்கா யெடுத்தியம்பியது.

192. வரவுணர்ந்துரைத்தல்
செய்யுள் : நில்லா.
கொளு : அருளேசென்றரற்கியம்பியது.

193. வருத்தமிகுதிகூறல்
செய்யுள் : வளரும்.
கொளு : இன்பசத்தி யிரங்கலில் யுயிர்க்கெடுத் துரைத்தல்.

முற்றும்.

## [1]16. உடன்போக்கு

*[அருளுயிர்க்கருமையறியவுரைத்தலும் ஆனந்தத் திடையழுத்துவித்தலும்].*

*(அதாவது) ஆனந்தத்திடை அழுத்துவித்தது.*

194. பருவங்கூறல்

*செய்யுள் :* ஓராகம்.

*கொளு :* சிவம்பெறும்பத மிதுவெனவுரைத்தது.

195. மகட்பேச்சுரைத்தல்

*செய்யுள் :* மணியக்.

*கொளு :* விரைவிலின்பம் பெறுவாயென்றது.

196. பொன்னணியுரைத்தல்

*செய்யுள் :* பாப்பணி.

*கொளு :* அன்புடையோர்க்கே யின்பாமென்றது.

197. அருவிலையுரைத்தல்

*செய்யுள் :* எலும்பாலணி.

*கொளு :* *இன்பளவிலாதால், அன்பமையாதால்,
முன்புறவருளுயிர் தன்பாலுரைத்தல்.*

198. [2]அருமைகேடழிதல்

*செய்யுள் :* விசும்புற்ற.

*கொளு :* உயிரின்பம் எமக்கு வருமோவென *அன்புற்
றழிந்தது.*

199. தளர்வறிந்துரைத்தல்

*செய்யுள் :* மைதயங்கும்.

*கொளு :* உன்னுடன் சிவமுறுமென அருள் *உயிர்க்கு*
இன்பசக்தி இயல்பெடுத்துரைத்தல்.

---

1. *எட்டில் 'உடன்பேரக்கு' என்ற தலைப்பு இல்லை. 'ஆனந்தத் திடை அழுத்திவித்து' என்று மட்டும் உள்ளது.*

2. *எட்டில் 'அருமை கொடழிதல்' என்று காணப்படுகிறது.*

200. குறிப்புரைத்தல்
செய்யுள் : மாவை.
கொளு : இன்ப சத்தியியல்பாங் குறிகண்டன்பா மருளேயகல்வே மென்றல்.

201. அருமையுரைத்தல்
செய்யுள் : மெல்லியல்.
கொளு : சிவனின் இன்பருமை பெருமை உயிரின் வளமை உயிர் அருளுக்குரைத்தல்.

202 ஆதரங்கூறல்
செய்யுள் : பிணையும்.
கொளு : அன்பு இரக்க மகிழ்ந்திரங்கும் இன்பென்பது.

203. இறந்துபாடுரைத்தல்
செய்யுள் : இங்கயல்.
கொளு : இன்புக்கிடம் உயிரென்றருளுரைத்தல்.

204. கற்புநலனுரைத்தல்
செய்யுள் : தாயிற் சிறந்தன்று.
கொளு : அருள்சிவத்திடைச் சென்றுதரங் கூறியது.

205. துணிந்தமைகூறல்
செய்யுள் : குறப்பாவை.
கொளு : இன்புக்குயிர்ச்செய லெடுத்தருளுரைத்தல்.

206. துணிவோடு வினவல்
செய்யுள் : நிழற்றலை.
கொளு : உயிர்வருங்காரணமேதென வழிநினைந் தருளே யறிந்தாராய்ந்தறிதலாகும்.

207. போக்கறிவித்தல்
செய்யுள் : காயமும்.
கொளு : உயிருடன்படல் அருளின்புக்கியம்பல்.

208. நாணிழந்து வருந்தல்
செய்யுள் : மற்பாய்.
கொளு : இன்பேயுயிருடன் ஏகாந்தமேகத் துணிந் தது.

209. துணிவெடுத்துரைத்தல்
செய்யுள் : கம்பம்.
கொளு : இன்பத்துணிவுயிர்க்கருளியம்பியது.

210. குறியிடங்கூறல்
செய்யுள் : முன்னேன்.
கொளு : யான்கொடுவரும்வழி நீவருகென்றது.

211. அடியோடுவழிநினைந்தவனுளம்வாடல்
செய்யுள் : பனிச்சந்திரன்.
கொளு : என்னெறிக்கின்பின் இணையடிவருந்து [மென்
றுன்னியுளந்தளர்ந் துரைத்தல்.

212. கொண்டு சேறல் [கொண்டு சென்றுய்த்தல்]
செய்யுள் : வைவந்த.
கொளு : கேவலாதீதத்துயிர்க்கு அருள்சிவத்தைத் தரிசிப்பித்தது.

213. ஓம்படுத்தல் [ஓம்படுத்துரைத்தல்]
செய்யுள் : பறந்திருந்.
கொளு : சிவத்திடை நெஞ்சந் திறம்பாதென் றருளுயிர்க் குரைத்தல்.

214. வழிப்படுத்துரைத்தல்
செய்யுள் : ஈண்டொல்.
கொளு : இன்பைவிடா தினிதுகொடே கென்றுயிர்க் கருளுரைத்தல்.

215. மெல்லக்கொண்டேகல்
செய்யுள் : பேணத்திருத்திய.
கொளு : இன்பைப்பிரியா தினிதுயிரியம்பியது.

216. அடலெடுத்துரைத்தல்
செய்யுள் : கொடித்தேர்.
கொளு : மூன்னுறுகருவிகள் முன்றிடிற்கெடுப்ப [னென்
றுன்னருமின்புக் குயிர்வலியுரைத்தல்.

217. அயர்வகற்றல்
செய்யுள் : முன்னேன்.
கொளு : இடர்க்குத்துணை யின்பன் றுயரியம்பியது.

218. நெறிவிலக்கல் [நெறிவிலக்கிக்கூறல்]
செய்யுள் : விடலையுற்ருர்.
கொளு : இன்பம்பெற்ருேரினி மாயைவழிச் செல்லாதிருத்தி யென்றுரைத்தல்.

219. கண்டவர் மகிழ்தல்
செய்யுள் : அன்பணை.
கொளு : உயிர்ச்சிவங்கலந்த உண்மையை யின்புபெற்ருர் கண்டுபெரு மகிழ்வுற்றது.

220. வழிவிளையாடல்
செய்யுள் : கண்கடம்மாற்.
கொளு : இன்பிற்கலந்துயி ரன்பளாவியது.

221. நகரணிமைகூறல்
செய்யுள் : மின்றங்கிடை.
கொளு : சிவமுயிர்சேரு மிடமிதுவென்று தெளிந் தவருரைத்தது.

222. நகர்காட்டல்
செய்யுள் : மின்போல்.
கொளு : அன்பாலடுத்த தென்றியம்பியது.

223. பதிபரிசுரைத்தல்
செய்யுள் : செய்குன்று.
கொளு : இன்பாமிடமிவை வேண்டுயிரியம்பியது.

224. சேவிலிதேடல்
*செய்யுள்* : மயிலெ‌ன.
*கொளு* : திரோதையைக்கடந்த செய்கையுரைத்தது.

225. அறத்தோடு நிற்றல்
*செய்யுள்* : ஆளரிக்கும்.
*கொளு* : அருளேதிரோதை யாந்திறமுரைத்தது.

226. கற்புக்கிரங்கல் [*கற்புநிலைக்கிரங்கல்*]
*செய்யுள்* : வடுத்தான்.
*கொளு* : திரோதையுமிரங்கித் திரும்பியுரைத்தது.

227. கவன்றுரைத்தல்
*செய்யுள்* : முறுவலக்.
*கொளு* : *இன்பின்செயலை யெண்ணித்திரோதை யன்பாயமுங்கி யறைந்ததாகும்*

228. அடிநினைந்திரங்கல்
*செய்யுள்* : தாமேதமக்.
*கொளு* : சிவனதுகருணையைத் திரோதைவியந்தது.

229. நற்றாய்க்குரைத்தல்
*செய்யுள்* : தழுவின.
*கொளு* : திரோதை பரைக்கின்பின் செய்கையுரைத்தது.

230. நற்றாய்வருந்தல்
*செய்யுள்* : யாழியன்.
*கொளு* : திரோதையுரைக்கப் பரைபிரிந்திரங்கல்.

231. கிள்ளைமொழிக்கிரங்கல்
*செய்யுள்* : கொன்னுனை.
*கொளு* : பரையின்பத்தின் பண்புக்கிரங்கியது.

232. சுடரோடிரத்தல்
*செய்யுள்* : பெற்றேனெடுங்.
*கொளு* : பரைதிருமேனிப் பண்புக்கிரங்கியது.

233. பருவநினைந்துகவறல்
செய்யுள் : வைம்மலர்.
கொளு : இன்பமுயிரன் பென்கொளவென்றது.

234. நாடத்துணிதல்
செய்யுள் : வேயின.
கொளு : திரோதைபரைக்குத் தேடுவேனின்பை யென்றல்.

235. கோடிக்குறிபார்த்தல்
செய்யுள் : பணங்க.
கொளு : பரையே சிவனுயிர்ப் பண்புக்குறி பார்த்தல்.

236. சோதிடங்கேட்டல்
செய்யுள் : முன்னுங்.
கொளு : திரோதை யுயிரின்புக்குஞ் சேர்ந்து [வருமோவென மூதறிவோரை மொழிமினென்றது.

237. சுவடுகண்டறிதல்
செய்யுள் : தெள்வன்.
கொளு : திரோதை சிவத்திற் சின்னத்துக்கியம்பியது.

238. சுவடுகண்டிரங்கல்
செய்யுள் : பாலொத்த.
கொளு : திரோதைசிவமசென்ற சின்னங்கண்ட [பின் னவன்வழி வருத்துமென் றழுங்கியுரைத்தல்.

239. வேட்டமாதரைக்கேட்டல்
செய்யுள் : பேதைப்பருவம்.
கொளு : திரோதை சிவத்தின் செய்கையுரைத்தது.

240. புறவோடு புலத்தல்
செய்யுள் : புயலன்றலர்.
கொளு : திரோதைசிவத்தின் செய்கையுரைத்தது.

241. குரவோடு வருந்தல்
செய்யுள் : பாயும்விடை.
கொளு : திரோதையெங்குஞ் சிவமாய்வினுயது.

242. விரதியரை வினவல்
செய்யுள் : சுத்திய.
கொளு : திரோதை உயிரின்புசெல்ல யோகியரை வினுதல்.

243. வேதியரை வினவல்
செய்யுள் : வெதிரேய்.
கொளு : இன்படைந்தோரெதிர்சென்ற திரோதை யன்புயிர் சிவத்திலடைதலை வினுதல்.

244. புணர்ந்துடன் வருவோரைப் பொருந்தி வினுதல்
செய்யுள் : மீண்டார்.
கிளவி : திரோதையடைந்த சிவத்தைக்காட்டியது.

245. வியந்துரைத்தல்
செய்யுள் : பூங்கயி.
கொளு : திரோதையின்புயிரின் செயல் விரித்துரைத்தது.

246. இயைபெடுத்துரைத்தல்
செய்யுள் : மின்ருெத்திடு.
கொளு : உயிர் சிவங்கலந்த வுண்மையைக்கண்டே திரோதையின்புரு சிவன் மேனியாமென்றது.

247. மீளவுரைத்தல்
செய்யுள் : மீள்வது.
கொளு : உயிர் சிவமறைந்தவொருமை செப்பியது.

248. உலகியல்புரைத்தல்
செய்யுள் : சுரும்பிவர்.
கொளு : அன்புடையுயிர்களின்படையுமென்றது.

249. அழுங்குதாய்க்குரைத்தல்
செய்யுள் : ஆண்டிலெடுத்த.
கொளு : திரோதை பரைக்குச் செப்பியதாகும்.

முற்றும்.

## 17. வரைவு முடுக்கம்

[*சிவனது கருணை தெரியவுரைத்தவ் வின்பம்பெற வருளெடுத்தியம்பியது*].

250. வருத்தமிகுதிகூறி வரைவுகடாதல்

*செய்யுள்* : எழுங்குலை.

*கொளு* : *சிவனது கருணைத்திறம் அறிவித்து அருள் உயிர் வரவுரைத்த உண்மையாகும்.*

251. பெரும்பான்மைகூறி மறுத்தல்

*செய்யுள்* : பரம்பயன்.

*கொளு* : *அருளுடன் உயிர் சிவம் அருகிடங் கேட்டல்.*

252. உள்ளதுகூறிவரவு விலக்கல் [*உள்ளதுகூறி* வரைவு *கடாதல்*]

*செய்யுள்* : சிறுர்.

*கொளு* : *உயிர்க்கருள் இன்புக்கிடமிதென் றுரைத்தல்.*

253. ஏதங்கூறிவரவு விலக்கல்

*செய்யுள்* : கடந்தொறும்.

*கொளு* : *சுத்த கேவலத்துயிர் பற்றுவமின்பெனில் அத்தகையிடரையருளறிவித்தல்.*

254. பகல்வரவு விலக்கல் [*பழவரவுரைத்துப் பகல்வரவு விலக்கல்*]

*செய்யுள்* : களிறுற்ற.

*கொளு* : *முத்திச்சகலமுழுதுபழியாமெனப் பற்றவுயிர்க்குப் பகர்ந்தருளாகும்.*

255. வரைவு தோன்றதலைவனையிரந்தது [*தொழுதிரந்துகூறல்*]

*செய்யுள்* : கழிகட்ட.

*கொளு* : *இன்புக்கிருண்மலத்தேகா தினியென உயிர்க்கிரங்கி அருளுரைத்தலாகும்.*

256. தாயறிவுகூறல்

செய்யுள் : விண்ணுஞ்.

கொளு : பரையின் பண்பை உயிர்க்கறிவிக்க இன்புடன் தானே இசைத்தலாகும்.

257. மந்திமேல்வைத்து வரைவுகடாதல்

செய்யுள் : வான்றோய்.

கொளு : பெற்றோர் பேறுகண்டுற்றவன் நிலையை
பரையுயிரறியப் பகர்ந்தருளே.

258. காவன்மேல்வைத்துக் கண்துயிலாமை [கூறல்]

செய்யுள் : நறைக்கண்.

கொளு : உயிர்க்கின்பிடையூறெடுத்தருளுரைத்தல்.

259. பகலுடன்பட்டாள் போன்றிரவுவரவிலக்கல்

செய்யுள் : கலராயினர்.

கொளு : சகலமுட்கொளற்போற் கேவலமொழிகின்றது.

260. இரவுடன்பட்டாள்போன்று பகல்வரவு விலக்கல்

செய்யுள் : இறவரை.

கொளு : கேவல சகலம் போலென்றது.

261. இரவும்பகலும் வரவுவிலக்கல்

செய்யுள் : சுழியா.

கொளு : கேவலசகலமுங்கிட்டா தென் றருளுயிர்க்குறைத்தல்.

262. காலங்கூறி வரவுவிலக்கல்

செய்யுள் : மையார்.

கொளு : பக்குவகாலமும் பரிவிடமிதுவென
மிக்கருளுயிர்க்குவிளம்பியதுதாமே.

263. கூறுவிக்குற்றல்

செய்யுள் : தேமாம்பொழில்.

கொளு : அருளுயிரின்றிபறிந்தாவதன்றிப்
பிறிதறியாதெனப்பெருமையுரைத்தது.

264. செலவு நினைந்துரைத்தல்

*செய்யுள் :* வல்சியின்.

*கொளு : சிவமுயிர்க்கன்பையறிவிக்க வருளுடன் பரிவுயிர்ப்பண்பு பகர்தலாகும்.*

265. போலிவழிவுரைத்து வரைவுகடாதல்

*செய்யுள் :* வாரிக்களிற்.

*கொளு :* இன்பின் கருணையின்னுங்கண் டிலையோ வென் *றுயிர்க்கருளுரைத்தது.*

*முற்றும்.*

---

## 18. வரைபொருட்பிரிதல்

வரைபொருட்பிரிதலென்பது, *கருணை [யருடிரோதை பரையின் புணர்தல்].*

266. முலைவிலை கூறல்

*செய்யுள் :* குறைவிற்கும்.

*கொளு : அன்புயிர் அடிமைக்கார்தலால் இன்புக் குக் கைம்மாறில்லை யென்றது.*

267. வருவதுகூறி வரைவுடன்படுத்தல்

*செய்யுள் :* வடுத்தன.

*கொளு :* அடியார்க்கலரா மலமதைவிடுத்து *முடியாவின்பின் உருகுறியென்றல்.*

268. வரைபொருட் பிரிவையுரையெனக்கூறல்

*செய்யுள் :* குன்றங்.

*கொளு : அன்பாமாசைகொண் டின்பெய்துவ [னெனவுயி ரின்புக்குரை யெனலருளே.*

269. நீயே கூறேன்றல்

*செய்யுள் :* கேழே.

*கொளு : இன்புக்கன்பை மனம் பெறச்செய்துநீ பின்பகலென்று பொருளுரைத்தது.*

270. சொல்லாதேகல்

செய்யுள் : வருட்டிற்.

கொளு : உயிர்ப்பரிவின்புக் கொவ்வாதென்றகறல்

271. பிரிந்தமை கூறல்

செய்யுள் : நல்லாய்.

கொளு : அருளுயிர்ப்பரிவின்புக் கறியவுரைத்தல்.

272. நெஞ்சொடு கூறல்

செய்யுள் : அருந்தும்.

கொளு : அன்புயிரகன்றதற் கின்புருவிரங்கியது.

273. நெஞ்சொடு வருந்தல்

செய்யுள் : ஏர்ப்பின்னை.

கொளு : உயிர்ப்பரிவின்புக் குற்றிரங்கியது.

274. வருத்தங் கண்டுரைத்தல்

செய்யுள் : கானமர்.

கொளு : இன்பின்கருணைக் கிரங்கியருளே
அன்புயிரகலா தருளுமென்றது.

275. வழியொழுகி வற்புறுத்தல்

செய்யுள் : மதுமலர்.

கொளு : நின்னதுகருணைகண் டுன்னடியாரெலா
மன்னுறுமென் றருள்வருந்தியுரைத்தல்.

276. வன்புறை யெதிர்ந்திரங்கல் [வன்புறையெதிரழிந்திரங்கல்]

செய்யுள் : வந்தாய்.

கொளு : இன்பேயுயிரின் பண்புரைத்திரங்கல்.

277. வாய்மைகூறி வருத்தந்தணித்தல்

செய்யுள் : மொய்யென்.

கொளு : உயிர்ப்பரிவெடுத்தரு ளேயெடுத்தரற்குரைத்தது.

278. தேருது புலம்பல்

செய்யுள் : மன்செய்த.

கொளு : அருளியம்பியுமரனுற்றுது கருணைமிக்கெழுந்தருளுடன் விளம்பியதாகும்.

279. காலமறைத்துரைத்தல்

செய்யுள் : கருந்தினை.

கொளு : இன்பின் பிரிவு கண்டன்பாங்காலமிதென்றெனவருளே யறைதலாகும்.

280. தூது வரவுரைத்தல்

செய்யுள் : வென்றவர்.

கொளு : உயிர்க்கருணையுண்டாதலை யருள்கண்டுரைத்தல்.

281 தூது கண்டழுங்கல்

செய்யுள் : வருவன.

கொளு : முன்புறுகரணங்கண்டின்புகின் றிரங்கல்.

282. மெலிவுகண்டு செவிலிகூறல்

செய்யுள் : வேயின.

கொளு : சிவத்தினுயிர்சேர்திறந் திரோதைகண்டுரைத்தல்.

283. கட்டு வைப்பித்தல்

செய்யுள் : சுணங்குற்ற.

கொளு : சிவத்திலின்பஞ் சேர்திறங்கண்டு திரோதையருளுடன் றெரியவினுதல்.

284. கலக்கமுற்று நிற்றல்

செய்யுள் : மாட்டியன்.

கொளு : சிவத்துயிர்சேர்ந்த திறமுலகறிதலருள்கண்டிதுவழி யாமோவென்றது.

285. கட்டுவித்தி கூறல்

செய்யுள் : குயிலிதன்.

கொளு : சிவனின்புயிருற்ற திவ்வீய திரோதை குறி பார்த்துணர்ந்து கூறியதாகும்.

286. வேலனை யழைத்தல்

செய்யுள் : வேலன்.

கொளு : திரோதை சிவனின்பின் செயல் வெளிப்படுத்தல்.

287. இன்னலெய்தல்

செய்யுள் : அயர்ந்தும்.

கொளு : இன்பே தனி நின்றிரங்கியுரைத்தல்.

288. வெறி விலக்கு [விக்க] நினைத்தல்

செய்யுள் : சென்றூர்.

கொளு : இன்பேயருளுட னியம்ப நினைத்தது.

289. ஐயந்தீர அறத்தோடு நிற்றலையுரைத்தல்

செய்யுள் : யாயுந்.

கொளு : இன்பமருளுயிர் அன்பெடுத்துரைத்தது.

290. அறத்தோடு நிற்றல்

செய்யுள் : வண்டலுற்.

கொளு : அருட்குச்சிவமே யெடுத்தறிவித்தல்.

291. ஐயந்தீரக் கூறல்

செய்யுள் : குடிக்கலர்.

கொளு : அருளேசிவத்தோ டதிசயித்துரைத்தல்.

292. வெறி விலக்கல்

செய்யுள் : விதியுடை.

கொளு : இன்புயிரெய்து மன்பருள்கண்டு பிறிதிலையென்றே யறிவறிவித்தல்.

293. தோழி அறத்தோடு நிற்றல் [செவிலிக்குத் தோழியறத் தொடு நிற்றல்]

செய்யுள் : மனக்களி.

கொளு : திரோதைக்கருளே சிவத்தியலியம்பல்

294. நற்குய்க்குச்சேவிலி அறத்தொடு நிற்றல்
*செய்யுள் :* இளையாள்.
*கொளு :* பரைக்குத்திரோதை பண்பெடுத்தியம்பல்.

295. தேர்வரவு கூறல்
*செய்யுள் :* கள்ளின.
*கொளு :* அருளுயிர்வரல்சிவற் கடுத்தியம்பியது.

296. மணமுரசு கேட்டு மகிழ்தல் [*மகிழ்ந்துரைத்தல்*]
*செய்யுள் :* பூரண.
*கொளு :* சிவமணமுயிர்பெற லருள்கண்டு மகிழ்ந்தது.

297. ஐயுற்றுக்கலங்கல்
*செய்யுள் :* அடற்களி.
*கொளு :* இன்னுமுயிர்க்கிடையூ றுண்டோவெனல்.

298. நிதிவரவு கூறுநிற்றல்
*செய்யுள் :* என்கடைக்.
*கொளு :* *அன்பறிவோடுயிரணைந்ததென்று இன்புக்கருளேயெடுத்தியம்பியது.*

*முற்றும்.*

---

## 19. மணச்சிறப்புரைத்தல்

மணச்சிறப்புரைத்தலாவது, *உயிர் சிவமணம் பெற்றுண்மை யாதல்.*

299. மணமுரசு கூறல்
*செய்யுள் :* பிரசந்.
*கொளு :* *மலவலிகெடுத்துச் சத்திநிபாதம் பெற்ற உயிர் நாதஓசை வந்ததென்று அருளின்புக்கு அறிவித்தல்.*

300. மகிழ்ந்துரைத்தல்
*செய்யுள் :* இருந்துதி.
*கொளு :* அருளேசிவமுயிர் *மணமியற்றல்.*

301. வழிபாடு கூறல்

செய்யுள் : சீரியலாவி.

கொளு : உயிர்சிவவின்பமுறு மத்துவிதத்தை யருளே திரோதைக்கறியவுரைத்தல்.

302. வாழ்க்கை நலங்கூறல்

செய்யுள் : தொண்டின.

கொளு : இன்புயிர் சேர்ந்த வியல்பையெடுத்துத் திரோதை பரைக்குச் செப்பியதாகும்.

303. காதல் கட்டுரைத்தல்

செய்யுள் : பொட்டணி.

கொளு : இன்புக்குயிர் சேரன்பாம்பணியை திரோதை பரைக்குக் செப்பியதாகும்.

304. கற்பறிவித்தல்

செய்யுள் : தெய்வம்.

கொளு : இன்புயிர்ப்பரிசினியல்பைத் திரோதை பண்பாம் பரைக்குப் பகர்தலாகும.

305. கற்புப் பயப்புரைத்தல்

செய்யுள் : சிற்பம்.

கொளு : இன்பின் வசமாமன்புயிரன்பு முன்பாம் பரைக்கு முன்னருளுரைத்தது.

306. மருவுதலுரைத்தல்

செய்யுள் : மன்னவன்.

கொளு : உயிரின்பொன்ருய் மருவுதலுரைத்தது.

307. கலவியின்பங் கூறல்

செய்யுள் : ஆனந்த.

கொளு : உயிர்சிவமருவி யொன்றிரண்டொளிரச் செயிர்தீரின்பத் திறமருளுரைத்தல்.

முற்றும்.

---

## 20. கல்வியிற்பிரிதல் [ஓதற்பிரிவு]

கல்வியிற்பிரிதலாவது, பூரண இன்பத்திறம் பாராட்டல். அவையாவன :—

308. கல்விநலங் கூறல்

செய்யுள் : சீரள.

கொளு : உயிரனுபோக நூற்பாராட்டை மருவின தென்றருளே மன்னின்புறு சிவத்துக் குரைத்தது.

309. பிரிவு நினைந்திருத்தல் [பிரிவுநினைவுரைத்தல்]

செய்யுள் : வீதலுற்.

கொளு : அனுபவவிலக்கணமறிய வுயிரகன்றதென்று இன்புக்கருளேயிசைத்ததாகும்.

310. கலக்கங் கண்டுரைத்தல்

செய்யுள் : கற்பாமதில்.

கொளு : அனுபவநூலுக்கன்பாமுயிரெனப் பின்னுமருளின் பிற்பேசியதாகும்.

311. வாய்மொழிகூறித் தலைமகள் வருந்தல்

செய்யுள் : பிரியாமை.

கொளு : பிரியாதின்பாமுயிரே பிரியிற் றரியாதென்றின்பந்தானே யுரைத்தல்.

முற்றும்.

---

## 21. காவற்பிரிவு

காவற்பிரிவாவது, இன்பத்திறத்தை எங்குங் காண்டல்; அவையாவன :—

312. பிரிவறிவித்தல்

செய்யுள் : மூப்பான்.

கொளு : உயிருலகியாவுமுற்றின்பாமென வருளேயின்புக்கறியவுரைத்தல்.

313. பிரிவு கேட்டிரங்கல்
செய்யுள் : சிறுகண்.
கொளு : அனுதிமலமழித்துயிரானந்தம்பெற்ற அருளுக்கின்பேயறிவித்திரங்கல்.

முற்றும்.

---

## 22. பகைதணித்தல் [பகைதணிவினைப்பிரிவு]

பகைதணித்தலாவது, இன்பக்கனமன்றி வேறில்லையெனல். [வேறிலையுலகென்றல்].

314. பிரிவு கூறல் [பிரிவறிவித்தல்]
செய்யுள் : மிகைதணி.
கொளு : அலகிலுயிரின்புற்றழியாமலப்பகை யுலவிலனுபவவுயிருற்றதருளுரைத்தல்.

315. வருத்தந்தணித்தல்
செய்யுள் : நெருப்புறு.
கொளு : உயிர் நீங்காதுடனுண்மையருளே யின் புக்கறியவுரைத்தது.

முற்றும்.

---

## 23. உற்றுழிப்பிரிவு [வேந்தற்குற்றுழிப்பிரிவு]

உற்றுழிப்பிரிவாவது, இன்பாராமை யன்பே யென்றமை. அவை வருமாறு :—

316. பிரிந்தமை கூறல்
செய்யுள் : போது.
கொளு : அனுபவவின்பம்பெற்ற வுயிரடுத்தோர்க் குரிமையாயருளுக்குரைத்தல்.

317. பிரிவாற்ருமை [பிரிவாற்ருமைகார்மிசை வைத்தல்]
செய்யுள் : பொன்னி.
கொளு : அநுபவமடுத்தோர்க்கறிவித்திடும்
உயிர்க்கின்பேயிரங்கியங் கெய்துவ
[மென்றது.

318. வானேக்கி வருந்தல்
செய்யுள் : கோலி.
கொளு : அனுபவம் பிறருக்கடுத்தது கண்டவ்வுயிரவ்வின்
பப் பிரிவையெண்ணி இரங்கியது.

319. கூதிர்கண்டு கவறல்
செய்யுள் : கருப்பின.
கொளு : இன்பேயிரங்கி யன்புயிராயிருத்தலான்
பரமுயிர்ப்பரிவுக்காற்ருதுரைத்தது.

320. முன்பனிக்கு நோந்துரைத்தல்
செய்யுள் : சுற்றின.
கொளு : அன்பா முயிரகலுதலில்லையென
தன்பேபரையை யிகழ்ந்திரங்கியது.

321. பின்பனி நினைந்திரங்கல்
செய்யுள் : புரமன்.
கொளு : இன்பினிரங்க லெடுத்துயிருரைத்தது.

322. இளவேனிற் கண்டின்னலெய்தல்
செய்யுள் : வாழும்படி.
கொளு : மன்னியவுயிரை யுன்னியின்புரைத்தது.

323. பருவங்காட்டி வற்புறுத்தல்
செய்யுள் : பூண்பதென்.
கொளு : அருளின்புக்குயிர் வரவுநலங்கூறியது.

324. பருவமன்றென்று கூறல்
செய்யுள் : தெனிதாற்.
கொளு : பக்குவவுயிர்க்குப்பரிவுறுமின்பமிக்க
பக்குவமென்றருளுரைத்தது.

325. மறுத்துக் கூறல்

செய்யுள் : தேன்றிக்.

கொளு : அருளுயிர்ப்பருவமென்றெனவின்பே
தெருளுறுபக்குவந் தெரிந்து செப்பியது.

326. தேர்வரவு கூறல்

செய்யுள் : திருமா.

கொளு : அருளின்புடனுயிரணுகும் வரவுரைத்தல்.

327. வினைமுற்றி நினைதல்

செய்யுள் : புயலோன்.

கொளு : அனுபவவின்பை நினைத்துயிரன்பாய்க்
கருணைமுகம்பெறக் கசிந்துள்ளுருகியது.

328. நிலைமை நினைந்துகூறல்

செய்யள் : சிறப்பிற்.

கொளு : இன்பம்பிரியா தன்புசெய்திறத்தைப்
போதத்தோ டுயிர்புகன்றதாகும்.

329. முகிலோடு கூறல்

செய்யுள் : அருந்தே.

கொளு : அன்பை யறிவிற்குமு
னின்பை யெய்தாதென்றல்.

330. வரவேடுத்துரைத்தல்

செய்யுள் : பணிவார்.

கொளு : புறச்சமயத்தை யகப்படுத்தவர் புகழ்ந்திட
உயிர்வரல் பரிந்தருளுரைத்தது.

331. மறவாமை கூறல்

செய்யுள் : கருங்குவளை.

கொளு : இன்புநீங்கா தெங்குமிற்றலி
னன்புயிர் மறவா தருளுடனுரைத்தல்.

முற்றும்.

---

## 24. பொருள் வயிற்பிரிவு

பொருள்வயிற்பிரிதலாவன :—[*தானதுவது தானாகுந் தன்மை*].

332. வாட்டங் கூறல்

*செய்யுள் :* முனிவரும்.

*கொளு :* *இன்புக்குரைக்கின் மன்புரிவுறுமென வன்பாமுயிரே யருளுடனுரைத்தல்.*

333. பிரிவு நினைந்துரைத்தல் [*பிரிவுநினைந்துரைத்தல்*]'

*செய்யுள் :* வறியார்.

*கொளு :* *இன்புக்குயிர்ப் பிரிவெடுத்தருளுரைத்தல்.*

334. ஆற்றாதுரைத்தல்

*செய்யுள் :* சிறுவா.

*கொளு :* *இன்புயிர்ப்பிரிவுக் கன்புறுபரிவாந் தன்செயலருளுக் கறியவிரங்கல்.*

335. ஆற்றாமை கூறல்

*செய்யுள் :* வானக்கடி.

*கொளு :* *இன்பாம்பொருளை விட்டெனதருமுயிரென வன்பருளின்பினாற்றாதுரைத்தல்.*

336. திணைபெயர்த்துரைத்தல்

*செய்யுள் :* சுருடரு.

*கொளு :* *இன்புயிர்ப்பிரிவுக் கன்புறும்பிரிவால் முன்பாகமொழியை முன்னிமொழிந்தது.*

337. பொருத்தமறிந்துரைத்தல்

*செய்யுள் :* மூவர்.

*கொளு :* *அன்பன்றி வேறனவாலு மென்னென வின்புக்கருளே யிசைய மொழிந்தது.*

338. பிரிந்தமை கூறல்

*செய்யுள் :* தென்மாத்.

*கொளு :* *பிரிந்துயிரன்பு பிரிவிலதாமெனப் பரிந்தருளின்புடன் பகர்தலாகும்.*

339. இரவுறு துயரத்துக்கிரங்கியுரைத்தல்
செய்யுள் : ஆழியொன்.
கொளு : இன்புயிர்பரிவுக் கன்பருளிரங்கல்.

340. இகழ்ச்சி நினைந்தழிதல்
செய்யுள் : பிரியாரென.
கொளு : பிரியிற்றரியா துயிரெனப்பேணிப்
பரிவுறுமின்பே பண்புவாடியது.

341. உருவு வெளிப்பட்டு நிற்றல்
செய்யுள் : சேணுந்.
கொளு : பிரியுமிடமெலா முயிர்பேரின்பமெய்தியது.

342. நெஞ்சொடு நோதல்
செய்யுள் : பொன்னணி.
கொளு : சென்றவிடமெலாஞ் சிவானந்தமேவிட
நின்றவுயிர்நினைந்து நெஞ்சொடுநோதல்.

343. நெஞ்சொடு புலத்தல்
செய்யுள் : நாய்வயின்.
கொளு : உயிர்போதத்தொடு புலந்து கூறியது.

344. நெஞ்சொடு மறுத்தல்
செய்யுள் : தீமேவிய.
கொளு : இன்பேமன்றி வேறிலது பொருளென
வன்புயிர்போத நீத்தருளேயாயது.

345. நாளெண்ணி வருந்தல்
செய்யுள் : தெண்ணீர்.
கொளு : அருளுயிர்ப்பிரிவி னளவாராய்ந்தது.

346. ஏறுவரவு கண்டிரங்கல் [இரங்கியுரைத்தல்]
செய்யுள் : சுற்றம்பல.
கொளு : போதமிழந்துயிர்பொற்புவாட
ஆதரவாயருளகன்மகிழ்வுற்றது.

347. பருவங்கண்டிரங்கல்
செய்யுள் : கண்ணுழை.
கொளு : இன்பந்தன்னை யெய்துபருவமென்
றன்பாமுயிரேயறிவிழந்தெய்தல்.

348. முகிலோடு கூறல்
செய்யுள் : அற்படு.
கொளு : அன்பின்முன் போதத்தையணையாதென்
றது.

349. தேர்வரவு கூறல்
செய்யுள் : பாவியை.
கொளு : அன்போடுயிரு மமர்ந்துவருதலை
யின்புக்கருளே முன்பியம்பியது.

350. இளையவரெதிர்கோடல்
செய்யுள் : யாழின்.
கொளு : பேரன்பொடு முயிர்தனக்குவாரா
வின்பினருளெதிர்கொண்டது.

351. உண்மகிழ்ந்துரைத்தல்
செய்யுள் : மயின்மன்னு.
கொளு : உயிரே யின்போடுற்றுள மகிழ்ந்து
பிரிவிலையழிவும் போகமுமென்றது.

முற்றும்.

---

## 25. பரத்தையிற்பிரிவு

[அறிவு பூரணமாகியின்பாதல்]

பரத்தையிற்பிரிதலாவது, உரைத்த சிவானந்த மாண்பெல்லாம் பூரணமாய்க் கண்ட அனுபூதி.

352. கண்டவர் கூறல்
செய்யுள் : உடுத்தணி.
கொளு : பரசமயத்திலும் பத்திசெய்தனுபவம்
விரவிடுமுயிர்ச்சி விதியேதென்றது.

353. பொறையுவந்துரைத்தல்

செய்யுள் : சுரும்புரு.

கொளு : *இன்பின் பொறையறிந்*
*தன்பரு ளுரைத்தல்.*

354. பொதுப்படக் கூறல் [*பொதுப்படக்கூறிவாடியழுங்கல்*]

செய்யுள் : அப்புற்ற.

கொளு : இன்பேயுயிர்விதி யெண்ணியிரங்கல்.

355. கனவிழந்துரைத்தல்

செய்யுள் : தேவாசுர.

கொளு : *இன்புயிர் மறந்து*
*மன்பகலா தென்றல்.*

356. விளக்கொடு வெறுத்தல்

செய்யுள் : செய்ம்முக.

கொளு : *இன்புயிர்கதிச் செஞ்சுடர்கரைத்தல்(?).*

357. வாரம் பகர்ந்துரைத்தல் [*வாரம்பகர்ந்து வாயின்மறுத்துரைத்தல்*]

செய்யுள் : பூங்குவளை.

கொளு : *இன்புயிரன்பை யேடுத்தேயிசைத்தல்.*

358. பள்ளியிடத்தூடல்

செய்யுள் : தவஞ்செய்.

கொளு : *இன்பிகழ்ந் துயிரை*
*யன்பக லென்றது.*

359. செவ்வணி விடுக்கவில்லோர் கூறல்

செய்யுள் : தணியுறப்.

கொளு : *பரசமயத்தினும் பாராட்டேனென*
*விரவிமின்படியார் மேவியுரைத்தல்.*

360. அயலறித்தவளழுக்கமெய்தல் [*அயலறிவுரைத்தவளழுக்கமெய்தல்*]

செய்யுள் : இரவணை.

கொளு : *அயல்வ ரறிந்து மானந்த மகலா*
*தியலை யிசைத்தே யிரங்கிய தின்பம்*

361. சேவ்வணிகண்ட வாயிலவர்கூறல்
செய்யுள் : சிவந்த.
கொளு : இன்பின்பருவ முன்பறிவித்த
வன்பினடியரை யடிகண்டுரைத்தல்

362. மனைபுகல்கண்ட வாயிலவர்கூறல்
செய்யுள் : குராப்பயில்.
கொளு : புகலிடமுயிர்க்குப் பூரணமேயெனத்
தகவுடையடியர் தாமறிந்துரைத்தது.

363. முகமலர்ச்சி கூறல்
செய்யுள் : வந்தான்.
கொளு : உயிரிடையின்ப முற்றிடுமெழுச்சிச்
செயிர்தீரடியார் தெரிந்துசெப்பியது.

364. காதனிகழ்வுரைத்தல் [காலநிகழ்வுரைத்தல்]
செய்யுள் : வில்லி.
கொளு : பருவத்தின்பம் பழுத்தெளிவெய்து
மருவிப்பிரியா வடியருரைத்தது.

365. எய்தலெடுத்துரைத்தல்
செய்யுள் : புலவித்திரை.
கொளு : இன்பினனுபவ மெய்தியபின்னுயி
ரன்புடனதுவா யகமகிழ்வுற்றது.

366. கலவிகருதிப் புலத்தல்
செய்யுள் : செவ்வாய்.
கொளு : அன்பாலனுபவ மளவின்றுயி
னின்பேயிரங்கி யதன்புயிரறிந்தது.

367. குறிப்பறிந்து புலந்தமைகூறல்
செய்யுள் : மலரை.
கொளு : உயிர் போதத்தின் உட்குறிப்புணர்ந்து
இன்பம் அகலாதகன்ற தவ்வணறிந்
துரைத்தல்.

368. வாயிலவர் வாழ்த்தல்
செய்யுள் : வில்லே.
கொளு : ஆருயிரின்ப மனுபவம்பெறலின்
பொருளடியார் பெருமகிழ்வுற்றது.

369. நீர்ப்புனல் வரவுரைத்தல் [புனல்வரவுரைத்தல்]
செய்யுள் : தூன்முதிர்.
கொளு : அன்பர்நீரி லுயிராடுகவெனப்
பின்புமடியார் பேசியதாகும்.

370. தேர்வரவுகண்டு மகிழ்ந்துகூறல்
செய்யுள் : சேயே.
கொளு : அனுபவமுடைய ராலியாவருமின்பம்
பெறுகுவதென்று பேசியதடியார்.

371. புனல்விளையாடித் தம்முள்ளுரைத்தல்
செய்யுள் : அரமங்கை.
கொளு : அன்புடையாரிடத் தியாவருமுறுமென
முன்பணிமதத்தான் முன்னியுரைத்தது.

372. தன்னை வியந்துரைத்தல்
செய்யுள் : கனலூர்.
கொளு : புறச்சமயத்திற் பெரிதுமன்புடையோர்
மிகப்புகழ்ந்தவரையே வியந்ததாகும்.

373. நகைத்துரைத்தல்
செய்யுள் : இறுமாப்.
கொளு : ஆருயிர்பிரியவன்பாமின்பே
பொருள்பிறர்க்குப் பிறக்குமென்றது.

374. நாணுதல்கண்டு மிகுத்துரைத்தல்
செய்யுள் : வேயாது.
கொளு : ஆருயிர்பிரிந்திடப் பேரின்பியல்பு [கண்டன்பா
மருளேமன்பெற வுரைத்தல்.

375. பாணன் வரவுரைத்தல்
செய்யுள் : விறலியும்.
கொளு : உயிர்ப்பிரிவறியா வுண்மையின் புக்குப்
பயிர்ப்புறுமுயிர்த்தொழில் பரிந்தரு
[ளுரைத்தது.

376. தோழியியற்பழித்தல்
செய்யுள் : திக்கினி.
கொளு : உண்மையின்பிணைவிட்டுயிர் பிறர்ச்
[சேறலால்
வண்மையலதெனவகுத்தருளுரைத்தது.

377. உழையரியற்பழித்தல்
செய்யுள் : அன்புடை.
கொளு : பரசமயத்திற் பரிவுறுமுயிர்க்குத்
தகவிலரடியார் தாமியம்பியது.

378. இயற்பட மொழிதல்
செய்யுள் : அஞ்சார்.
கொளு : அடியார்க்கின்பே யுயிரியல்புரைத்தது.

379. நினைந்து வியந்துரைத்தல்
செய்யுள் : தெள்ளம்.
கொளு : பரசமயத்திலும் பண்புடையுயிரே யுண்
மையின்பிணை யுணர்ந்துற்றிட வுரைத்
தது.

380. வாயில்பெறுத மகன்றிறம் நினைத்தல்
செய்யுள் : தேன்வண்டு.
கொளு : இன்படியார்வந் தெதிராவிடில் யா
மென்பெறுவோ மென்றிரங்கியதுயிரே.

381. வாயிற்கணின்று தோழிக்குரைத்தல்
செய்யுள் : கயல்வந்த.
கொளு : எப்பணிசெயினுமின்பருளன்றிலையென
உட்கருத்தருளுக்குயிருவந்துரைத்தது.

382. வாயில்வேண்டத் தோழிகூறியது
செய்யுள் : கூற்றுயின.
கொளு : பரமதரிடத்துயிர்பண்புறுதொழிலு
மிங்குதவிடுமன்புமுற்றருளுரைத்தது.

383. தோழிவாயில் வேண்டல்
செய்யுள் : வியந்தலே.
கொளு : ஆனந்தம்பெற வழுங்கியதுயிரென்றறுதி
யியற்கைப் பணியருளுரைத்தது.

384. மனையவர் மகிழ்தல்
செய்யுள் : தேவியங்.
கொளு : இன்பின்பண்புமன்புயிரியல்புங்
கண்டவடியார் விண்டுரைத்தது.

385. வாயின் மறுத்துரைத்தல்
செய்யுள் : உடைமணி.
கொளு : முன்புயிரன்பு கண்டின்பருட்குரைத்தது.

386. பாணனோடு வெகுளுதல்
செய்யுள் : மைகொண்ட.
கொளு : பரசமயத்துயிர் பரிவாகாதென்
றின்பே போதத்தோ டன்பிகழ்ந்துரைத்தல்.

387. பாணன் புலந்துரைத்தல்
செய்யுள் : கொல்லாண்.
கொளு : ஆருயிர்க்கின்பை யருளெனப்போதம்
பொருள்கூறெனப்பின் பணிந்
[துரைத்தது.

388. விருந்தோடு செல்லத்துணிந்தமை கூறல்
செய்யுள் : மத்தக்கரி.
கொளு : உண்மைப்பணிக் கின்புவந்துகண்ட
வண்மையடியார் வகுத்ததாகும்.

389. ஊடறணிதல் [ஊடறணிவித்தல்]

செய்யுள் : கவலங்கொள்.

கொளு : மெய்யன்போடுயிர் மேவிவரலாற்
செய்யின்பிணியெனச் சென்றரு
[ளுரைத்தல்.

390. அணைந்தவழியூடல்

செய்யுள் : சேருன்.

கொளு : பரசமயத்தார் பழிப்பரென்றுயிர்க்கு
விரவிடுமின்ப மிகவெடுத்தூடல்.

391 புனலாட்டுவித்தமை கூறிப்புலத்தல்

செய்யுள் : செந்தார்.

கொளு : பரமானந்தம் பதிந்தபினுண்மைப்
பணியுயிர் செய்யுமோவென வின்
[புரைத்தது

392. கலவிகருதிப்புகறல் [கலவிகருதிப்புலத்தல்]

செய்யுள் : மின்றுன்.

கொளு : ஆனந்திக்கன்புவேறிலை யெனத்
தானின்பேயுயிர் தன்னெடுரைத்தது.

393. மிகுத்துரைத்தூடல்

செய்யுள் : செழுமிய.

கொளு : சரியைமுன் மூன்றுக்குஞ் சமனலவோ
வென்றரிதா ஞானப்பெருமை யின்
புரைத்தது.

394. ஊடனீடிவாடி யுரைத்தல்

செய்யுள் : திருந்தே.

கொளு : அன்பினேக்கருள் யாண்டபின் உயிரின்
பானந்தத்திருத்துகவென்றது.

395. துனியொழிந்துரைத்தல்

செய்யுள் : இயன்மன்.

கொளு : முன்செயன்பின்முறைமை நோக்கி
யின்பே யிகழாதெய்தியதுயிர்க்கு.

396. புதல்வன்மேல் வைத்துப் புலவி தீராநிற்றல்
செய்யுள் : கதிர்த்த.
கொளு : பொதுவன்புதீரப்புகன் றுயிர்க்கின்ப
மிகுசுகம்புதிதாய் மேவிட விளம்பல்.

397. கலவியிடத்தூடல்
செய்யுள் : சிலைமலி.
கொளு : ஆனந்தமேவிட வழுந்திடுமுயிர்க்குத்
தானதுவாகித் தளர்ந்துதணந்தது.

398. முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தல்
செய்யுள் : ஆறுர்.
கொளு : ஆனந்தவசமா யழுந்திடுமொருயிர்
போனபின்பிகழ்ந்து புதிதெனப்
[புகழ்ந்தது.

399. பரத்தையைக்கண்டமை கூறிப்புலத்தல்
செய்யுள் : ஐயுறவாய்.
கொளு : பூரணவின்பம் புறச்சமயத்திலும்
வேரிடாதென்று விளம்பியதுயிர்க்கு.

400. ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தல்
செய்யுள் : காரணி.
கொளு : பெரும்பூரணத்திற் பொருந்தினர்
[பிறர்தமை
விரும்பினர்க்கின்பம் விளைந்திட
[லுரைத்தது.

முற்றும்.

பேரின்ப நிட்டையன்பு விலாசம் முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாய வாழ்க என்ற பத வியாக்கியானம்
முற்றிற்று.

## 1. நாதன்ருள் வாழ்க

### பதப்போருள்

நாதன்ருள் வாழ்க என்ற திருவருள் வினியோகம். வாழ்த்து என்பது முற்பதப் பயனெனக் கொள்க.

நாதன்ருளாவன: நாத விந்து, செகத்சொரூபமான பரம் பொருளாகிய பரமசிவன் திருவடி. அடியாவது, சகல தத்துவங்களுக்கும், [1]மூவகையான ஆன்மாக்களுக்கும் மூலகாரண ஆதாரமான இறையடி. அவ்வடியை அறிந்து அநுபூதி பெறுவதே சிவஞானம். அதுவே பதி சொரூபமான மேற்பட்ட நிலே. சிவஞானபோத முதற்சூத்திரக் கருத்தும் அவையாதலானும், வேதாகம புராண சித்தாந்தமும் அவையாதலாலும் நாதன்ருளே பதி.

பதியாவது, பசு பாசம் இரண்டுக்கும் மேலாய், அருவம், உருவம், முக்குண ஓர் அடையாளம். இவைகள் இலவாய், நின்மலமாய், ஒரு முதலாய், நித்தமாய், அசைவற்றதாய், [2]கண்டிக்கப்படாததாய், அறிவுருவானலன்றிக் கிட்டுதற்கரிதாய், அறிவானுற் சென்றடையும் பேறதாய், அணுவுக்கணுவாய், மகத்துக்கு மகத்தாய் விளங்கும்.

பரமசிவன் பிரபஞ்சத்தை நடத்தும் பொருட்டாகக் கருணேயே திருமேனியாகக் கொள்வர்.

அவையாவன :—

செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படு பொருள்; முதற்காரணம், துணேக்காரணம், நிமித்தகாரணம், காரியவினே இன்றியே கண்ட உலகத்திற் சருவகாரியமும் புருடனுலே நடப்பதுபோல. உயர்திணே ஆண்பால் ஒருமைப் படர்க்கைக் குறிப்பு வினேப்பெயர் விளக்கி நின்றதால், நாதன் எனப் பேர்கொண்ட(து) பரம்பொருளே.

---

1. விஞ்ஞான கலர்; பிரளயா கலர்; சகலர்.
2. கண்டிக்கப் படாதது - பிளவு படுத்தப்படாதது.

[1]பரிபூரணானந்த பரசிவத்தில் ஆயிரத்திலொன்று பராசத்தி; அதில் ஆயிரத்திலொன்று ஆதிசத்தி; அதில் ஆயிரத்திலொன்று இச்சாசத்தி; அதில் ஆயிரத்திலொன்று ஞானசத்தி; அதில் ஆயிரத்திலொன்று கிரியாசத்தி. இவ்வாறாகி, ஆதிகாரணமான குடிலை என்று பெயருடைய சுத்த மாயையிலிருந்த இச்சா ஞானக் கிரியைகள் சிவத்துடனே பொருந்திக் கலந்து, இந்த ஞானக் கிரியாசக்தி அதிட்டானம் தனித்தும், சமனாகவும், ஏற்றக்குறைவாகவும் திருமேனிகொண்ட நாதம், விந்து, சதாசிவர், ஈசுவரர், ருத்திரர் இவ்வைவரும், அதனில் தோற்றமான சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுவரன், சுத்தவித்தை என்ற ஐந்து தத்துவத்திலும் பொருந்துவார்கள். நாதம், விந்து, சதாசிவம், ஈசுவரன் என்ற இந்த நாலும் [2]அதிட்டானமான இவர்களுக்கும் [3]அதிட்டேயமான தத்துவங்களுக்கும் பெயர்கள் ஒன்றாகவே இருக்கும். நாதம் விந்துவான அதிட்டானமும், ஞானக் கிரியா சத்தி அதிட்டானமான பரநாதம் பரவிந்துவென்ற பெயரையுடைய சிவமும் சத்தியும், நாதனான பரமசிவனுக்கு நிட்களத்திருமேனி; சாதாக்கியமான அதிட்டானம் சகளாகளத் திருமேனி; ஈசுவரன் ருத்திரனான அதிட்டானமும், விட்டுணு பிரமாவும் சகளத்திருமேனி.

ஒன்பதிற்கும் சக்தி எத்தனை என்னில், ஏழு:— சிவத்துக்கும் நாதத்துக்கும் சத்தியும் விந்துவும்; சதாசிவராதி ஐவருக்கு மனோன்மணி, மகேசுவரி, உமை, திருவாணி, குடிலை.

---

1. அன்ன சிவமா யிரமா யதிலொன்
றுன்னிய பரையதி லாயிரத் தொருகூ
றாதியா யதிலோ ராயிரங் கூற்றொரு
பேதமிச் சையதி லாயிரம் பிரிவொன்
றிணங்கு ஞானம தீரைஞ் ஞூற்றொரு
பங்கு தொழிலிவை பஞ்சசத் திகளே

சதாசிவரூபம். 3.

2. அதிட்டானம் - நிலைக்களம்.

3. அதிட்டேயம் - நிலைக்களமாயுள்ள இடம்.

சிவனுக்கு லய போக அதிகாரம் மூன்றுக்குமிடமாக நவந்தர பேதமானது எப்படி என்னில், நிட்களம், லயம்; சகளாகளம், போகம்; சகளம், அதிகாரம். ஞானக், கிரியை, ரட்சை, (இச்சை ?) அதிட்டானமாய், சிவதத்துவ மும் பஞ்சகலைகளும் அதிட்டேயமாயின. இந்த ஒன்பதில் சகளாகள முன்னுள்ள நாலிலும் பின்னுள்ள நாலிலும் ஆசரித்துப் பரை முதலிய பஞ்சசத்திகளின் நிரல் நிரை யாகப் பத்திலொரு பங்காய் யோகி ஞானிகட்குத் தியான வடிவாய் (விளங்குவது) பஞ்சசாதாக்கியமாம்[1]. அவை, சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், கன்மசாதாக்கியம்[2]. இப் பஞ்சசாதாக்கியங்களுக் கதிபர் சதாசிவன், ஈசன், பிரமன், ஈசுவரன், ஈசானன்[3]. இவர்களின் தன்மை பராபரம், பரம், சூக்குமாச்சூக்குமம், சூக்குமம், தூலம் என்ற ஐந்து[4].

---

1. சத்தி படைப்பினி யொத்துரை செய்யில்
யோகிக ளதிகள் ஞானிக ளிவர்க
ளாகிய தியானத் தளவிடற் பொருட்டாய்
நிட்கள மதனிற் சகள நிறைந்திடு
மப்பெயர் சாதாக் கியமென லாகும்
(சதா. 5)

2. சாதாக் கியவகை தாஞ்சிவ மமூர்த்தி
மூர்த்தி கருத்தா கரும மெனவைந்
தோதிய பரைமுத லைந்திலுற் பவமே
(சதா. 6)

3. எண்ணு சதாசிவ னீசன் பிரமனு
மொண்ணெறி யீசுர னுயரீ சானனுந்
தந்துரை சிவசா தாக்கிய முதலிவ்
வைந்தினுக் கைந்தா மதிபர்க ளிவரே
(ஷ 7)

4. பராபர மேபரஞ் சூக்குமாச் சூக்குமஞ்
சூக்குமந் தூலந் தூலஞ் சிவசா
தாக்கிய முதலிவ் வைந்தின் றன்மை

[1]சிவசாதாக்கியம் முதல் ஐந்தும் தத்துவம், சகளம், கரண மாகியும்; சதாசிவம் முதல் ஐந்தும் மூர்த்தி, நிட்களம், உடலாகியும்; பராபரம் முதலைந்தும் பிரபாவம்; நிஷ்களம்; உயிராகியும் இருக்கும்.

---

1. இப்பகுதியைக் குறித்துச் சதாரூபம் உரை கூறுவதை இங்குக் குறிப்போம் :—

தத்துவமென்றும் மூர்த்தியென்றும் பொருந்திய பிரபாவமென்றும் மூன்று வகையுான தகைமைப்பாட்டால் இசையச் சொல்லப்படும் இவையே சிவசாதாக்கியமென்னும் தத்துவமும் சதாசிவமென்னும் மூர்த்தியும் பொருந்தினது ஈசானம். அமூர்த்திசாதாக்கியம் என்னும் தத்துவமும் ஈச னென்னும் மூர்த்தியும் பொருந்தினது சத்தியோசாதம்; மூர்த்திசாதாக்கியம் என்னும் தத்துவமும் பிரமீசனென்னும் மூர்த்தியும் பொருந்தினது வாமதேவம்; கர்த்திருசாதாக்கியமென்னும் தத்துவமும் ஈசுரன் என்னும் மூர்த்தியும் பொருந் தினது அகோரம்; கர்மசாதாக்கியமென்னும் தத்துவமும் ஈசானனென்னும் மூர்த்தியும் பொருந்தினது தற்புருடம்; மூர்த்திமான்களொப்பைப் பிரபாவ மென்பதாம்.

இதற்குச் சூத்திரம் :—

தத்துவ மூர்த்தி தகும்பிர பாவமென்
றித்தகை மூன்ற யியைந்திடு மிவையே
சிவசா தாக்கிய முதலிய தத்துவ
மவமில் சதாசிவ முதலைம் மூர்த்திக
ளொன்றிய போதீ சானு திகளாய்
நின்றன முறைநிரை நிறைபிர பாவம்.

சூ. 9

சிவசாதாக்கிய முதலைந்தும் நிட்களமாய்த் தேகியாம்; சதாசிவ முதலைந்தும் சகளமாய்த் தேகமாம்; இவைகளை ஒப்பான ஈசானுதிகள் ஐந்தும் சகள நிட்களமாய் உடலுயிராம் என்று சொல்லப்படும் என்பதாம்.

இதற்குச் சூத்திரம் :—

தத்துவ நிட்களஞ் சகள மூர்த்திக
ளிப்பிர பாவஞ் சகளநிட் களமே
தத்துவ முயிரெனத் தகுமூர்த் திகளுட
லப்பிர பாத முடிலுயி ரெனுமே.

சூ. 10

[1] இவற்றில், சிவசாதாக்கியம் ஒப்பில்லாத, அதிசூட்சும, அளவறும், அம்பர மின்னொளி வியாபகமாக இருக்கும். அமூர்த்திசாதாக்கியம், இலிங்க வடிவாய், தூணமாய், கோடிசூர்ய

1. இப்பகுதியின் பொருளைத் தெளிவுபடுத்தவும், விடப்பட்ட பகுதிகளிலுள்ளவற்றை அறியவும் பின்வரும் சதாசிவரூபப்பகுதி பயன்படும்.

சாந்தியாதீதை என்னும் பெயரையுடைய உவமையற்ற பராசத்தி சுத்தமாதலால் சுத்தமான சிவமென்னும் பெயரையுடைத்தாய்க் கரண வியாத்திக் கெட்டாத அதிசூக்குமமாய் அளவுபடாத பிரகாசமாய்ப் பார்த்தவிடமெல்லாம் தானாகி மிகுந்த விதப்பட்ட ஆகாசத்தின் மின்போல அரூபத்திலே தியானத்தால் விளங்கப்பட்டுச் சர்வவியாபியாய் இருப்பது சிவசாதாக்கியம். இது லயத்தானமென்று சொல்லப்படும்.

சாந்தியென்னும் பெயரையுடைய ஆதிசத்தி அரூபியாதலால் அமூர்த்தியென்னும் பேரரையுடைத்தாய் வடிவறுதியாதலால் விகற்ப மான கலைகளுக்கு அப்பாற்பட்டு தூணாகாரமான ஒப்பற்ற இலிங்கமாய்க் குன்றாத கோடிசூரியப் பிரகாசத்தையுடைய இலிங்கத்தினடுவே காண்டற்கரிய வடிவைக் கற்பித்திருப்பது அமூர்த்திசாதாக்கியம்; இது திவ்ய லிங்கமென்றும் மூலத்தம்பமென்றும் சொல்லப்படும். இவ்விலங்கத்திலேயே சிருட்டி சங்காரகாலத்தில் தோற்றமும் ஒடுக்கமும் உண்டாவது. இலிங்=லயம்; கம்=தோற்றம்.

வித்தையென்னும் பெயரையுடைய இச்சாசக்தி சுத்தகுணமான கலையைப் பொருந்துதலால், குற்றமற்ற மூர்த்தியென்னும் பெயரையுடைத்தாகி, காணப்பட்ட வடிவையுமுடைத்தாகி, காலாக்கினிக்கொத்த பிரகாசத்தையுமுடைத்தாகி, இலிங்க வடிவாகி, அதனுடைய ஊர்த்துவத்திலே ஒப்பற்ற ஒரு திருமுகம், குற்றமற்ற இச்சா ஞானக் கிரியைகளாகிய திருநயனங்கள் மூன்றும் கண்டிப்பற்ற வடிவு முடைத்தாயிருப்பது மூர்த்தி சாதாக்கியம். இதற்கு இலிங்கமூர்த்தி என்றும் பெயர்.

பிரதிட்டையென்னும் பெயரையுடைய ஞானசக்தி கருத்தாவுக்கு அழகிய குணமென்னும் சுபாவமாதலாலும், அந்த ஞானசத்தியிலே தோற்றுகையாலும், கர்த்திருவென்னும் பெயரையுடைத்தாய்ச் சுத்தமாகையால் தூய்ய படிகப்பிரகாசமான திவ்விய லிங்கமுமாய் அதனுச்சியிலே நாலு திருமுகமும், நன்மை மிகுந்த பன்னிரண்டு திருநயனங்களுமுடைத்தாய் வலத்திலே சூலம், மழு, வாள், அபயம், இடத்திலே பாம்பு, விளங்கிய பாசம், உண்டாக்கப்பட்ட மணி, வரதம் என்னும் ஆயுதங்களைத் தரித்துக் குறைவில்லாத இலக்கணங்கள் கூடியிருப்பது கர்த்திரு சாதாக்கியம். இதற்கு ஞானலிங்கம் என்று பெயர்.

அந்தர்க்கதமாய் இருக்கும். மூர்த்திசாதாக்கியம் ஒருமுக லிங்க வடிவாய், அழற்பிழம்பாய், இச்சை குணம் கலை (இவற்றை) உடையராய், சோம சூரியாக்னி லோசனராய் இருக்கும். கர்த்திருசாதாக்கியம் இலிங்க வடிவாய், நாலுமுகம், பன்னிரு கண், படிகவொளி, எட்டுக்கைகளில் வலமிடங்களில் சூலம், மழு, வாள், அபயம், நாகம், பாசம், மணி, வரதமாகவிருக்

---

நிவர்த்தி என்னும் பெயரையுடைய தொழிலாகையாலும், பழைமையாய் இந்தச் சக்தியிலே தோற்றுகையாலும், தொழிலென்னும் காரணப் பெயரையுடைத்தாய் நாதமயமென்று சொல்லப்பட்ட ஞானலிங்கமும் பேதமில்லாத விந்துமயமான கிரியாபீடமும் ஏருமற் குறையாமற் கூடிப் பஞ்சகிருத்யமென்னும் தொழிலையுடையது கன்மசாதாக்கியம். இது கிரியாலிஙகம் என்றும், அதிகாரத்தானமென்றும் சொல்லப்படும் என்பதாம்.

சூத். உரை 12.

இனி, ஞானக்கிரியைகள் என்னும் நாதவிந்துக்களுடைய கூட்டத்தில் பொருந்தும் தொழிலை விளங்கச் சொல்லுமிடத்து

கர்த்திருசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், சிவசாதாக்கியம் இவை நாலும் நாதத்தில் தொழிலறுதி. கன்மசாதாக்கியம் தொழில், நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி என்னும் சத்திகள் நாலும் விந்துவிற்றொழில்; சாந்தியாதீதை தொழிலறுதி என்று சொல்லப்படும். சொல்லிய தொழிலான நிவர்த்தியாதி பீடமும், தொழலறுதியான கர்த்திரு முதலிய லிங்கமும், கன்ம சாதாக்கியமான லிங்கமும், சாந்தியாதீதையான பீடமும் தம்மில் ஒத்தவிடத்திலே முன்சொன்ன ஆதிமுதல் நாலு சத்திகளும் பிரேரிக்கப்பட்ட வயிந்தமான சாந்தியாதி நாலும் தந்தொழிலை உள்ளடக்கித் திரண்டிருக்கும் குடிலையென்னும் பீடத்தின்மேல் தகைமைப்பாட்டால் வியாபினி முதலான சக்திகளால் பிரேரிக்கப்பட்ட இந்திகை ஆதியாய்க் காவலான நாதகலைகள் ஐந்தும் பொருந்தின இடம் தீதற்ற நாதமான இலிங்கம். இந்த நாதமயமான லிங்கத்தின் மேல், நடு, மேற்கு, வடக்கு, தெற்கு, கிழக்கு என்னும் திசைகளிலே இருக்கும் சதாசிவன், ஈசன், பிரமன், ஈசுரன், மேலாகிய ஈசானன் என்னும் ஐந்து மூர்த்திகளிடத்திலே மேன்மையான சாதாக்கிய முதலான ஐந்தும் அலைவறப்பொருந்தி யிருந்துள அவசரத்தில் ஈசானுதியன முகவொழுங்காக விளங்கியிருக்கும். சாதாக்கியம் ஐந்தும் ஒன்றாய்த் திரண்ட அவசரம் கன்மசாதாக்கியமென்பதாம்.

(சு. உரை 13)

கும். கன்மசாதாக்கியம்—சிவதசாதாக்கியம் முதல் நாலும்; நாதம்; அதுவே பீடம்; நிவர்த்தி; முதல் நாலும் விந்து; அதுவே லிங்கம். அதன் நடு விந்தியை முதல் ஐந்து சக்தியும் இருக்கும். இப்படிப்பட்ட லிங்க வடிவாய், நாதவிந்து செகத் சொரூபமாய், ஆகம விதிப்படி பூசை கொண்டருளுகிற வித்தியா தேக மூர்த்தியாயிருக்கும் சகளமும் இருபத்தைந்து விதமாயிருக்கும்.

இப்படிப்பட்ட லிங்க வடிவாய், நாத விந்து ஜகத் சுரூபமாய், ஆகம விதிப்படி பூசை கொண்டருளுகிற வித்யா தேக மூர்த்தியாயிருக்கும் சகளமும் இருபத்தைந்து விதமாயிருக்கும்,

[1]அவை, (1) சந்திரசேகரர், (2) உமாமகேசர், (3) விடையர், (4) நடேசர், (5) [சாற்று] கலியாணர், (6) பலியேற்றவர்,

---

1. சிவமூர்த்தங்கள் இருபத்தைந்தும் பின்வருமாறும் வழங்கப் பெறும்:—

சந்திரசேகரர், உமாமகேசர், ருஷபாரூடர், சபாபதி, கல்யாண சுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, அந்தகாரி, திரிபுராரி, சலந்தராரி, விதித்துவம்சர், வீரபத்திரர், நரசிங்கநிபாதனர், அர்த்தநாரீசுவரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், சக்ரப்ரதர், கஜமுகாநுக்ரகர், ஏகபாதர், சோமாஸ்கந்தர், அநங்கசுகபிருது, தக்ஷிணாமூர்த்தி. லிங்கோற்பவர்.

(அபிதான சிந்தாமணி)

பின்வரும் பாடலையும் காண்க:

சந்திரசே காருமா மகேச ரிடபா ரூடர் சபாபதி கல்யாண
[சுந்தரர், சாற்று பிக்ஷாடனர்
காமாரி சயவந்தகாரி திரிபுர தகனரே
சிந்தைசெய் சலந்தராரி விதிதும் சர்வீரபத்திர நாரசிம்மநிபாதர்,
[திகழர்த்தநாரீசர்
விக்ரதாகங்காளர் சீர்ச்சண்டி கேசனுக்ரர்
நந்தலில் கறைக்கண்ட சக்ராபயப்ரதர் நவில்கஜமுகானுக்ரகர்,
[நவையில்சோ மாஸ்
கந்த ரேகநவில்பாத ரருணனு தக்ஷிணாமூர்த்தியே
பந்தமி லனங்கசுகபிரத்துமரி லிங்கோற்பர் பகிருபதோடை
[வரும், பரவுதுட்டர்கள்
சிட்டநிக்ரக வனுக்ரகம் பணுமிறை கொண்டமூர்த்த மிவையே.

(சதாசிவரூபம் 1. மேற்கோள்)

(7) காமாரி, (8) அந்தகசங்காரர், (9) புராந்தகர், (10) சலந்தராரி, (11) அயன்றலை கொய்தவர், (12) ஆனையுரித்தவர், (13) வீரேசர், (14) சுந்தரமாவரியார், (15) பெண்பாதியார், (16) கங்காளர், (17) தூயசண்டேசர், (18) களித்தார், (19) நஞ்சயின்றூர், (20) ஆழிதந்தவர், (21) விக்கினற்கருள்வார், (22) [தகு] சோமாக்கந்தர், (23) தாளேகர், (24) சற்குரு, (25) லிங்கோற்பவர் [ஏ].

இப்படித் திருவுருக்கொண்ட ·சிவன் குடிலையைப் பொருந்தி அதனின்று நாதவிந்து முதல் சுத்ததத்துவங்களையும், விஞ்ஞானகலர்க்கொளியாகிய தனுகரண புவன போகங்களையும், தோன்றின விந்துவிடத்தில் சூக்குமை முதல் வாக்குக்களையும் வேதாகமங்களையும் உண்டாக்கி, அசுத்தமாயையைப் பொருந்திப் பிரளயாகலர் சகலர்களுக்குக் கொடிய வினைகட்கேற்ற தனுவாதிகளைப் படைத்து, இவையெல்லாம் ஒடுக்குவிக்கும் திருமேனி நிட்களம்; தோற்றுவிக்கும் திருமேனி சகளம். இத்திருமேனிகள் மாயையால் ஒருவர் உண்டாக்க உண்டானவையல்ல; அளவைப் பிரமாணம், தோற்றம் ஈறின்றி ஞானமயமாய், அருளால் அறியாதார்க்கு அறியா அரும்பொருளாய் இருக்குமானதால் நினைத்த உரு எடுத்துக் கொள்வன்.

இவ்வுரு எடுப்பானேன்? என்னில், அவன் அவள் அதுவாகிய பிரபஞ்சம் (சிவஞானபோ. சூத். 1) கன்மத்துக்கீடாகத் தோன்றி மாயையில் ஒடுங்கும்; மலத்தினலே பின்னும் தோன்றும்; ஆகையால் இத்தொழில்களைச் செய்வன் பரன்.

'பரன் செய்வானேன்? மாயை செய்யுமே!' எனில், மலம் ஏதுவாக மாயை கன்மத்துக்கீடாக அச்சுமாறிவரும் சடமாகையாலும்; 'ஆன்மா செய்வன்' என்னில், தனக்கென்று அறிவில்லாமையாலும்; கன்மம் செய்யும்' என்

னில், மாயையிடமாய்ப் புசிப்பாகையாலும் பரனே செய்வன். பிரமன் மால் இருவரும் பரமசிவன் அதிகார ஏவலினல் படைத்து அளித்த உலகத்தைத் தானெழிய மற்றெல்லாம் அழித்து மீளவும் உண்டாக்கி விகாரமின்றித் தனது சத்தி களினற் கதிரவன் சந்நிதி முளரி அலர் முகுளிக்க மலர்வதுபோலும் நின்று சிருட்டி முதலிய ஐந்துதொழிலும் செய்வன்.

ஏது காரணமென்னில், மலம் பக்குவமாகவும், புசித்துத் தொலையும்படியாயும், இளைப்பாறவும், விடயத்தில் அருசிப்பு வரவும் முத்தியையடையவும் செய்தும், எண்ணிறந்த ஆன் மாக்களுக்கும் அறிவாயிருக்கும் நாதன்தாள் என அறிக. 'என் நெஞ்சிற் பிரியாதிருக்க அருளுகை' என்பது 'நாதன்தாள் வாழ்க' எனக் காண்க.

இவைக்குச் சுருதி :—

**வேதத்தில்,**

"நட்பாய் மயேந்திரநாத நாதாந்தத்தரையா யென்பார்க்கு நாதாந் தப் பதங்கொடுப்பாய்"

என்றும்,

'எல்லாமுடையவடி'

(திருநாவுக் : 6 : 7 : 5)

என்றும்,

'இறைவனடி ஞானமே ஞானம்'

(சிவஞானசித் : 8 : 2 : 27)

என்றும்,

'அடிபேணுதல் தவமே'

(திருஞான. 1 : 10 : 1)

என்றும் வருவனவற்ருற் காண்க.

---

முற்பத மகாவாக்கிய நாதன்றிருவடியை நீங்கி நில்லாத ஆன்மாவின் இலக்கணத்தைச் சிவானுபூதிபட அருளிய தாவன :—

2. இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் றுள்வாழ்க

என்ற திருவருள் வினியோகமாவன :—

வாழ்க என்றது, முற்பதப் பயனெனக் கொள்க. இமைப்பொழுது என்றது, காலாதீத அநாதி எனக் கொள்க. என்நெஞ்சு என்றது, யான், எனது என்பவை ஆன்மாவே; நெஞ்சென்ற பரியாய நாமமான தற்சுட்டெனக் கொள்க. நீங்காதான்தாள் என்றது, பெருங்கருணை வழக்கால் அநாதித் தொடர்ச்சியான திருவடியெனக் காண்க.

சிவஞானபோத முதற் சூத்திரம்; சங்கார கர்த்தாவே முதலாளியான பதி சொரூபமருளி,

இரண்டாம் சூத்திரம் ஆன்மநிலை சொல்லிய நியமப்படி, பசுவாவது எண்ணிலதாய், அழியாததாய், ஆணவத்தால் மறைப்புண்டு வந்த மல பக்குவமாவதற்குப் பாவ புண்ணியத் துக்கீடான உடம்பைக் கருத்தாவின் காருணியத்தினாலே பொருந்தி, அஃறிணை உயர்திணைகளாய், அவ்வுடம்பினாலே எண்ணிறந்த போகங்களைப் புசிக்க மீண்டும் புண்ணிய பாவங்களை ஆர்ச்சித்து நாசோற்பத்திகளை யுடையதாய், புசித்தற்கு யோக்கியமான விடயங்களை இந்திரியங்களினாலே கண்டு அந்தக்கரணங்களினாலே கிரகித்து, வித்தையினாலே அறிந்து, அவ்விடயத்தில் சுகதுக்கங்களை அறிந்து அனுப விக்கும்

'எப்படி அறியும்?' என்னில்,

உடம்பு சடமாகையினால் அஃது அறியாது; இந்திரி யங்கள் ஒவ்வொன்றால் அறிகையால் அவை அறியா; கர ணம் ஒன்று அறிந்து ஒன்று அறியாதாகையால் அவையு மறியா; பிராணவாயு சடமாகையால் அறியாது; சிவன் கூட்டின கலாதி ஞானத்தினாலே ஆன்மா விடயங்களை அறியும்.

ஆன்மாவை அறிவென்றால் இந்திரியம் வேண்டா; அறிவில்லை என்றால் இந்திரியம் எதற்கு? இந்திரியங்கள் ஆன்மாவுக்கு அறிவைக் கொடுக்குமென்றால், அவை சடமாகையால் கொடா. சிவன் அறிவைக் கொடுப்பன் என்னில், முன் அசேதனமாக வேண்டும்; சேதனுக்கு அறிவைக் கொடானாகையால். இவன் அறிந்தவெல்லாம் அசத்தாம்; இவன் போதத்தாற் சிவத்தை அறியக்கூடாதானால், "அசத்தை அசத்தென்றறிந்தது ஏது?" என்னில், உயிர் தனக்கென ஓர் அறிவில்லை; அதனால் அறியாது. சிவனுக்கு அறிந்து நீங்க வேண்டுவதில்லை; கருவி சடமானதால் அறியாது. உயிரும் கருவியும் கூடினால் விளக்கமுண்டாகாது. அருளும் உயிரும் கூடி அறியுமென்னில், பெத்தகாலத்தில் அருளில்லாமல் இருக்க வேண்டும்; சிவமும் பாசமும் கூடி அறியுமென்னில், ஒளியும் இருளும் ஓரிடத்தில் நில்லா; அன்றியும் சத்து அறிய வேண்டியதில்லை; சத்தை அசத்து அறியாதாகையால் 'சத்து இன்னதென்றறிகிறதேது?' என்னில், ஒளியுமல்லாமல் இருளுமல்லாமல் இருக்கிற கண்போல விருக்கும். கண்ணுக்கு ஒளி கதிரவன் கொடுக்குமென்னில், முன் இல்லையாக வேண்டும். 'ஆதித்தன் காட்ட வேறாக நின்று காணும், என்னில், இருட்டிலும் தெரிய வேண்டுமாகையால் கண்ணொளியும் கதிரவனொளியும் கலந்ததுவாய் நின்றாலும் ஐக்கத்தால் ஒன்று; பொருள்களால் வேறு: ஆகையால், அவ்வறிவு தேகத்தில் ஓரிடத்தில் நில்லாது; மறைந்தும் நில்லாது. ஆகாயம்போல ஒன்றாயிராது; அறிவிக்கிற அறிவாயிராது; கருவியறிவாக விராது. கண் படிகம்; ஆகாயம் போலக் கூடினது. தானாக விதிவசத்தால் வந்த குணமே தனக்குக் குணமாகப் பற்றி அதுவதுவாய்த் தாம் பிர காளிதம் போலப் பொருந்தி அம்மலத்துக்குப் பாகமீந்தவிடத்து ஞானகுரு கடாட்ச தீட்சையினாலே, தனக்குள்ளே விளங்குகின்ற சிவஞானத்தாலே வந்த மலத்தைப் போக்கி, நாதன்றாளைப் போல் அநாதியாய் அபேதமாயிருப்பதே பசு சொரூபமெனக் காண்க.

இவைக்குச் சுருதி :—

வேதத்தில்,

கலந்தபின் பிரிவதில்லை

(திருநாவுக் : திருஜயாறு : 4)

என்றும்,

பிரிவில்லாரடி........கன்று முடனுன்

என்றும்,

பிரிந்திருக்கேன்

(சுந்தர. திருவாரூர். பதி. 51)

என்றும்,

சாத்திரத்தில்,

“ நீங்காதெங்கும்

(சிவஞானசித் : சூத். 2 : 1)

என்றும்,

வேறின்மை கண்ட

(இருபாவிருபஃது : 14 : 2)

என்றும்,

யானுந்தா னுந்தான்பொய் யானேதான் ருனேநான்
யானுந் தனிமுதலன் றென்போலத்—தானுந்
தனிமுதலன் றென்னெழியத் தன்னுணை தப்பா
தினியெதற்கு நூல்கற்றேன் யான்

(சிவாநந்தமாலை 151)

என்றும்,

நூலகத்தாற்றேணியான்

என்றும்,

கூறியவை காண்க.

---

3. கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க

பதப்பொருள்

(எ - ன) [1]கோகழி என்றது, திருத்தலத் திருநாமம். ஆண்ட என்றது, எனது சீவத்துவத்தைச் சிவமாக்கி என்றது. குருமணி என்றது அருளொளியே: சுயம்பிரகாச வடிவு என்றது; ஒழியக் கற்பனையல. தன்தாள் வாழ்க என்றது, கர்த்தனது திருவடி எனது உள்ளத்தில் பிரியாது வாழ்க (எ - க).

விரிவாவன

சிவஞானபோதத் திருவருட் பயன்படி முற்பத வாக்கியத்தில் பசுநிலை சொல்லியதாதலால், அந்த உயிர்க்கு நாதன் தாளாகிய திருவடியான சொரூபத்தை அநாதியே தெரியாது தடைப்பட்டிருந்த மலத்தைத் தனக்குள்ளே யிருந்த சிவன் தன்னைப்போல் குருவடிவமாகி, திருவடி பிரியாதிருந்த உயிரைப் பிரித்து அருமை காட்டிக் கூட்டும் பாசத்தை இவ்வாக்கியம் காட்டுகின்றது.

திரிபதார்த்தச் சாத்திரப் பொருளனுபவமான

நுட்பானுபூதி

பாசமாவன :—ஆணவமலமொன்ருய், பரிபாகமான கால வரையறைகளில் திருப்பத் தக்க அளவிறந்த சக்திகளை யுடையதாய், புறவிருளும் ஒளி என்னும்படிக்கு இருளாய், செம்பிற் காளிதம் போலவும், அரிசிக்குத் தவிடுமி போலவும், அழியாத பிரதான மலமாய், ஆன்மாக்களின் இச்சா ஞானக் கிரியைகள் அடங்கலையும் மறைத்து, மதுவிடம் பானம் பண்ணினவனை மயக்குவதுபோல மயக்கி நிற்கும்.

---

1. கோகழி - திருப்பெருந்துறை ; திருவாவடுதுறை என்பர் சிலர். (இராமசாமி முதலியார் பதிப்பு.) 'கோ - தலைமை ; பெருமை ; கழி - துறை. கோகழி - பெருந்துறை ; இதுவே பொருத்தமுடையது' என்பர் மறைமலையடிகள் (பக். 18).

கன்மமலமானது தேகம் வருவதற்குக் காரணமாய், நாஞ விதங்களான போகங்களையுடைய நாசத்தையும் உற்பத்தியையும் [1]பீசாங்குர நியாயமுடையதாய், மலம் உயிருள்ள போதே உள்ளதாய், பலவிதப்படுவதாய், சிருட்டி காலத்து உடலெடுக்குமிடத்துச் சூக்குமமாய் ஆன்மாக்கள் தோறும் செல்வதாய், மனவாக்குக் காயத்தாலுண்டாக்கத்தக்க முறைமையினையுமுடையதாய், சுவர்க்க நரகத்துக்குப் பயஞன புண்ணிய பாவங்களாய், சாதி ஆயுசு போகமாய், [2]ஆர்ச்சித முறை புசிப்பாகாமல் வன்மை மென்மைக் கீடாக மாறி வருவதாய், ஆன்மிக தெய்விக பௌதிக [3]சேதஞசேதனங்களாய், சுகதுக்கமாய், விருப்பு வெறுப்பாகி, [4]ஆகாமியமேறுவதாய், புத்தி அபுத்தி பூர்வ புண்ணிய பாவங்களாய், நல்வினையால் தீவினை, தீவினையால் நல்வினை ஒழியாதிருந்தாலும் வேதாகம விதிப்படி செய்தாலொழிவதாய், விலைக்குக் கொண்டது விற்பதுபோலச் சாந்தி பண்ணுதும் பலிப்பதாய் நிற்கும்.

மாயாமலம் திதி காலத்து ஆன்மாக்களுக்குச் சீவிதமாகப் புத்தியை அடைந்திருக்கும். அம்மாயாமலம், சுத்தமாயை அசுத்தமாயை என இரண்டாம். சுத்தமாயையாவது பராசக்திப் பிரேரகமான குடிலையாய், சுத்த தத்துவமைந்து, வாக்கு நான்கு, வன்னம், பதம், மந்திரம், வேதம், சாத்திரம், பஞ்சகலைகள் இவைகளுக்குத் தோற்றத் தானமாய், [5]சாலோகாதி மூன்றுக்கும் [6]பதப் பிராப்தியாய், சதாசிவாதி

---

1. பீசாங்குரநியாயம் - முளையும் விதையும் போல் ஒன்றற்கொன்றுள்ள சம்பந்தத்தை விளக்கும் முறை.

2. ஆர்ச்சித - சம்பாதிக்கப்படுகிற

3. சேதஞசேதனங்களாய் - உயிருள்ளனவும் உயிரற்றனவுமாய்

4. ஆகாமியம் - பிராரத்தம் புசிக்கையில் மனோவாக்குக்காயங்களால் செய்யப்படும் நல்ல தீய கருமங்களால் வந்தேறுகிற கன்மம்; இப்பிறப்பிலே வரும் புண்ணிய பாவங்கள்.

5. சாலோகாதி மூன்றும் - சாலோக, சாமீப, சாரூப்பியப் பதவிகள்.

6. பதப்பிராப்தியாய் - பதவியைத் தருவதாய்.

யாய், விஞ்ஞானகலர்[1] நாதமுதல் ஐவர்களுக்கிடமாய், சுத்தமாய், அநாதியாய் இருக்கும்.

அசுத்தமாயையாவது சுத்த மாயையைப் போல் அநாதியாய், அதோ மாயை என்கிற பெயராய், நித்தமாய், ஒன்ருய், அருவாய், ஆன்மாக்களிடத்து நெல்லில் தவிடுமிபோல இருப்பதாய், தனுகரண புவனபோக மென்ற நான்கு காரியமாய், ஒன்ருேடொன்றுக்கு ஒவ்வாததாய், சடமாய், சலனமில்லாததாய், கன்மம் தொலையுமளவும் உயிர்கட்காதாரமாயிருப்பதாய், தன்னிடத்துண்டான தத்துவங்கள் எல்லாவற்றினும் வியாபகமுள்ளதாய், தத்துவங்கள் தோன்றின அடைவிலே நிற்பதாய், தத்துவங்கள் ஒடுங்குகிற சங்கார காலத்திலே உயிர் வாசம் பண்ணுதற்கிடமாய், மயக்கத்தைச் செய்யும் மலமாய், பரமசிவன் சகத்துற்பத்திக்கு [2]உபாதான காரணமாய் இருக்கும்.

ஆன்மா மூலாதாரத்திலே கலாதி முதலான அறிகருவியொன்றுமின்றி, ஆணவமலமே தாளுய், இருட்டைப் பொருந்தின குருட்டுக்கண்போல மலம் விட்டு நீங்க உபாயமின்றி, நித்த வியாபகமாய், தன்னை, தலைவனை, பசுவைத் தோன்ருத விடமாய், ஆணவமலம் பரிபூரணமாயிருக்கிற சர்வ சங்காரமென்ற மகா கேவல, நித்திய கேவலமான அறியாமையாகிற மயக்கந்தீர்ப்பதாய், திரோதானமான சத்தி தானே திருவருளாகி ஆணவமலமொன்றையும் சுத்தமாயா தனு கரண புவ்ன போகமுடைய [3]விஞ்ஞானகலர்க்குப் பக்குவத்தில் அறிவாய் நின்றனுக்கிரகித்து முத்தியைக் கொடுத்தும், ஆணவ கன்மம் இரண்டையும், சுத்தாசுத்த

1. நாதம் முதல் ஐந்து : நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை.

2. உபாதான காரணம் - முதற்காரணம்.

3. விஞ்ஞானகலர் - ஆணவமலமொன்றேயுடைய ஆன்மாக்கள்.

தனு கரண புவன போகங்களையும் உடைய [1]பிரளாயாகலர்க்கு ருத்திரன் மகேசன் முதலான திருவுருக்காட்சி கொடுத் தனுக்கிரகித்தும், ஆணவ கன்ம மாயை மூன்றையுமுடைய பிரகிருதி மாயாத் தோற்றத் தனு கரண புவன போகங் களையுடைய [2]சகலர்க்குச் சிவ புண்ணிய விசேட சரியை கிரியா யோக முதிர்ச்சியால் இருவினையொப்பு மலபரிபாக சத்திநிபாதம் வந்தவுடன், ஞானாசாரியராகி மானைக் காட்டி மானைப் பிடித்தாற்போல, ஊரும் பேரும் உருவுமில்லாத நாதன் ஓர் ஊரும் பேரும் உருவும் கொண்டெழுந்தருளிக் குருமணியாகி, பசுத்தன்மையான பாசங்களைக் கழிக்கும் பொருட்டு [3]சட்சு, பரிச, வாசக, பாவனை, சாத்திர, யோக, ஞான, கிரியா, அவுத்திர தீட்சைகள் முழுதும் திருவருள் நோக்கமாக [4]ஆறத்துவாக்களிற் கட்டுப்பட்ட புண்ணிய பாவ[5]சஞ்சித கன்மங்களை நீக்கித் [6]தசகாரிய உண்மைகளைக் காட்டிய ஒருமொழி உபதேசமெனக் காண்க.

---

1. பிரளயாகலர் - ஆணவம், கன்மம் என்னும் இரண்டினையுமுடைய ஆன்மாக்கள்.

2. சகலர் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களை யுடைய ஆன்மாக்கள்.

3. தீட்சைகள், நயன, பரிச, மானச, வாசக, சாத்திர, யோக, ஔத்திரி என்று எழு வகைப்படும் என்பர்; இவற்றோடு ஞான, கிரியா தீக்ஷைகளைச் சேர்த்துக் கூறுவதும் உண்டு.

4. அத்துவாக்கள், மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்னும் ஆறு. அத்துவா - வழி.

5. சஞ்சிதகன்மங்கள்: அநாதிதொட்டுச் சனனங்கள் தோறும் ஆர்ச்சித வினை புசித்து, விஞ்சியதாகிய ஆறு அத்துவாக்களிலும் கட்டுப் பட்டிருக்கிற புண்ணிய பாவங்களாய் இருக்கும்.

6. தசகாரியம் - தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவ யோகம், சிவபோகம் என்ற ஆன்ம அநுபவ நிலைகள்.

சிவஞானபோதத் திருவருட்பயனனுபூதிப்படி திரி பதார்த்த நிச்சயமருளி, மேல், நாலாவது ஐந்தாவதான சூத்திர வனுபவம் விளங்கப் பேறென்ற ஆண்டவனும், பெறுவானென்ற அடிமையனுபூதிக்கு ஓர் மொழியான உபதேசத்திருவருள் வினியோகம் அருளிச்செய்கின்றதாவன :—

4. ஆகம மாகிநின் [1]றண்ணிப்பான் தாள்வாழ்க

பதவனுபூதி

ஆகமமாகி (எ - ன.) மன்னுபோதத் திருவருள் ஒன்று உண்டு; அதனைத் தெளிய ஓதுவதான, 'பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய உவமை கலைஞானமான' (பெரியபு: திருஞான. 70) அனுதி முத்த அறிவுடையனுன நாதன் திருவுளம் பற்றிய சிவாகமமெனக் கொள்க.

நின்றண்ணிப்பான் தாள் வாழ்க என்றது, சத்தினிபாத ஆன்மாக்களுக்குப் பொது நீக்கிச் சிறப்பு நூலாக அருளி னல் அறிந்து அளவைகளால் தெருண்டும், திருக்கடைக் கண் சேர்த்தி, அபேதமாக முத்தனுக்கியவன் எனது உளத் திற் பிரியாதிருப்பதான திருவடி எனக்காண்க.

நுட்பம்

உபதேசப்பொருளவை யாவையெனின், அரனடிக் குக்கீழ் அடங்குவதான சிவாகமக் காட்சியில் உள்ளதாகிய தந்திர மந்திர உபதேச கலைக்குக் காரணமாயுள்ள காண் டல், கருதல், உரை என்ற மூன்றினுள் எல்லா அளவை களும் அடங்கும். அவையும் காண்டலே பொருளாக அனு பூதிபெற முதல் வாக்கிய நுட்பானுபூதிப் பிரமாணச் சுருதி யில் பசுகரணம் சிவகரணமாகிய அனுபூதிக்குப் [2]பொதுப் பாயிரத்தில் (பக் 120) காட்டிய காண்டலே கருத்தென்ற பதவினியோகத்துக்கென, வண்ணமாகிய ஈசனுக்குள தாகிய அங்கப்பிரத்தியாங்கமும், அப்பதிக்குக் காண்ட லான பிரத்தியட்சம் தேட்டமில்லா இன்பப்பொருளான

1. அண்ணிப்பான் - அணுகி நிற்பவன்.
2. பொதுப்பாயிரம். (?)

சிவலிங்கம், அதுவே காட்டுங் குறியான பரமகுரு திருமேனி என்றும், மற்றும் திரிபதார்த்தத்துக்கும் அளவையனுபூதி காட்டியதைக் காண்க.

இவைக்கு வடமொழியான சிவாகமப்பொருளினும், சதுர்வேத தாற்பரியத்தும், உபநிடதத்தும், ருத்திரசிகையிலும், காந்தம் முதலான சிவரகசியத்தும், சூதசங்கிதையினும் சொல்லிய திட்டாந்தரப் பொருட்குத் தாட்டாந்திரமாக அறுபத்து மூன்று நாயன்மார்களும் முக்தியாகி இத்திருவுருவில் ஐக்கியமானது கொண்டும், அவர்களுள் காரைக்கால் அம்மை முதலிய சந்தான சமய ஆச்சாரிமார்கள் (?) அதுவே பொருளெனப் பாசமற்றிலராயினும், பார்மிசை ஆசை சங்கரற்காக்கிப் பணிந்தோதியதாலும்,[1] பராசக்தி முதலான சத்திகளும், கணபதி, கந்தசுவாமி, நந்திநாயனர், பிருங்கியடிகள், வாலகிரியர், சுகர், சனகாதியர், சித்தர், கணங்கள், பிரமா, விட்டுணு, இந்திராதி சுராசுரர்கள், தாபசிகள், சத்திகள், மனுஷர், பட்சிகள்...................... முதலானவர்கள் பரிபாகமான காலத்திற் பூசித்து அநாதியே இன்ப வீடடைந்திருப்பதாலும், இவைக்குத் தென்மொழி வேதத்தில், 'ஈசனிருவிரலாற் காட்டவொண்ணு வின்பத்தை, மாசற வோரங்குலியால் வாழ்வித்த' (சிவானந்தமாலை 4) திருஞானசம்பந்தர் முதலிய மூவரருளிய திருமெய்ஞ்ஞானத் திருநெறித் தேவாரத்துக்கு முதல்மொழி அனுபூதிக்குக் காட்டிய சம்பிரதாய உரையைக் கண்டு கொள்க. 'குறிகளும் அடையாளமும் கோவிலும் நெறிகளும் வரநின்றதோர் நேர்மையும்' (திருநாவுக். பொது தனித்திருக்குறுந். 6) என ஓதியபடி எல்லா மொழியும் இவ்வகைப் பொருளெனக் காண்க.

---

1. இதுமுதல் பிறிதோரேட்டில் காணப்படுமாறு :—

"பராசத்தி முதலான சத்திகளும் மகேசுவரமாய ருத்ரகணங்களும், நந்திநயினர் வாலகிரியர்களும், விஷ்ணு முதலான தேவர்களும், மனுஷர் முதல் பிபீலிகாந்தமான பக்குவான்மாக்களும், நந்திநாயினர்...... ரியர், சித்தர், கணங்கள், கணபதி, கந்தர், விட்டுணு முதலான தேவர்களும், மனுஷர் மிருகப்பட்சி ஈ எறும்பு முதலான பக்குவான்மாக்களும் பூசித்தும், அம்மையே இம்மையாக வீடடைந்திருப்பதாலும்."

ஆகமத்தில்,

'சேணுருந் தழற் பிழம்பு'

(பெரியபு : சாக்கிய. 8)

என்றும்,

'ஊறு காதலொளி வளர்'

(பெரியபு : திருஞான : 516)

என்றும்,

'முழுது மிவையே'

(பெரியபு : திருஞான : 977)

என்றும் கூறியன காண்க.

புராணத்தில்,

'மூலக்குறியுளது'

(கோயில் : பதஞ்சலி : 71)

என்றும்,

'மூலத்தானத்தே முளைத்தெழுந்தது'

(கோயில் : வியாக்கிர : 8)

என்றும் கூறியன காண்க.

சாத்திரத்தில்,

'ஆலயந் தானே யரன்'

என்றும்,

'திருக்கோவிலுள்ளிருக்குந் திருமேனி'

(சிவஞானசித் : 12ஆம் சூத். 1)

என்றும்,

'வானோர் தொழுந்திருமேனி'

(சிவப்பிர : 12ஆம் சூத். 1)

என்றும்,

'காலை தொழவன்றைவினைக் கட்டறுக்கும்'

(சிவானந்த. 19)

என்றும் அருளிய உபதேசப் பொருளைக் காண்க.

இனி, சிவஞான போத சூத்திரம் ஆறேழில் விளங்கிய தாகிய ஞானநிலைமையும் ஆன்மா சதசத் என்ற அடிமையியல்பும் சத்தி சிவாத்மிக தரிசனமான திருவருள் வினியோக மாவன :—

## 5. ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க

### பதவனுபூதி

[1]ஏகன் என்றது, ஒன்ருகி முடிந்த பொருளாயுள்ளானை அகண்டாகார சச்சிதாநந்த நித்திய சுத்த பரிபூரண பராபர பரைவடிவாகிய நாதனை பரப்பிரம வத்து எனச் சுவானு பூதி பெறத்தக்கது.

அநேகன் என்றது, சர்வாத்மாக்கட்கும் பெருங்கருணை வழக்கால் உயிர்க்குயிராய் நின்ற உயிர் எனக் காண்க.

இறைவன் என்றது, மூவகையுயிரையும் பெத்த முத்த மாக்க, வகுத்தான் வகுத்தபடி அநேக சத்திகளை அதிட் டித்து ஆக்கினை வழியாகத் திருவடி சேரச் செய்யும் இரா சன் எனக் காண்க.

இவைக்குச் சுருதி :—

வேதத்தில்,

'மூவுருவு மோருருவம்'

(திருநாவுக். திருத்தாண்ட. திருவாரூர் : 1)

என்றும்,

'ஒன்ருகி'

(திருவா. திருத். 6)

என்றும்,

'ஒருருவாயினை'

(திருஞான. திருவெருகூற். 1)

என்றும்,

---

1. ஏகனு மாகி யநேகனு மானவ
நாதனு மானனென் றுந்தீபற;
நம்மையே யாண்டானென் றுந்தீபற.

(திருவுந்தி. 5)

ஆகமத்தில்,

'ஒருமொழி'

என்றும்,

'ஒன்றவன்ருனே'

(திருமந். 1)

என்றும்,

புராணத்தில்,

'ஒருணர்வு'

(கோயில் : வியாக்ர : 27)

என்றும்,

சாத்திரத்தில்,

'ஒன்றென்ப தொன்றே காண்'

(சிவஞானபோத. சூத். 2 உதாரணம் 2)

என்றும்,

'ஏகனுமாகி'

(திருவுந்தி. 5)

என்றும் வருவதைக் காண்க.

பதவனுபூதியில், 'ஒன்று' என்ற வாக்கியத்தில் சொரூபமாக வினியோகமானதால், சொரூபமான திருவடியில் அடங்கிய விபரமாவன :—

ஒன்றென்பது ஒன்றுதல். ஒன்றுதலாவது ஒன்ருேடொன்று கூடுதல். 'அவ்விருபொருள்கள் யாவை?' என்னில், அவை பதி, பசு. 'அவ்விருபொருள்களும் ஒன்றினது எக்காலத்தில்?' என்னில், அநாதியே. 'அநாதியானல் இரண்டு பெயர்கள் வருவானேன்? இரண்டாவானேன்?' என்னில், அவ்விரண்டையும் அறிகிறவன் ஒருவன் உண்டே! அப்படி அறிபவனும் அறிவிப்பவனுமாக இருக்கும். அப்படியானுல், 'அறிபவன் யார்? அறிவிப்பவன் யார்?' என்னில், அறிகிறவன் பசு; அறிவிக்கிறவன் பதி. 'ஆனல், ஒன்றென்று சொல்லாமல், இரண்டென்று சொல்லுவானேன்?' பெறுவானும் பேறுமாயிருத்தலால். 'ஆனல், இரண்டென்று சொல்லாமல் ஒன்றென்று

சொல்லுவானேன்?' பேறன்றிப் பெறுவானுக்கு வேறே அறிவில்லையாகையால். 'அவ்விரண்டுக்கும் அறிவு ஒன்று யிருக்குமோ? இரண்டாயிருக்குமோ?' என்னில், அறிவாவது சித்து; அறியாமை அசித்து. ஆகையால் ஒன்றாக இருக்குமானால் இருபொருளாக வேண்டுவதில்லை; இரண்டும் ஒரு பொருளாயிருக்கு மென்னில், ஒருக்காலும் ஒன்று படாது. 'ஆனால், சித்து எது? அசித்து எது?' என்னில், 'சித்து பதி என்னவே, அசித்து பசுவாமோ?' என்னில், ஆகாது. ஏனென்னில், சித்தும் அசித்தும் கூடா. அன்றியும், ஒரு புறமாயும் நில்லாத சித்தாரு சித்தென்னில், சித்தைப் பொருந்தியறியாது. சித்தைப் பொருந்திச் சித்தாயிற்றென்றால், 'தன் தன்மை கெட்டுப் பொருந்திற்றோ? கெடாமற் பொருந்திற்றோ?' என்னில், 'தன் தன்மை கெட்டால் பொருந்துவதென்ன? கெடாதிருந்தாற் பொருந்தினதில்லையே! ஆனால், 'பொருந்தியும் பொருந்தாமலும் இருக்கும்' என்னில், 'ஒரு பொருளுக்கு இரு தன்மை இல்லையே! ஆகையால் [1]பசுவுக்குச் சதசத் என்று பெயராயிற்று.

ஆனால், இந்தப் பெயர் பெத்தத்திலோ? முத்தியிலோ? என்றால், இரண்டினுமுண்டு; ஆனால் முத்தி கூடாது. பெத்த முத்தி ஒன்றாகும். அன்றியும்; பெத்த முத்தி இரண்டேது? என்னில், அறியாமை பெத்தம்; அறிவு முத்தம். 'அறியாமையாவதேது?' என்னில், பாசம். 'அவை அறிவாவதே' தென்னில், அவை சிவமானால், முன் ஒன்றென்று சொன்னதில்,—பதி பசு ஒன்றென்றதில்,—பாசம் என்ற ஒன்று எப்படிக் கூடிற்று? என்றால், அந்தப் பசுவுக்குப் பதியன்றி இயக்கமில்லை; அபேதமென்பதே தோன்றும்; இப்படி யெல்லாம் அநேக வினாவிடைகள் வரும்படியாக விளக்குந் தன்மையொன்று அநாதியே யிருத்தலால் அதுவே பாசமாயிற்றாகையால், ஒன்றென்றதற்குப் பொருள் முப்பொருளுமாயிற்று.

---

1. சதசத்:—

'ஆன்மா........' நித்தனைச் சதசத்தாகி (சி. சி. 7, 2) சதசத்—உள்ளதும் இல்லதும்.

ஆனால், [1]அறுவகைப் பொருளும் அநாதி நித்யமாகையால், அவ்வியாபக அறுவகைப் பொருளும் அடங்கியவாறெப்படி யென்னில், திரிபதார்த்தத்துக்கும் பொருட்பாகுபாடு கூறுமிடத்து எழுவாய் பயனிலை செயப்படுபொருளுடன் ஆகவேண்டுமே! அப்படி உடனாகாவிட்டால் ஐக்கியமில்லையே; அனுபவம் கூடாதே! ஆனால், உடனாவது ஏது என்னில், பதியாகிய சிவம் என்னவே, வச்சி யென்ற சிவம் வவ் என்னும் பெருங்கருணையினாலே பசுவென்ற தனது திருவடிக்கீழ்க் கிடக்கும் ஆன்மாவைத் தானாக்கும் இன்பசுகத்தைப் பெறுதற்குப் பிரித்து அருமை காட்டிக் கூட்டும் பாசத்தை நீக்கித் தானாக்கும் என்று பொருளாகவே, பதி என்ற சிவமும், கருணை யென்ற அருளும், அவ்வருளாலறியும் உயிரும், இவ்வினைக்கள் விடைகளைப் பண்ணுவிக்கிற ஆணவமும், அப்போது ஒன்றை ஒன்றாய் மயக்கும் விந்து மாயையும், இப்படித் தொழிற்படுதலாகிய கன்மமும் அடங்கிய ஆறும் பஞ்சாக்கரப்பொருளாய் ஒன்றாகி, [2]அட்டமூர்த்தப் பொருளாய்ச் சிவானந்த ஞான நடன இன்ப சுக குஞ்சிதபாத தகரவித்தையா புர ரகசியமெனக் காண்க.

பொழிப்புரை யநுபவமாகிய நாதாதியாய் நின்ற எழுவகைச் சூத்திரக்கருத்தும் சொல்லி, இனி, வேகங்கெடுத்தாண்ட் வேந்தனடி முதல் ஐந்து வாக்கியம் பாச விமோசனமான அருளுரு அபேதமான நேயத்தழுந்தலாகிய திருவடி லாப மகிமைக்குள் ஒன்பதாம் சூத்திரம் அஞ்செழுத்து அருள் நிலையும், பத்தாம் சூத்திரம், பதினோராம் சூத்திரக் கருத்தாகிய ஞானத்தில் ஞானச்சரியை முதலான திருத்தொண்டின் உண்மையான அநாதிபரம வீட்டின் அனுபவம் விளங்க எடுத்துக்கொண்டார்.

---

1. அறுவகைப் பொருள் :—சிவம், அருள், உயிர், ஆணவம், மாயை, கன்மம்.

2. அட்டமூர்த்தம் :—பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், இயமானன்.

குருத்துதி

(6—10)

## 6. வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க

பதப்பொருள்

வேகங்கெடுத்து (எ - து), 'ஒட்டற்று நின்ற உணர்வான' (திருவுந்தி. 13) எனது உண்மையான பசு போதத்தைத் திருநோக்கத்தால் தீட்சித்து (எ - க).

ஆண்டவேந்தன் (எ - து), 'தேட்டற்று நின்ற விடம் சிவமென' (திருவுந்தி. 12) அடிமை செய்த மன்னவன் (எ - க).

அடிவெல்க (எ - து), நாதன் தாளானது எனது உள்ளத்தில் சிவபோகம் விளைக (எ - க).

நுட்பம்

'ஓங்குணர்வின் உள்ளடங்கி உள்ளத்தின் இன்பொடுங்கத்தூங்குவர்' (திருவருட்: 10 : 1) என்ற உள்ளத்தின்கண் விளைவதான சிவாத்துவித [1]வேத்தியான 'மன்னவன்றன் மகன்' (சிவஞானசித். 8ஆம் சூத் 1) என்ற ஞானநிட்டை. அவையாவன :—

பரமகுருவை மன்னவன் என்றமையால் மன்னவனுக்குள்ள சகல அங்கங்களெல்லாம் இருப்பதால் இவ் அநுபூதி, மாயாடவி என்னும் வனத்தில், பஞ்ச இந்திரிய வேடர், அந்தக்கரணமான நாய்கள், இருவினையாகிற சங்கிலியால், ஆன்மாவான மிருகத்தைப் பிடி காரணமாக, [2]சரிதோறும் உலாவும் புத்திதனை, சகல லோகமும் ஆளுகிற இராசாவானவன் பார்த்து, 'நமக்கு நீ சொந்தமான பிள்ளையாயிருந்தும் மறந்து வேடரிடத்து அகப்பட்டு அவர்கள் தொழிலெல்லாம் கற்றாயே! மயங்கித் திரிகிறாயே!'

---

1. வேத்தி - அறியப்படுவது.

2. சரி - மலைச்சாரல் 'சிங்கம் வேட்டர் திரிசரிவாய்' (திருக்கோ. 156).

என்று சாம பேத தான தண்டம் என்ற நால்வகை உபாயங்களினலே மயக்கம் தெளிவித்து, தன்னுடைய பெருமையெல்லாம் அவனுக்குக் கொடுத்துத் தானுக்கி இரட்சிக்கிறதுபோல. இது திட்டாந்தரம்.

இதற்குத் தாட்டாந்திரம் வினவில், நாதனுகிய பரமசிவனுக்குச் சொந்தமாகிய பிள்ளையான ஆன்மா முன்னர் போல அலையும்போது, குருமணியாக எழுந்தருளி, சதுர்வித சத்திநிபாதத்தாலும் போதித்து, வேடர்களை வசப்படுத்தி, தானுக்கித் திருவடியிற் சேர்க்கும்.

'அப்படிச் சிவனுக்குப் பிள்ளையானல் மலபந்தம் வருவானேன்? கணபதி, கந்தசுவாமிக்கு வரவேண்டுமே! பிள்ளையென்பது வழக்கன்றே! இந்த மகா வாக்கியமும் பொய்யன்றே!'

இதற்கு விடை, உபதேச உண்மை நிட்டையானதால், அதுவாய் நின்றறிய வேண்டும். மனதில் அடங்காதது எழுத்தில் அடங்குமா? சொல்லாமற் சொல்வதான அநுபூதி விபரமாவன :—

சுத்தமான அநாதியில் சுத்த கேவல மலமே இருள். அதுவே இடம். சிவனே மன்னவன். அவனுக்கு உயிர் பரம். அவன் வல்லமை பரை; கரணம் குரு: அவன் தேகம் ஆன்மா. அந்தப்பரனுடைய வல்லமைதான் பரை. அப்பரையால் தொழிற்படுகிறதுதான் தேகம். இவ்வைந்தும் பிரிக்கப்படாமல் ஒன்ருகவே இருக்கும்.

மன்னவன் என்ற திட்டாந்தர தேக மூன்றும் சில காலங்களிலே பிரிக்கப்பட்டுப்போம். இந்த ஐந்தும் பிரிக்கப்படா. எப்படி என்னில், பரமசிவன் எப்படி உருவெடுத்ததோ அப்படியே பரையும் உருவெடுக்கும். பரை எப்படி உருவெடுத்ததோ அப்படியே உயிர் வெவ்வேறு வடிவெடுக்கும். கரணம் எப்படி வடிவெடுத்ததோ அப்படியே குருவும் வடிவெடுக்கும். வெளி எப்படி வடிவெடுத்ததோ அப்படியே மலமும் உருவெடுக்கும். ஆகையால் இவ்வைந்தும் பிரிபடா.

ஆனல் உயிர் வெவ்வேறு வடிவெடுப்பானேனென்னில், அவை பெருங்கருணை வழக்கினலே. அவ்வழக்காவது, ஒருவனுக்கு விருப்பமெல்லாம் தேகரட்சை நிமித்தம்; கரணமும் உயிரும் இந்த ரட்சணைக்கே பிரயாசப்படுகின்றன. அப்படிப்போலப் பரமசிவன் ஆன்மாக்களிடத்தில் வைத்த பெருங்கருணையினலே, மலபரிபாக நிமித்தமாக, கேவலத்தினின்று இம்முறையே அநேகந் திருமேனி எடுக்க வேண்டிற்று.

அவை வினவில், பரத்திலுள்ள ஐந்து பொருள்களாவன: பரமாகிய உயிர் ஒன்று; பரையாகிய வல்லமை ஒன்று; குருவாகிய கரணம் ஒன்று; பசுவாகிய தேகம் ஒன்று; மலமாகிய இடம் ஒன்று. இவ்வைந்தும் பரத்திலும், குடிலையிலும், மாயையிலும், அசுத்தமாகிய பிரகிருதியிலும் முறையே நிற்கும். அவை கேண்மின்:

பரம், சிவன், அரி, அயன் நாலு: பரை, அருள், திரு, கலை நாலு; உயிர், அருள், சித்து, சடம் நாலு; வெளி, ஒளி, இருள், மருள் நாலு; பரம் ஒன்று; ஆகிய ஐந்தும் இந்நான்கு வழித்தான நிலையநுபூதியாற் காண்க.

இவ்வைந்தாகிய பரமும் சொன்ன நான்கிடத்தும் திரிபதார்த்தங்களாக நின்ற அநுபவ முறைமை.

பரத்திற் சித்துப் பரமசிவமாயும், குடிலையில் லயபோக அதிகாரமாயும், மாயையில் பிரமா விட்டுணு ருத்திரனயும், பிரகிருதியில் குரு லிங்க சங்கமமாயும், இருப்பதன்றித் தத்துவம் மூன்றிடத்தும் மும்மூன்ருகக் கொத்துக்கள் தோறும் நிறைந்து நின்ருலும் பொருளொன்றே. அநுபவம் அறிந்தும் அறிவித்தும் அறிவாயும் நின்றமையால் சச்சிதாநந்தம் ஆயிற்று. இதன் கருத்து முதல் மொழியில் பெற இருப்பதால் அறிந்து கொள்க. முப்பொருளும் சைதன்னிய வியாபக நித்தியம் அதுவாய் நிற்பவர்க்கே தெரியும்.

*இன்னும், புலப்பட ஒருவகை. பரம், விந்து, மோகினி, மானுன நான்கொடு முதலெட்டுக்கு அட்சரம்(?). சிவம், பொருள், பதி, பசு, பாசம், அருள், ஆன்மா, திரோதம், மலம். பஞ்சாக்கரம் இரண்டாம் எட்டுக்கு. லய போக அதிகாரம் (௩) நவந்தர பேதம் (௯). சகள நிட்கள சகளாகளம் (௩). மூன்ருமெட்டுக்கு. அனந்த ருத்ரர் (௨) கலாதி (௭) போகம். வித்தை சுத்தா சுத்த (௩). நான்காமெட்டுக்கு. பிரமா விட்டுணு. ஆன்மதத்துவம் முதலாக மூன்றும் இம்முறையே. இருபத்துநான்கும் போக்கிய சுத்தாத்தும தத்துவம்.

பின்புறமெல்லாம்

முதலெட்டுள் இரண்டாம் மேடு. விஞ்ஞான கலர். மூன்ரும் மேடு. பிரளயா கலர். நான்காம் மேடு. சகலர். இவர்கள் நிறைந்து முதற்புறம் பிரேரகர்த்தாக்கள் இவ்வொன்றில் நால்வருமுண்டுளவானதால் சகலருக்குப் பிரேரக அநுக்ரகம் வரும்போது சுத்த பரசிவம் மட்டும் பெருங்கருணையால் தொழிலுண்டு. அநுபவம் விரிக்கிற் பெருகும். அந்தச் சுத்த கேவல நடனத்துக்கே நாதன் தாளான திருவடி என்று பெயர். சகலத்துக்கும் காரணம் அடியே முடி, அம்முடியே அடி: அவயவமில்லை. பரிபூரணமாக விருக்கும். நாயன்மார்கள் கருத்தருள் மொழியும் இவையே.

இன்னும் ஓர் வகை· அனுபவம் கேண்மின் :—மலவொளியில் நின்ற சிவம் குடிலையாகிய சுத்த சத்தியிடத்து வரும்போது பரமாகிய உயிர் சிவமாதி ஐவராகவும், வல்லமையாகிற சத்தி இச்சா ஞானக் கிரியை லயபோக அதிகார சக்திகளாகவும், தேகமாகிற உயிர் விஞ்ஞான கலராகவும் வரும்போது வல்லமையாகிற இச்சா ஞானக் கிரியா சக்திகளினல் ஐவகை மூர்த்தங்களாகவும் ஆயின் மூன்று ஐந்தானதெப்படி யென்னில், இந்த மூன்றின் ஏற்றக் குறைதல் சமமாக விருக்கும். இந்தச் சத்தி, சிவம் விஞ்ஞானகலர் அனுபவமாகவே யிருக்கும். அப்படியாகும் போது பஞ்சசத்தியுண்டே? திரோதான சத்தி எங்கே?

---

*இதுமுதல் இப்பகுதி எட்டிலுள்ளவாறே பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

என்றால், அவை அநுபூதியே வினவில், முன் சத்தத்தில் சொன்ன மலமாகிய ஒளி மிகுந்த சத்தியே இருளாகத் தோன்றி மேலுள்ள அநுபூதியை மறைத்தால் அச்சத்தியே திரோதான சத்தியில் சொன்ன நவந்தர பேதங்களினின்று சிவத்தில் அட்டவித்தீசுவரர்கள், அநுசதாசிவர், மந்திர மந்திரீசுவரர்கள், அட்டமூர்த்திசுவரர்கள்(?) இவர்களெல்லாம் சிவதத்துவமேயாம். இரண்டாம் சத்தி தத்துவமானது, திரிபுரை, அட்டவீரட்ட சத்திகள், துர்க்கை, மயிடாசுரசங்காரி முதல் அநேக சத்திகள். மூன்றாவது சதாசிவதத்துவமானது பஞ்ச சாதாக்கியப் பெருக்காயிருக்கும். நாலாவது பஞ்சவிம்சதி வடிவமாகவும், அறுபத்துமூன்று நாயன்மார்கள், சந்தான சமயாச்சாரிமார்களாக(வும்) இருக்கும். ஐந்தாவது, சுத்த வித்தை, ருத்திரன், ஏகாதச ருத்திரன், நூறு கோடி ருத்திரர் களாக இருக்கும். முன்சொன்ன கர்த்தாக்கள் நாமமே தத்துவ நாமமாயிற்று. ருத்திரன் இருக்கிற தத்துவத் துக்குச் சுத்தவித்தை என்று பெயராயிற்று. கரணமாகிய குரு குடிலையில் அட்டவித்தீசுவரர்களாயும், மாயையில் ருத் திரதேவராயும், பிரகிருதியில் ஆச்சாரியராகவும் இருக்கும். இவை விரிக்கில் பெருகும்; ஞானோபதேசத்தால் அனுபவங் காண்க.

இனி, பன்னிரண்டாம் சூத்திரக் கருத்தாகிய அடியார் அநுபவ விளக்கமாவன.

7. பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க

பதப்பொருள்

[1]பிஞ்ஞகன் பெய்கழல்கள் ஆவன, மகா கேவலத்தினின்று சூட்சும நடனபஞ்சகிருத்தியஞ் செய்து, சகல தசையில், என திடமாக உள்ளிருந்தெழுந்தருளிய நாதனை குருமணி பொற்பாதமெனக் காண்க.

---

1. 'பிஞ்ஞகம் - தலைக்கோலம். அது 'பிஞ்ஞகம் தலைக்கோலம்' என்ற திவாகரத்தால் உணர்க. சிவபெருமான் திருமுடியும் அம்முடி மேல் அழகிய வெண்பிறையும் குளிர்ந்த கங்கைநீரும் உடையராதல் பற்றிப் பிஞ்ஞகன் எனப்பட்டார். (மறைமலையடிகள் பக். 29).

பிறப்பறுக்கும் என்றது, இற்றைவரை அருளும் தேக பாசம் நீக்கித் திருவடி ஞானமே தேகமாக அருளுமெனக் காண்க.

வெல்க என்றது, எனது மலபோதத்தை வேத்தி செய்து சிவஞான போதமாக விளங்கியதெனக் காண்க.

நட்பமாவன

பெய்கழல் என்ற பதத்துக்கு அநாதியே என்னை விட்டுப் பிரியாதபடி இன்பப்பிறவி அளிக்கும் என்பது பொருள்.

இதற்கு அநுபூதியாவன :—

நடனம் என்றது, அதி சூட்சும கேவல சகலத்தின் கண் சிவாக்கினை சென்றதே, பஞ்சகிருத்தியமே நடமெனக் காண்க. அவ்வாக்கினை செல்வது எப்படி என்னில், திட்டாந்தரத்தால் தாட்டாந்தரம் புலப்பட வேண்டும். அவை யாவன, சூரியன் முதலில் வர, கிரணங்களாகிற ஒளி அதன் பிரகாசம்; அவ்வொளிக்குத் தொழில் இருளை ஓட்டிக் கொண்டே யிருக்குமாகையால், இருளொன்று அநாதியாய் நித்தியமாயிருப்பதொன்றுண்டே! அவ்விருளில் அகப்பட்ட பொருள்களாயுள்ள வித்துக்களெல்லாம் வெயில் முறுக்கத்தால் வீரியமாய் முளைத்துப் பக்குவமாய் விளையும். அதுபோல, சிவமாகிய முதலதன் பிரகாசமான சத்தாகிய அருளொளியானது ஆணவ விருளாகிய மலசத்தியை நோக்கும்போது, அந்த நோக்கம் [1]சிற்பரவியோமமான தால் அவ்வொளியால் அவ்வாணவமே உண்மையான ஆன்மாக்களாகப் பிறந்தது. அவைகள் எக்காலத்திற் பிறக்கும் என்றால், அவ்வொளி இருளை நோக்கும்போதெல்லாம் பிறக்கும். அம்முதலும், அவ்வொளியும், அந்நோக்கமும், அவ்விருளும், அப்பிறப்பும் அநாதி நித்தியமாகையால் அந்த நாள் தொடங்கி இடைவிடாது பிறக்கும். மேற் பக்குவமும் சிவமே தானாகிற இன்பப் பிறப்பும் உண்டு அடியார்கட்கு என்பது நியமம்.

1. சிற்பரவியோமம் - சிதாகாசம். 'சிற்பரவியோமமாகும் திருச் சிற்றம்பலத்துள்' (பெரிய பு.: தில்லை ; 2).

அவை எவ்விடத்தென்னில் விந்து, மோகினி, மான் என்ற மூன்றிடத்தும். அவை விந்துவாகிய குடிலை பரைப் பேராகிய இச்சா ஞான கிரியா மூர்த்திகட்கிடம். மாயை யாவது சிவாக்கினை செலுத்தும் அதிகார கர்த்தாக்களுக் கிடம். மானுவது சர்வான்மாக்களுக்குமிடம். [1] இவ்வான் மாக்கள் மூன்றிடத்தால் மூன்று பேதம் கொள்ளும். குடிலையாகிற சுத்தத்திலிருப்பவர்களுக்கு விஞ்ஞானகலர் என்று, ஞானமே வடிவாய், கலாதியாற் பெயர். மாயையி லிருப்பவர்களுக்குப் பிரளயாகலர் என்று பெயர்; மாயையே வடிவாய் அப்பிரளயாகலத்திற் கலாதியாற் பெயர். பிரகிருதியிலுள்ள பெயர் பிரகிருதியே வடிவாய்க் கலாதி யோடு கூடிய மானிடர்கள்.

இம்மூவரும் முறையே மூலமலமொன்று, மாயை கன்ம மிரண்டு, மாயை கன்மம் மலம் மூன்றும் உளர். பெயர் மூன்ருயிருந்தாலும் அவரவர்க்கு இருள் வேறென்ருல், அவ்விருள் மூன்றுண்டோ? எனில், உண்டு. அவை சூரியன் முன் இருள்; சந்திரன்முன் இருள்; நட்சத்திரத்தின்முன் இருள் போன்றிருக்கும். ஆகையால் சத்தாகிய ஆன்மாக் களுக்கு இடம் மாயை; சித்தாகிய சிவத்துக்கு இடம் குடிலை; ஆனந்தமாகிய சுகத்துக்கு இடம் பரை. மேலும் சித்தாகிய சிவத்துக்கு இடம் சத்தாகிய ஆன்மா; ஆனந்த சுகத்துக் கிடம் சித்தாகிய சிவம்; இவ்வகை.

இனி, சிவஞான போதப் பதினேரு சூத்திரக்கருத்தும் 'வேகங் கெடுத்தாண்ட' வாக்கியம் வரை அருளி, மேல் அணைந்த

1. எண்ணிறந்ததாகச் சொல்லப்பட்ட ஆன்மவர்க்கம் மூன்றுவகை. அவர் விஞ்ஞானகலரென்றும், பிரளயாகலரென்றும், சகலரென்றுஞ் சொல்லப் படுவர். இம்மூவரில் விஞ்ஞானகலர் ஆணவமலத்தாரென்றும், பிரளயாகலர் ஆணவமும் கன்மமுமென்னும் இரு மலத்தாரென்றும், சகலர் ஆணவம் கன்மம் மாயையென்னும் மும்மலத்தாரென்றுஞ் சொல்லப்படுவர்; மாமாயை திரோதாயியென்னுமிரண்டு மலமும் மூவகையான்மாக்களுக்கு முள; அவை கூட்டி யெண்ணுமிடத்து விஞ்ஞானகலர் மும்மலத்தார், பிராளயகலர் நான்குமலத்தார், சகலர் ஐம்மலத்தாராவர்.

(சித்தாந்த வசனபூஷணம் பக். 96)

தோர் தன்மையான பன்னிரண்டாம் சூத்திரக் கருத்தும், ‘பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன்’ என்ற வாக்கிய முதலாக அடிமைத் திறமான அன்பின்ப உல்லாச நாதன் திருவருள் வினியோகமாவனவற்றில், பிறப்பறுக்கும் என்ற வாக்கியப் பயன் ‘முடிவிலடியார் திருவடி ஞானப்பேறருளி அப்பேறு உண்மையடியார்கட்கன்றி வேறுபட்டவர்க்கில்லை’ என்ப.

## 8. புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க

### பதப்பொருள்

புறத்தார்க்குச் சேயோன், (எ - து), அணைந்தோர் தன்மையான அடிமைத்திற அநுபூதியில்லாத அபரிபாக ஆன்மாக்கட்கு அநுபூதிக்கெட்டாத நாதன் (எ - க).

தன் பூங்கழல்கள் வெல்க (எ - து) திருவருளழகு பொருந்திய முன் குருமணி பொற்பாத கமலங்கள் எனது உளத்தில் நனி விபுவாய் விளங்கியிருக்க (எ - க).

### நுட்பமாவன

[1]அபரிபாக உயிர் என்றது நம்பர் அருளில்லாமையினுல் புறச்சமயமென வேறுபட்டிருந்ததும், நாதன் தாளே பரிபாக நிமித்தம் கன்மத்தை உயிர்க்கு ருசிப்பித்துப் புசிப்புக்கும்போது நின்ற தாரதன்மய நிலையதுவே மதமாதலால், எல்லாம் ஓரிடத்தே காணநின்ற யாதொரு சமயம் இச்சைவ சமயமாதலால், அக்கினி காட்டத்தில் மறைந்தது போலும், (சிவஞானசித். சூ. 12 : 4) நெய் பாலில் மறைந்தது போலும், (சிவஞானபோ. சூ. 12 உதார. 2) அவரவர் சமயக் கொள்கையிலே தோன்றுத் துணையாக மறைந்திருந்த நாதன் தாளைப் பரிபாக அநுக்ரகமானபின் முன் இறந்தகால சமயநிலை கண்டிரங்கிப் பயந்து பெருமூச் செறிந்து விதிர்விதிர்ந்து பரவசம் கண்டது இவ்வநுபவமேயாதலாலும், நாயன்மார்கள் சாத்திரத் தோத்திரங்களால் வெளிப்பட்டு வருவதாலும், சகல சமய பாவனையும் பரம சிவன் திருவடியெனத் தெளியும் பொருட்டுச் சொன்னது.

1. ஏட்டில் ‘மலபரிபாக உயிர்’ என்று எழுதப்பட்டுள்ளது.

**சேயோன்** என்றதனாற் போந்த புறச்சமயங்களாவன :— உலகாயதன், புத்தன், சமணன், மீமாங்கிசன், மாயாவாதி, பாஞ்சராத்ரி. இவற்றுள், புத்தரின் பேதம், சவுந்திராந்திகன், யோகாசாரன், மார்மீகன், (மாத்யமிகன்), வைபாடிகன் என்ற நால்வர். சமணரில் பேதம் நிகண்டவாதி, ஆசீவகன் என்ற இருவர். மீமாங்கிசரில் பேதம் பட்டாசாரியன், பிரபாகரன், நையாயிகன் என்ற மூவர். மாயாவாதியில் பேதம் அகம் பிரும்மவாதி, பாற்கரியன், நிரீச்சுர சாங்கியன் என்ற மூவர். உலகாயதரில் பேதம் ஈசுவர சார்வாகன்[1].

புறச்சமய பேதம் [2]பதினைந்து. முன்னே மூலாகமத்தில் அநேகமுண்டு. இவர்கள் தத்துவமும் அநுட்டானமும் அநுட்டிப்பும் கொள்கையும் அதன் பயனும் ஆகம குரு சம்பிரதாய வழியால் அநுபூதி பெறத்தக்கன.

இவ்வநுபவ நிலையில் திருவடி சேயாய் நின்றது பக்குவ மலர்கட்காக. மரத்திற் கரந்தாங்கு ஒடுங்கிய அனலும், பாலில் கரந்தாங்கு ஒடுங்கிய நெய்யும், வெளிப்படும் பக்குவ காலம் போல. ஆன்மாக்களுக்கு இருவினையொப்பும் மல பரிபாக சத்திநிபாதமும் வந்து, உத்தம அண்ட கண்ட தேக தேச சாதியில் உற்பவித்து, வேத நூலோதி, கரும காண்டம் பொருளன்றெனக் கண்டு, ஞானகாண்டம் தெரிந்து, இதுவரையில் ஊழுடையான் அருள் பொருந்தி வாழவேண்டும் என்ற மையல் விட்டு, மறுமையாம் சிறுமை தப்பி, வேதாந்தம் தெளிந்து, [3]சைவசித்தாந்த அடிமைத் திறம் சார்வதே பொருளெனக் காண்க.

---

1. இப்பகுதிகளைப் பிறவாறு கூறுவாரும் உளர்.

2. மேலே கூறிய பதினான்கோடு பாஞ்சராத்ரியையும் கூட்டிப் பதினைந்து.

3. இதன் விளக்கம் அடுத்த அடியின் நுட்பத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

## 9. கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க

பதப்பொருள்

கரங்குவிவார் உண்மகிழும் என்றது, குருமணியாகிய ஆண்டவனைக் கண்டகால் அகம் புறம் என்னுது பஞ்சாங்க, அட்டாங்க அங்கப்பிரதட்சணமாக நிலமுற விழுந்து அடியுறப் பணிந்து, வீடு வேண்டா விறலினராகி, கூடும் அன்பினிற் கும்பிட உளத்திற் சிவானந்தம் பிறக்கும் (எ - க).

கோன் கழல்கள் வெல்க என்றது, முற்பத ஆனந்த நாதன் இரண்டு திருவடிகளும் எனது உளத்திற் சாங்கு சித்தாந்தப் பொருளாய் விளக (எ - க).

நுட்பமாவன

சைவசமயச் சார்தலாவன: சிவாகமக் காட்சியில் அருளுடைய தீக்ஷை பொருந்தி, உண்மைச் சரியை முதலான ஞானபாதம் பொருந்திய குஞ்சிதபாத உண்மைச் சமயம்.

அவையாவன :—

சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வயிரவம். இவ்வறுவர்களுடைய கோட்பாடும் குஞ்சிதபாத சாலோகாதி முக்திகளும் மூலாகம உத்தர பூர்வசிகையிலும், ஞானசாரியாரருளிய முதல் வழி சார்பான சாத்திரங்களிலும், அவற்றின் வியாக்யான நூல்களிலும் உபதேச சம்பிரதாயத்தாலும் காண்க.

இனி, முன்சொன்ன குஞ்சிதபாத சேர்வையால் உட்சமயக் கோட்பாடும் கடந்து அதிதீவிர சத்தினிபாதத் திருவருள் உதவி, நோக்காதி தீட்சாயுத்தனுகி, மெய்ஞ்ஞான குருவுண்மை உபதேசத்தாற் சிவாகமக் காட்சியான திரிபதார்த்த நிச்சயந் தெரிந்த சிவனடியார்களே ! குஞ்சிதபாத தரிசனமே பரம மோட்சமெனக் காண்க.

10. சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க

பதப்பொருள்

சிரங்குவிவார் (எ - து), [1]தற்போதமற்ற சாங்குசித்த அத்துவித உண்மையடியார்கள் (எ - க)

ஓங்குவிக்கும் (எ - து), அவ்வடியார்களை யாவர்க்கும் மேலாக்குவான் (எ - க).

சீரோன் கழல் வெல்க (எ - து) யாவர்க்கும் மேலான அருள் விலாசச் சீர்ச் சிறப்பின்ப உல்லாச நாதன்தாள் எனது உள்ளத்தில் வற்ருது முற்ருது விளைக (எ - க).

நுட்பமாவன

அத்துவிதக் காட்சிப் பயன் முன்சொல்லிய சுத்த சைவ சித்தாந்த பேதவபேத பேதாபேத அத்துவித சமாதி சாமர்த்தியமான்களில் ஐக்கியவாதி, பாடாணவாதி, பேத வாதி, சமவாதி, சங்கிராந்தவாதி, அவிகாரவாதி, பரிணும வாதி, சைவசிவாத்துவிதி இவ்வெண்மர்கள் பாவனுரூட பலனும் கோட்பாடும் மோட்ச பேத நிலையும் ஞானசாரியா ருபதேசத்தால் அநுபூதி நாதன்ருளே எனப்பெறத் தக்கது.

புறத்தார்க்கு (அடி. 8) என்பது முதல் சிரங்குவிவார் (அடி. 10) என்ற வரையிலுள்ள மூன்று திருவருள் வாக்கியங் களுள் உலகாயதன் முதல் சிவாத்துவிதி வரையில் [2]முந் நூற்றுமுப்பத்துமூன்று மதமாகத் தொகுத்து மூலாகமத் திற் சொல்வதைச் சமயாசாரிமார்கள் அருளிய சாத்திரத் திற் காண்க.

பொழிப்புரை அநுபூதிப்படி வேகம் (அடி. 6) முதல் சிரம் (அடி. 10) வரை இவ்வைந்து வாக்கியங்களும் குருத்துதி ஆயினவாறு காண்க.

---

1. தற்போதம் - அகங்காரம்.
2. முந்நூற்றுப்பதின்மூன்று என்று ஓர் ஏட்டில் உள்ளது.

இனி ஈசனடி போற்றி (அடி. 11) முதல் ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி (அடி. 16) என்றவரை எட்டு வாக்கியங்களும் பரமசிவனது அட்டகுணங்களையும் துதித்தது. அவ்வநுபூதி யாவன, பதவநுபூதிப்படி அடியாருள்ளத்தில் ஆனந்த விளைவெனவே காண்க.

இனி, சிவகுணகுணியான திருவருட்குணப் பொருட் பெருமையான சருவ சுதந்தர ஞானம் சிவனுக்கே யல்லாது வேறொருவர்க்கில்லை யென்ற அநுபவம் வேதாகமத்தில் வெகுவித வாக்கியப் பயனாகவிருப்பினும், காமிகாகம உத்தர சிகையில் பரார்த்த கிரந்தத்தின் பாதியிவையேயென அநுபூதி பெறுக.

பரமசிவனின் அட்டகுணத் துதி

ஈசனடி போற்றி முதல் துதித்த திருவருள் விநியோக மாவன :—

11. ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி

பதப்பொருள்

ஈசனடி போற்றி என்றதில் ஈசனடி [1]கர்த்தவியம். அது யாதெனில், சருவதேவனுக்கும், சர்வ ஆன்மாக்களுக்கும், சர்வ சத்திகட்கும், சர்வ சடசித்துக்கும் அவ்வுயிர்போல் சிவனே முதல் (எ - க). போற்றி என்றது, இரட்சிப்பதற்காக வணங்குந் துதி (எ - க).

எந்தையடி போற்றி (எ - து). 'சருவமும் தன் வசமான நாதவிந்து செகத் சொரூபமான பொருளே ! எனை இரட்சிப் பாயாக' எனக் காண்க.

12. தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி

பதப்பொருள்

தேசனடி போற்றி. தேசன் - தூயதிருமேனி. அதாவது, எல்லாத் திருவுருக்களுக்கும் மூன் அநாதியே காரிய காரணங்கடந்த கருணையே, அன்பே, இன்பான நின்மல அருட்

---

1. கர்த்தவியம் - செய்யத்தக்கது.

டிரு தேசோமயத் திருவடி (எ - க). போற்றி என்னை இரட்சிப் பாய் (எ - க).

சிவன் சேவடி போற்றி (எ - து). அநாதியே இயற்கை உணர்வாகிய சருவஞானப் பொருளே எனை இரட்சிப்பாய் (எ - க).

13. நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி (எ - ன)

சருவான்ம கோடிகட்கும் அறிவாயிருந்து [1]ஞான ஞேய ஞாதுரு நாடாவண்ணமான நின்மல இன்ப சொரூப வியாபகப் பொருளாய் நின்ற நாதன் தாளே என்னை இரட்சிப்பது (எ - க).

14. மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி (எ - ன)

பிறப்புக்குக் காரணமாகிய மாயை முதல் [2]பஞ்ச பாசத்தையும் நீக்கக் குருமணியாய் எழுந்தருளிப் பெருங் கருணை வழக்கால் இரங்கி எனது பிறவியைத் திருவருள் நோக்கால் தீட்சிக்கும் நாதனருளே எனை இரட்சிப்பது (எ - க).

நுட்பமாவன

பெருங்கருணை யாது? எனின்;—நாதன் தாளானது தனது சித்து விலாசத்துக்குள்ளே அளவிலாத அண்டங் களை அடங்க வைத்துக் கொண்டிருக்கின்றது; ஆனாலும், அஃது அவனவளதுவாய், அணுவுக்குமணுவாய், சூட்சுமாதி சூட்சுமமாய் நிற்கின்றது; அன்றியும், சர்வ சடசித்துக்

---

1. ஞான ஞேய ஞாதரு - (சி. சி. 11 - 2) அறிவு, அறியப்படும் பொருள்; அறிபவன்.

2. பஞ்சபாசம்:—ஆணவமலம், திரோதானசக்தி, சுத்தமாயை, அசுத்தமாயை, ஆதிகன்மம் (சிவநெறிப்ரகாசம் 62); மாமாயை; திரோ தாயி, ஆணவம், மாயை, கர்மம் என்பாரும் உளர்.

களையும் சிவசக்தி என்பதனை அவித்தையால் மறந்து ஆன்மாக்கள் தத்தம் செயலாலே நடப்பதாக எண்ணிக்கொண்டிருக்கின்ற அந்தப் பெரிய குற்றத்தைப் பொறுப்பதுமன்றி, அவ்வான்மாக்கள் எப்போது பரிபாகப் படுவார்களோவென்று இதுவே வேலையாகத் தகரவித்தியாபுரமான திருச்சபையில் திருநடனம் செய்யும் சுவாமி திருநோக்கம் பாலிப்பதே பெருங்கருணை (எ - க).

மன்னன் என்ற வாக்கியத்திற்கு முன்னரருளிய வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி (அடி. 6) என்ற பயனைக் கொள்க.

திருநடனஞ் செய்வதற்குச் சுருதி :—

வேதத்தில்,

'திருநட்ட மாடியைத் தில்லைக் கிறையை'

(திருநாவுக். 4 : 81 : 1)

என்றும்,

ஆகமத்தில்,

'அபலத்துள்ளாடுங் கழலே'

(பெரியபுரா. திருநாவுக். 179)

என்றும்,

'எங்கும் திருநட்டம்'

(திருமந். 2722)

என்றும்,

சாத்திரத்தில்,

'நலமிகு தொழில்களோடு நாடக நடிப்பன்'

என்றும் வருவனவற்றுற் காண்க.

## 15. சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி

(எ - ன)

திருவருட் சிறப்பான திருவருட் பூமியாகிய திருப்பெருந்துறையின்கண் என் பொருட்டு நிர்மலத்துவமாகிய நவந்தர பேதங் கடந்த [1]அகளமாய் யாருமறிவரிய பொருள், சகள

---

1. அகளம் - நிஷ்களம். 'அகளமெய் வடிவானந்த......கூத்தன்' (காஞ்சிப் : திருக்கண் : 281).

மயம்போல் உலகில் தங்கிச் சிவஞான உபதேசம் அடியேற் குபதேசித்த ஆன்ம நாதனுகிய குருசுவாமி திருவடியானது என்னை ஒழியாவின்பமாக இரட்சிப்பது (எ - க).

16. ஆராத இன்பம் அருளும்மலை போற்றி

(எ - ன)

நின்மலமாகிய நாதன்ருளானது எனது உளத்தில் ஒழியாத பேரின்பமாக நாடோறும் பின்னும் புதிதாகவே பெருக அருளும் மலையான திருவடியே என்னை இரட்சிக்க (எ - க).

இவை எண்குணமும் அநாதி நித்திய சுத்த சைதனிய வியாபகப் பேரின்பம் என்பதற்கு, முதல்மொழி நுட்பானுபூதியில் அநாதி என்பதற்குப் பொதுப்பாயிரத்தில் காட்டிய புகையெட்டு என்ற தேவார உரையிற் காண்க. (பக். 90-92) இவை உபதேசவநுபூதி.

இனி,

17. சிவனவன்என் சிந்தையுள் நின்ற அதனுல்,

(எ - ன)

சருவஞ்ஞான சுதந்தரனுயுள்ள சிவன் தன் பெருங் கருணையை அறிகிறதற்குச் சுதந்தர ஈனனுயுள்ள அறிவானுக்கு அருளே இடமாக உயிருக்குள்ளே நின்றபடி நிற்கும் சிவமே. எப்படியென்னில்? அவைக்கு நுட்பானுபூதிச் சுருதி :—

**வேதத்தில்,**

உயிர்க்குயிராயங்கங்கே நின்ருன்

(ஞானசம். 1 : 132 : 4)

என்றும்,

பொற்கழலுள்ளிருக்கும்,

என்றும்,

ஈசனிடம்,

(ஞானசம் : 1 : 106 : 10)

என்றும்,

*முன்னம் பெருங்கோயில்*

என்றும்,

*மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்*

(திருநாவுக் : 5 : 204 : 9)

என்றும்,

*நன்னெஞ்சே யுனையிரந்தேன்*

(ஞானசம். 2 - 176 - 2)

என்றும்,

*உள்ளங்கவர் கள்வன்*

(ஞானசம். 1 - 1 - 1)

என்றும்,

*சிந்தனை நின்றனக்காக்கி*

(திருவாச : 30)

என்றும்,

ஆகமத்தில்,

*கரணங்கள் சிந்தையேயாக*

(பெரியபு : தடுத்தாட் : 106)

என்றும்,

*சிந்தையதென்னச் சிவனென்ன வேறில்லை*

(திருமந். 2853)

என்றும்,

சாத்திரத்தில்,

*ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி*

(சிவஞானபோ. சூ. 9)

என்றும்,

*ஞானக்கருத்தினுல்*

என்றும்,

*சிந்தையினும் சிரத்தினும்*

(திருக்களிற்றுப் : 100)

என்றும்,

*சிந்திக்கச் சிந்திக்க விளக்கும்*

என்றும்,

இவ்வகையநுபூதி நாயன்மார்கள் திருவாக்குக்கள் தோறும் வருவன அநுபூதி காண்க.

இனி,

18. அவன்அரு ளாலே அவன்தாள் வணங்கி

(எ - ன)

முற்பத விநியோக அநுபூதிப்படி சிந்தையுள் நின்ற சிவனருளாலே அவனது திருவடியை மும்மை வணக்கஞ் செய்வேனெனக் காண்க.

நுட்பமாவன

அவனருளே பொருள் என்பதற்கு,

வேதத்தில்,

தோடு, கூற்று, பித்தா மூன்றும் பீடுடைத் தேசிகன் பொருள்

என்றும்,

ஒருருவாயினை

என்றும்,

உணர்ந்தார்க் குணர்வரியோன்

என்றும்,

ஒளிவளர்விளக்கே

என்றும்,

ஆகமத்தில்,

உலகெலாம்

(பெரியபுராணம் பாயிர. 1)

என்றும்,

சோதியாய்

(பெரியபு : தடுத்தாட் : 193 : தில்லைவாழ் : 1)

என்றும்,

தன்னைக்கண்டயென் வண்ணமவ்வண்ணம்

என்றும்,

புராணத்தில்,

தற்பரம்

(கோயில் : நடராஜ : 19)

என்றும்,

சாத்திரத்தில்,

அவனவளது

(சிவஞான : 1)

என்றும்,

ஆதிநடு வந்தமிலா வளவில் சோதி

(சிவஞானசித். பாயி.)

என்றும்,

ஓங்கொளியாய்

(சிவப். 1)

என்றும்,

அம்மையப்பரே

(திருக்களிற்றுப். 1)

என்றும்,

அங்கிங்கெனுதபடி யெங்கும் பிரகாசம்

(தாயுமானவர் 1)

என்றும்,

எமது குரவரர் திருப்பரவையம்மை பேரில் சிவானந்த மான பிள்ளைத் தமிழில் திருப்பாவான,

என்ன தறிவா லொன்றறிய
　　எனக்கோ ரறிவின் ருயிடினும்
எல்லா முன்னு லறிந்திடினும்
　　யானே யறிந்த தெனநிற்பேன்;
மன்னும் பிராணனுய் நின்ற
　　வுன்னை யுன்னு லறிந்ததற்பின்
வாழுமெனையு மவ்விடத்திற் காண்பே
　　னீயாய் நின்ற மையா
லுன்னி யுணரிற் றேன்றுவைநீ
　　யுவையா யுணர்தல் கண்டறிவே
*யுண்மையான சுத்தமதா யொழியாறேய்
　　துறைவைப்பா
லன்னம்பா லுண் டானவர்க
　　ளறியாப் பொருளே வருகவே
யன்பர்க் கெளிதா யருள்பரவை
　　யமுதே வருக வருகவே.

---

*இவ்வடி ஏட்டிலுள்ளபடியே பதிப்பிக்கப்பெற்றுள்ளது,

இவ்வநுபூதியை முன்னருளிய வேதாகம புராண சாத்திரச் சுருதிக்கு முதல்மொழி நுட்ப வாக்கியத்துக் கெடுத்துக் காட்டலான உரையநுபூதி முழுவதையும் பயன் பெற்று மெய்ஞ்ஞான குருவுபதேசத்தாற் சிவாநுபவாசுபாநுபூதியம் பெறத்தக்க உபதேசம் என்பதற்கு மெய்த்தாறு என்ற தேவார உரையில் அறிவொண்ணு என்ற பதத்திலும், (பக். 87) திருவெழுகூற்றிருக்கையான தேவார உரையில், ஒருரு என்ற பதத்திலும் (பக். 95) காண்க.

இனி,

19-20. சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்

(எ - ன)

முற்பதத் திருவருட் பிரேரகப் பிரேரியப் பரம்பொருளாகிய சிந்தையாற் சிவானந்தக் களிப்புற்றுத் தெய்வப் புலமைத் திருவள்ளுவருரைத்த மெய் வைத்த சொல்லை விரும்பும் [1]" இறைவன் பொருள்சேர் புகழ்புரிந் தாரிடத்து இருள்சேர் இருவினையும் சேரா' என்ற உண்மை கொண்டு பரமசிவனது அநாதி திருவடி ஞானப் புகழைத் துதிப்பேன் (எ - க).

ஏது நிமித்தமெனின், அடியேன் செய்த வினை முழுதுந் தீரவெனக் காண்க.

இவைக்கு நுட்பச் சுருதி :—

என்றிங் கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டுஞ்
சென்று தொடருமவன் சென்றிடத்தே—
[யென்றுந்தான்
தீதொருவ னுற் சிவாபதிதான் கைவிடுமோ
மாதொருகூ றல்லனே மற்று.

---

1. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(குறள் பாயிரம் 1 - 5.)

இனி,

21. கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி

(எ - ன)

நுதற்கண்ணுடைய பரமசிவன் அச்சிவஞானக் கண்ணாலே தனது திருவடி ஞானத்தை அடியேற்கு அருளுவதாகத் திருப்பெருந்துறையில் எழுந்தருளியதெனக் காண்க.

நட்பச் சுருதியாவன :—

நுதற்கண் என்பது, 'தேசமாரொளிகளெல்லாம் சிவனுருத் தேசதென்னர்' என்ற சாத்திரத் திருப்பாவின் அநுபூதியும், 'காண்பார்யார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே' (திருநாவுக் : **6 : 309 : 3**) என்றும், "ஆட்பாலவருக்கு அருளும் திறனும், கேட்பான் புகிலவை கிளர்க்க வேண்டாம்" என்ற வேதாகமப் பிரமாணச் சுருதிகளும் காண்க.

இனி,

22. **எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி**

(எ - ன)

அளவைகளாலும் வேத முதல்நூல்களாலும் அளவாக்களவான திருவருளழகு பொருந்திய தில்லைச் திருச்சிற்றம்பலத்துள் ஆடும் கழலான திருவடியைத் தொண்டாலியலும் அடியார்களில் யான் யாராய் அணேவனென உண்மையால் நமக்கரித்து வணங்குவேனெனக் காண்க.

ஏது நிமித்தமெனின், பொழிப்புரையிற் சொல்லிய மேல் வருவதான மகாவாக்கிய அநுபூதி (எ - க).

அவையாவன :—

23. விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்

(எ - ன)

விண்ணிறைந்து (எ-து). சகல பிரபஞ்சமும் பிருதிவி முதல் நாதபரியந்தம் சங்காரக் கிரமம்; நாதமுதற் பிருதிவி

பரியந்தம் சிருட்டிக் கிரமம்; ஆகத் தூல சூக்குமமாகவே மூன்றும் மாயா புவனங்களில் அடங்குவதான [1]ஆறு அத்துவாக்களும் (எ - க).

மண்ணிறைந்து (எ-து). சங்காரக் கிரமமாகச் சகல புவனமும் அடங்கும் வியாபகமாகிய பரம்பொருளே (எ - க).

மிக்காய் (எ - து). சகல தத்துவ, தோற்றமொடுக்கமானலும் அவ்விகாரத்தாற் பந்தப்பட்டதன்று; இருந்தபடி இருப்பதான பரப்பிரம வஸ்துவே முதற்பொருளான சருவ வியாபகம் (எ - க).

விளங்கொளியாய் (எ - து). இருந்தபடி இருந்த எனை தட்சிணு முகமாக உபதேசித்த அத்துவித சின்மயவான்மாவாக அபேத அத்துவித சித்தாந்த சிற்பர வியோம குஞ்சித பாத சிவஞானப் பிரகாசம் (எ - க).

## 24. எண்ணிறந் தெல்லை யிலாதானே !

(எ - ன)

எண்ணிறைந்து (எ - து). எண்ணிக்கையாக எதைச் சொல்லுமிடத்தும் அவ்வெண்ணுக்குள் அடங்கியும் அடங்காமலும் அத்துவிதமாக விருக்கும் (எ - க).

எல்லையிலாதான் (எ-து). இன்ன பொருளாவன், இன்ன பொருளாகான்; இன்னவிடத்திலிருப்பான், இன்னவிடத்திலிரான்; உள்ளே யிருப்பான், புறத்திலிரான்; புறத்திலிருப்பான், உள்ளேயிரான்; இன்னபடி வருவான், இன்னபடி வாரான்; இன்னபடி அனுக்கிரகம் பண்ணுவன், இன்னபடி அநுக்கிரகம் பண்ணமாட்டான்; யாவருக்கும் தோன்றமாட்டான், யாவருக்கும் தோன்றுவன்; ஒன்ருயிருப்பான், பலவாயிருப்பான்; 'உலகெலாமாகி வேறுயுடனுமாயொளியாயிருப்பன்' (சிவஞானசித். சூ. 2 : 1) எனக் காண்க.

---

1. கலாத்வா, புவனத்வா, வர்ணத்வா, மந்திராத்வா, பதாத்வா, தத்வாத்வா என்பன,

இவ்வாறு வாக்கியப் பொருளும், சித்தாந்த அநுபூதிமான்களாகிய நாதாக்கள் கண்ணின் இன்புறக் கண்டு கும்பிட்டெழும் காட்சிப் பொருள் என்பதற்கு, ‘கற்றவர் விழுங்கும் கற்பகக்கனி’ என்றும், ‘காயாயாச் செழுங் கனி’ என்றும், ‘அருள்பழுத்தளிந்த கருவிளங்கனி’ என்றும், ‘கண்டேனவர் திருப்பாதம்’ என்றும் அருள்வதான வேதாகம புராண சாத்திர சம்பிரதாய வனுபவத்துக்குபதேச நுட்பப்பொருளாவன :—

அகண்டாகார, சச்சிதாநந்த, சகல செகத் சொரூப, சருவ வியாபக நாதன் தாளானதே ஒன்ருகிய முதல். அதுவே காட்டுங் குறியாகிய சிவலிங்கம்; அந்த முதலான வேருக்கு மூன்று மாயா புவனமே நிலம்; அதற்கு வித்து உயிர்; முளை வேர்; கொழுமை ஒரு பரையாதி பஞ்ச சக்திகள்; பரம் ஒன்று உளத்தில் முக்கவரான லய போக அதிகாரம்; அக்கவரில் ஒன்று சகளம்; அதற்குக் கிளைகள் நான்கு; மற்ருென்று நிட்களம்; அதற்குக் கிளைகள் நான்கு; நடுக்கவர் சகளாகளம்; அதற்குக் கிளைகள் ஐந்து; சகளக்கிளைகள் நான்கினும் அநேகம் பிரமா, விட்டுணு, ருத்திரர், பஞ்சவிம்சதி முதலாகிய மயேசுவர பேதங்களெல்லாம் அநேகம் கொம்புகளாகவும், நிட்களக் கிளைகள் நான்கினும் அநேக சத்தகோடி மந்திர மந்திரீசுரர்கள், அட்டவித்தீசுரர்கள், அனுசதாசிவர் முதலாவர்கள் அநேகம் கொம்புகளாகவும், சகளாக்களக் கிளைகள் ஐந்திலும் பஞ்சசாதாக்கிய சுத்தமாயா விந்து மூர்த்தங்களாகிய கர்த்தாக்கள் அநேகமான கொம்புகளாகவும் இருப்பார்கள்.

அக்கொம்புகளிலுள்ள அநேகங் கொடிகள் அளவில்லாத மாயாசக்திகள். அக்கொம்புகளிலுள்ள குழைகள், இலைகள், அரும்புகள், பூக்கள், காய்கள், அநேக பதார்த்தங்கள், அட்டமாசித்திகள், அட்டாங்க யோகங்கள், சரியை கிரியா யோக சமாதிகள், கேட்டல் சிந்தனை தெளிதல் நிட்டைகள் முதலியன; அவை முதிர்ந்து, அதிதீவிர பரிபக்குவ வருட்கனி பழுத்து, தான் அறியப்பெற்ற சுகாதீத சிற்பர வியோமய அநமிய அபேத அத்துவித உல்லாச சாட்குணிய குஞ்சிதபாத இன்பப் பெருக்கானது.

வேர்முதல் நுனிவரை சிவானந்தமாதலால் ஆனந்த பல ரசமாகவும் அடியே நுனி, நுனியே அடியாகவும், மந்திரமே ஈரமாய், பதமே முடிவுகளாய், வர்ணமே தோலாய், புவனமே சுளையாய், தத்துவங்களே சுத்த தாதுக்களாய், அளவிலாத கலைகளே வடிவாய், இவ்வகை ஆறத்துவாக்களும் திருமேனியாகியதால், அந்தச் சிவானந்த விருட்சத்துக்கு வேர்தொடுத்து நுனிவரை எங்கும் பழமானதால் அந்த விருட்சத்துக்குப் பலாமரம் உவமை ஆயிற்று. ஆனுலும், அந்தச் சிவஞான போத விருட்சத்துக்கு வேறிடமில்லையாதலால் வேருமில்லை, முடிச்சுமில்லை; நடுவுமில்லை, பக்கமுமில்லை; ஓரளவுமில்லை; அநாதிமுதல் தொகை வகையிருந்தும் கணக்கு வழக்கில்லை; மரமுழுதும் ஒன்றே; ரசமுள; வயிரம்;(?) புறதோலில்லை; இளமையாயிருந்து முதுமை பெற்றதன்று. ரஸம் பழத்தில் மாத்திரமில்லை; இந்தச் சர்வ வியாபக இன்பத்துக்கு மூவகை அணு. தசவித அணுக்களாகிய பசுவர்க்கங்களெல்லாம் நால்வகைத் தோற்றம் எழுவகைப் பிறப்பில் எண்பத்துநான்கு லட்சம் யோனி பேதந்தோறும் அச்சுமாறித் திரிகின்றன. வண்டாதி பட்சி போலப் பக்குவப் புசிப்புக்குத் தக்கதாகத் திருப்திப்படும். இந்தத் திருமேனியான வேரிலே விட்ட சலம் சாகோபசாகையாகப் பரந்து கொழுமை பெற்று, அக்கொழுமையால் மேன்மேலும் வளரும். இந்தத் திருமேனியிற் செய்த உபசார பூசை சகல லோகமும் திருப்தியடையும். இப்படிப் பார்ப்பதும் பரப்பிரம சந்நிதியான ரசமாயிருந்த போதும் பிறர் புசிக்கிறதன்று. அப்படியிருந்தாலும் புசிப்பாகவும் புசிக்கிறவனுகவும் ரசமாகவும் இருக்கும்; அதுவாயிருந்தாலும் வேறன்று. வேருயிருந்தாலும் ஒன்றன்று. ஒன்றன்று என்ருல் உண்மையன்று; உண்மையாக இருந்தாலும் ஒருவனுக்கும் தோன்ருதன்று; தோன்றினதாயிருந்தாலும் வெளியன்று; வெளியன்ருயிருந்தாலும் எங்கும் பிரகாசப் பொருளாயிருக்கும்; பார் முழுதும் பரப்பிரும்ம சந்நிதியெனக்காண்க.

இவைக்குச் சுருதி :—

மூதல்மொழிக்குச் சொல்லிய பொருளநுபூதிக்கு எடுத்துக்காட்டலான வேதாகம உரையநுபூதியை இவைக்கு அநுபூதியாகக் காண்க. இப்போது சொன்ன நாதன்ருளான பரமகுருவே மானிடச் சட்டை போர்த்தி எழுந்தருளித் திருப்பெருந்துறையில் உபதேசித்த பெருங்கருணையை அன்பாலுருகி அகண்ட பரிபூரண அட்டமூர்த்த தாபர ஜங்கம குருலிங்கமுமியாவும் 'கண்டத்தைக் கொண்டு கரும முடிப்பவர் பிண்டத்தில் வாரார்' (திருவுந்தி : 3) எனவும், 'எட்டுக் கொண்டார் தமைத் தொட்டுக்கொண்டே நின்ருர், விட்டார் உலகம்' (திருவுந்தி : 24) எனவும், 'மூலேயிருந்தாரை மூற்றத்தே விட்டார், சாலப்பெரியர்' (திருவுந்தி : 12) எனவும் பரமகுரு திருவடியை நிணக்குந்தோறும் காணுந்தோறும் பின்னும் பின்னும் புதிதாய்த் திரும்பத் திரும்பத் தோத்திரம் செய்வதே சிவபுராண வாக்கியமாதலால் இவ்வடிமைத்திற அநுபூதியில் எல்லாமடங்கிற்று.

24-25. நின்பெருஞ்சீர்

பொல்லா வினேயேன் புகழுமா றென்றறியேன்

(எ - ன) இப்போது சொல்லிவந்த திருத்தொண்டின் உண்மையான சத்யபோத மெய்கண்ட திருப்புகழை உள்ள படி அதுவாய் நின்று திருவுள மகிழத் திருப்புகழ் ஓத ஒரு வகையும் தெரியாத, ஒப்புவமைக்கிடமில்லாத பாவியான வன் (எ - க).

இவைக்கு நுட்பமாவன :—பாவம் யாதெனின் அநாதியான திருவடியின்கண் அருமை பெருமை தெரியாது பிரிப்பின்றி மலவசமாய்க் கிடந்தும், பெருங்கருணையால் அப்பிரிவுற்றுப் பரிபாக கேவல சகலப்பட்டு வருவதில், பகுத்தறிவுடைய மானிடப் பிறப்பில் வந்தும், புறச்சமயம் புக்குழன்றும், சிவபுண்ணிய மூதிர்ச்சியால் உட்சமயம் வந்து, கேட்டல் சிந்தனே தெளிவு பிறக்குங் காலத்தில் இவ்வளவு வரையில் உபகரித்ததாயினும் நல்ல தயாவுடைய சிவனுக்கு

என்றும் அடிமையென அன்பாற் கருதி நிட்டை கூடாது பரமுக்தி வேறுளதென்று முயற்சிக்கும் பாவியானவன் (எ - க).

26-31. புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்
[எம்பெருமான்

(எ - ன) அண்டஜம், சுவேதஜம், உத்பிஜம், சராயுஜம் என்ற நால்வகைத் தோற்றத்திலும் உளவாகிய தாவரம், ஊர்வன, பறப்பன, விலங்கு, நீர்வாழ்வன, தேவர், மனிதர் இவ்வெழுவகைப் பிறப்பில் தாவரம் 19; ஊர்வன 15; பறவை 10; விலங்கு 10; நீர்வாழ்வன 10; தேவர் 11; மனிதர் 9; ஆக எண்பத்துநாலு லட்ச பேதமாம். ஒவ்வொரு யோனி பேதத்துக்கும் அளவில்லை; இப்பேதமான தனு (சரீரம்)க்களுக்குப் பேதம் கற்ப பேதந் தோறும் அளவைப் பிரமாணங்கள் வெவ்வேறாயிருக்கும். இப்பிறவியை உலகத்தார் உண்டென்பர்; இல்லென்பர். இல்லென்பானவனை நோக்கி, ‘இப்பிறவி உண்டு’ என அடியார் பொருட்டுத் திருவுளம் பற்றினதெனக் காண்க.

இவைக்குச் சுருதி :—

வேதத்தில்,

உரைச்சேரு மெண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனிபேத
நிரைச்சேரப் படைத்த வற்றினுயிர்க்குயிரா யங்கங்கே
[நின்றான்கொல்

(திருஞான. 1 : 132 : 4)

என்பதைக் காண்க.

இனி,

32. மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்

(எ-ன) முற்பத விநியோகத்தில் எனைப் பல யோனியின் வினைப் பெரும் பேதத்துள் அலைந்து வரும்போது, "எம்பெருமானான நாதனே! உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடுற்றேன்" என்றது, "தேவரீருடைய இரண்மய கோச, நின்மல, அமல திருவம்பலத்திலே பேரானந்தமான பரதத்துவ நடன பொற்பாத கமலங்களைத் தரிசித்தவுடன், இத்தேகத்திலே தானே சீவன் முத்த தசையே பரமுக்தியாக அடைந்தேன்; மெய்யே—இவை சத்தியமே' என அருளியது.

இவைக்கு,

வேதத்தில்,

'இம்மையே தரும்'

(சுந்த. 7 : 34 : 1)

என்றும்,

'இம்மை நின்றனை யென்னெஞ்சத் தெழுதிவை'

என்றும்,

ஆகமத்தில்,

'பிறப்பை வணங்குவாம்'

என்றும்,

புராணத்தில்,

,நடங்கண்டனை'

என்றும்,

சாத்திரத்தில்,

'மெய்யே கண்டு கொண்டிருப்பர்'

என்றும்,

'அம்மையு மிம்மையேயாம்'

(திருவருட் : 10 : 9)

என்றும் வருவன அநுபூதி காண்க.

இனி,

33-34. உய்யவென் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா ![1]

(எ - ன) அடியேன் திருவடி ஞானம் பெற்றுய்யும்படி எனது உளத்தில் அகார உகார மகார நாத விந்துவாய் நின்றது இறை சத்தி பாசம் எழில் மாயை ஆவியுற நிற்கும் ஓங்காரத்து உள் பொருளாய் விளங்கிய சத்திய சொரூப னென அருளியது (எ - க).

இவைக்கு அனுபவ சுருதி, "ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகனுருவங் கண்டு தூங்கார்" என்றதைக் காண்க. இவையும் அஞ்செழுத்துண்மை.

34. விமலா !

(எ - ன) மல ரகிதமான நின்மல அமல சுக சொருபன் எனக் காண்க.

34. விடைப்பாகா !

(எ - ன) புண்ணிய சொரூபமான இடபத்திலெழுந் தருளலாவது, புண்ணிய பலனுன சொரூப சிவன் (எ - க).

இவைக்கு, வேதத்தில் 'விடையேறி' என்ற பதவுரை யநுபூதி முதல் மொழிக்கு எடுத்துக் காட்டியது (பக். 49) (எ - க).

34-35. வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற
[நுண்ணியனே !

(எ - ன) அநேகம் வேதங்கள் அநேக கோடி காலம், 'என் நாதனே !' என ஓலமிட்டும் அவைக் கெட்டாது ஓங்கி அகன்று சருவ வியாபகமாகி நுட்பப் பொருளானது எனக் காண்க.

---

1. மெய்யே என்பது எட்டிலுள்ளது.

இவைக்குச் சுருதி :—

வேதத்தில்,

'விரும்புநால் வேதத்தாலு வறிவொண்ணு'

என்றும்,

ஆகமத்தில்,

'அருமறைச் சிரத்தின் மேலாம்'

என்றும்,

புராணத்தில்,

'மறைகள் காணு'

என்றும்,

சாத்திரத்தில்,

'மறைகட் கெட்டா'

என்றும்,

'சோலமறை தேடி நெஞ்சுங் கூப்பிட்டுங் காணுத'

என்றும் வருவனவற்ருற் காண்க.

'ஆரறிவாரந்த வகலமு நீளமுமென்ற' சிவாகமக் காட்சியாலும் அநுபூதி பெறத் தக்கது.

36. [1]வெய்யாய்! தணியாய்! இயமான ஞும்விமலா!

(எ - ன) உலகத்தை இரட்சிக்கும் பொருட்டாகச் சூரிய கிரணமாய், சந்திரகலையாய் இவை உபகரணப் பேருன உயிராயும், அவையொடும் பொருந்தாத நிட்களப் பொருளெனக் காண்க.

---

1. வெய்யாய் - வெம்மையுடையோனே; விந்து தத்துவத்தின் வாயிலாய்த் தீயின் கண் முளைத்துத் தோன்றும் இறைவனியல்பு வெப்பம் உடைத்தாகலின் இங்ஙனம் கூறினர்.

தணியாய் - குளிர்ச்சியுடையவனே, நாததத்துவத்தின் வாயிலாய் நீரின் கண் முளைத்துத் தோன்றும் சிவசத்தியின் இயல்பு தட்பம் உடையதாயிருத்தலின் இங்ஙனம் அருளினர்.

இயமானன் ஆம் விமலா - வேள்விவேட்போன் உள்விளங்கும் தூயானே.

(மறைமலை : பக். 46)

இயமானன் - யஜமானன் என்ற வடசொல்லின் திரிபு.

37-38. பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே !

(எ - ன) முற்பத நிட்களப் பொருளே சகளமான பரம குருவாய் எழுந்தருளி, நாதன் தாளை மறந்த யான் எனது என்னும் அவிச்சை முதலான மல காரிய சத்திகளெல்லாம் என்னை விட்டு நீங்கி, அறம், புகழ், கேள்வி, ஞானம் விளங்கும் திருவருட் பூமியினிடமாக வாராது வந்து உணர்வரிய சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானமான பொருளை எனக்கேற்பவளித்து அடியேனுளத்திற் பிரகாசிக்கும் உண்மை மெய்ஞ்ஞானச் சுடரே! என அருளியதைக் காண்க.

சாத்திரத்தில்,

'எங்கும் சிவமொழிய வில்லை யவன் றன்னுணை
அங்கந் திரள்கருவி யாணவமாம்—பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றுமெல்லரம்
பொய் பொய் பொய்.

(சிவானந்தமாலை 372)

என்றதைக் காண்க.

39. எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே !

(எ - ன) ஓரறிவுமில்லாத அடியேனிடத்துள் இன்பப் பெருமானென எழுந்தருளிய சுவாமி! என்றருளியதைக் காண்க.

40. அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே !

(எ - ன) அநாதி தொட்டு வராநின்ற கேவலாதீத சூட்சும மலத்தைத் திருவடியில் அடக்கி என்னைச் சிவஞான சொரூப சிவமாக அடிமையாக்கிய ஞானப் பொருளே! என அருளியதைக் காண்க.

41-42. ஆக்கம் அளவிறுதி யில்லா அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்

(எ - ன) தேவரீர் திருவருட் பாக்கியச் செல்வத்துக்கு உற்பத்தி நாசமில்லாத நாதன் என் பொருட்டு உலகெலாம்

உய்யச் சுத்த பஞ்ச கிருத்தியம் செய்யத் திருவருளை யளிப்ப தான சுவாமி! (எ-க).

43. போக்குவாய் என்னைப் புகுவிப்பாய்
[நின்றொழும்பின்

(எ-ன) அடியேனுடைய பசு பாசக்குணத்தைப் போக்கித் தேவரீருடைய திருவடிப் பணிக்கு அடிமையாகச் செய்யும் நாதனே (எ-க).

44. நாற்றத்தின் நேரியாய்! சேயாய்! நணியானே!

(எ-ன) உண்மையடியார்கட்குப் பூவினிற் கந்தம் பொருந்தியவாறுபோல் சீவனுக்குள்ளே சிவமணம் பொலிந் தவனது திருவுளப்பணியில்லாத உயிர்கட்குத் திருவடி தூரமாயும், அடிமைகட்கு முன்போலச் சமீபமாயும் இருப் பதே நாதன் தன்மை (எ-க).

45. மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே!

(எ-ன) மனத்தகத்து அழுக்கறுத்து எனது உளத் திற்கு உருவாகிய மனமணிப் பொருளானவனே (எ-க).

46-48. கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமானே!

(எ-ன) கரும்பை, தேனை, பாலை, கனியமுதை, கண்டை, கட்டியை அளவளாவின அதிகச் சுவை போலச் சிவஞானச் சிறப்புண்மை அடியாருளத்தின்கண் இன்பப் பெருக்காக, அதுவாய் நின்றெழுந்தருளி அவர்கள் பிறவித் துன்பத் தைப் பேரின்பமாகச் செய்யும் பெருமையுடையவனே! (எ-க).

வேதத்தில், "இனியனெந்தை யிடைமருதீசன்," என்ற சுருதிப் பயன் பெறுக. "அகமகிழ வருந்தேனை முக் கனியைக் கற்கண்டை யமிர்தைச் சீனியை நிர்மல நிராலம்ப கோசத்துரிய வாழ்வை மொகுமொகென விருவிழி நீர்முத் திறைப்பதென" அருளிய செல்வப் பாவையும் காண்க.

49-50. நிறங்களோர் ஐந்துடையாய் ! விண்ணோர்கள் [ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் !

(எ - ன) ஐந்து நிறமான திருவருள் விலாசத்துடனே, சுவாமி! எல்லாத் தேவர்களும் திருவுளப் பணிசெய்து தோத்திரம் செய்ய, அத்தேவர்கட்கும் பரம்பொருளென்று அவர்களுளத்தில் விளங்காது, கர்த்தாவான மகாதேவராக எழுந்தருளியிராநின்ற எம்பெருமானுன பெரிய பெருமான் (எ - க).

நுட்பமாவன :—

நிறமாவன :—ஈசானம் முதல் சத்தியோசாதம் வரை படிகம், பொன், கருமை, செம்மை, வெண்மை. இவை நின்றபடி நின்றவர்கட்கன்றி நிறந்தெரியா மன்றுள் நின்று ஆடல் மகிழ்ந்த பொருள் (எ - க).

"சிவனை வழிபட்டா ரெண்ணில் தேவர்
அவனை வழிபட்டங் காமா றென்றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபட்டாற் கூடலு மாமே"

(திருமந்திரம் 2119)

என்ற சிவாகமக் காட்சி காண்க.

50-58. வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி

(எ - ன) மகா கேவலம் முதல் ஒருவராலும் நீக்கப்படாத மலவசத்தனை அவை நீங்க எனது உண்மைப் போதத்தை அடியேற்குத் தெரியாது தமோமயமாய் அழுத்திவிக்கும் நித்திய கேவல இருட்டை இருவினைத் துடக்காற் பூட்டி, தோற் போர்வையால் மலம், புழு, அழுக்குச் சொரியும் நவத்துவாரத் துச்சிலை மறு வழி செல்லாது பஞ்ச இந்திரிய வேடர்கள் மெய்யறிவைக் கொள்ளை கொண்டு நிற்கும் காலம், சஞ்சலத் தளையிட்ட மனத்தினுல், நிட்களப் பொருளான தேவரீர் திருவடியில் அபேதமாகக் கலந்து உருகி அன்படிமை உரிமை நலம் திலமளவும் பணி செய்யத் தெரியாத பாவியான அடியேற்குச் சிவஞான போதமான உபதேசம் அருளிய நாதனே (எ - க).

59. *நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி*

(எ - ன) முற்பத நிட்கள சிவன் சகளீகரித்துத் திருப்பெருந்துறையிலே பரமகுருவாய் எழுந்தருளி ஒருவர்க்கும் எண்ணுதற்கரிய குஞ்சிதபாதத்தை அடியேற்கு அளித்த சீரும் திருவும் பொலியச் சிவலோகநாயகன் சேவடிக்கீழ் யாரும் பெறுத அறிவு பெற்றேன். "பெற்றதார் பெறுவாரார்?" என்ற வேதச் சுருதியைக் காண்க.

60-61. *நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்*
*தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!*

(எ - ன) இழிந்த சென்ம—நாயினும் இழிந்த—செய்ந் நன்றி மறக்கும் அடியேனைத் தாயினும் நல்ல தயாவுடையனுகக் கருணை வைத்து இரட்சித்த தத்துவ சொரூப நாதனே! என அருளிற்று.

தாயினேரிரங்கும் கருணையாவன :—

தாயினுரு சிவனது உபகாரமாவதை முன் சொல்வன்.

சிவசக்திப் பிரேரகத்தாலே சந்திரனிடத்துண்டான அமிர்த சாரங்கள் எல்லாம் நிறையப் பூமியிலுண்டான ஓஷதிகளிடத்துத் தங்கி, தானியங்களாய், ஒவ்வொரு

தானம் ஒவ்வொரு பாத்திரத்தில் அப்பு தேயு வாயுவினல் பாகப்பட்டுப் பசி அவாவினல் புசிக்க, புசித்த அன்ன சாரம் உடலில் தங்கிக் கரண மோகத்தால் சுக்கிலமாய்த் திரி விந்துவாகிய பக்குவகால சுரோணிதத்திற் பாய்ந்து கலந்து கர்ப்பமாய்த் திரண்டு ஒன்ருகி நாடோறும் வரவர வலுத்து, விதிப்படி திங்கள் தோறும் கன்மத்துக்குத் தக்க முப்பத்திரண்டு உறுப்பும் உண்டாகிப் பத்து மாதத்திலும் புழுக்கள் மாதுரு வாயு ரோகங்கள் முதலான பல உபாதி கட்கும் அவ்விடத்துத் துணையாயிருந்து காத்தும். பின் யோக ஞானம் உறுவித்துக் கருப்பம் விட்டு மிகவும் உயர்ந்த மலையிலிருந்து தவறி விழுதல் போலவும், ஆழ்ந்த வெள்ளச் சுழிக்குள் அகப்பட்டு அழுந்துதல் போலவும், பிரசண்ட வாயுவினல் ஆகாசத்திற் சுழல்வது போலவும், இருப்புக் கருப்பாலை அரைத்தல் போலவும், பசுமட் குடத்தி லிருந்த பலாப்பழம் குடமுடையாது பழம் சேதப்படாது வெளிப்படல் போலவும் வெளிப்படுங் காலத்துத் தாயும் மிகவும் உயிர் தவருது காத்தும், பின்வரும் பருவந்தோறும் ஆண்டுகள் தோறும் குழந்தைப் பிணிகள், பூதப் பிரேதப் பசாசு தோடங்கள், மேடு பள்ளம் ஜலம் காற்று முதலான உபாதிகள், சத்துரு சோரர் பட்சி பாம்பு தேள் நண்டுத் தெறுக்கால் முதலான (ஜந்து) உபாதிகள், நாய் நரி முத லான மிருக உபாதிகள், இராட்சச, கண, தேவ உபாதிகள், வாத பித்த சிலேட்டும குன்ம குட்டம் முதலான உட்பிணி புறப்பிணிகள், சல முதலான போகம், பொசிக்கை, நித் திரை, யாத்திரை, நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட் டான உபாதிகளும், இருபத்தெட்டுக் கோடி நரகமும், பாவ பேதங்கள் முழுதும் ஒரு வடிவாய் வரும். பெண் ணாசையான காம உபாதியும், மாட மாளிகை வாவி கூபா சய சோலை முதலான இடவாசையும், நெல் பொன்மணி துகில் ஆபரண ஆசையும், களப வாசன திரவிய ஆசையும், பால் நெய் தயிர் கற்கண்டு முதலான ரசவர்க்க பல பாக ருசி பேத ஆசையும், கட்டில் முதலான மஞ்ச சயன ஆசை யும், குதிரை யானை தேர் சிவிகை முதலான வாகன ஆசை யும், மன வாக்குக் காயத்தால் வரும் மத மோக லோபக்

குரோத காம மாச்சரியமும், முக்குண வசத்தால் பேதமும் நினைப்பும் மறப்பும் மயக்கமும் ஆகிய உபாதிகளும், அட்டாங்க யோகம் அட்டமா சித்தி விரத வுபாசனை சரியை கிரியா யோகங்களை விரும்பும்போது தடையான உபாதியும், தன்னுற் பிறராற் சுயசனத்தால், தெய்வீக பூத பௌதிகத்தால், தெய்வத்தால், ஊழால், வரும் உபாதிக்கும் அநேக கோடி பாம்பு தேள் நண்டுத்தெறுக்கால், வாள், வில், அக்கினி முதலான உபத்திரவம் ஒருமித்து வந்தன போலத் தேகத்தை விட்டு நீங்குங் காலத்துண்டான மரண உபாதி படுதற் கேதுவான முதல் தேகத்தோடு பொருந்தும் உயிர்கள் உபாதியைத் தாய் போலவே நின்று தீர்க்கும் அவளினும் சிறந்த தயாவான நாதன் எனக் காண்க.

இதற்கு வேதத்தில் 'தாயறியாக் கருவிலிருந்தமுதூட்டும்' என்ற அநுபூதி காண்க.

62. மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!

(எ - ன) மாசற்ற சோதி - குற்றமற்ற குருமணியே! ஆதி நடு அந்தமிலா ஓங்கொளியான பசுவர்க்க பதிவர்க்க சத்தி வர்க்க சோதிக்கு மேலான நிக்கிரக அநுக்கிரக குஞ்சித பாத சோதி (எ - க).

மலர்ந்த மலர்ச் சுடரே - முற்பதச் சோதியால் அளவுபடாத நின்மலச் சோதியானலும் சருவவியாபகமாகக் கண்டு வழிபடும் அடியாருள்ளத்தில் வியாபகமாக இன்பருளும் நாதச் சோதியே (எ - க).

63. தேசனே! தேனு ரமுதே! சிவபுரனே!

(எ - ன) தேசனே - எங்கும் எவ்விடத்தும் விட்டு விளங்கும் இன்ப வொளியான நாதனே! (எ - க).

தேனுரமுதே - திருவடியின்பத் தேனான ஞானவமிர்த நாதனே! (எ - க).

சிவபுரனே - சீவன் முத்த தசையே பரமுத்தமாக அநுபூதி பெறும் அடியார் உள்ளமே சிவபுரமாகக் கொண்ட நாதனே! (எ - க).

**64. பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே !**

(எ - ன) '*மற்றுப் பற்றெனக் கின்றி,*' (சுந்தரர் : **7 : 48 : 1**) பற்றற்ருன் பற்றினையடியேன் பற்றத் திருவடி ஞான நோக்கஞ் செய்த சுவாமி ! (எ - க).

**65-66. நேசவருள் புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே !**

(எ - ன) ஞாதுரு ஞான ஞேயங் கடந்த பேரின்ப சுகம் அடியேற்கருளி எனதுண்மை மல போதங் கெட, எனது உளத்திற் பிரிவில்லாத பெரிய கருணை வெள்ளமே! (எ - க).

**67. ஆரா வமுதே! அளவிலாப் பெம்மானே !**

(எ - ன) ஆராவமுதே-தேவரீர் திருவடி ஞானம் இன்பம் போசிக்கப் போசிக்கத் தெவிட்டாத அமிர்த நாதா! (எ - க).

அளவிலாப் பெம்மானே ! - ஆன்ம சிற்சத்திப் பிரமாண அளவைக் கெட்டாத பெரிய பெருமான் ! (எ - க).

**68. ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே !**

(எ - ன) திருவடி ஞானமான உண்மையடிமை இன்பச் சிவாநுபூதி சற்குரு உபதேசத்தால் அறியாதார் உளத்திலே பரிபாகம் வருமளவும் அவர்கள் கண்ட காட்சியாக விளங்கும் நாதனே ! (எ - க).

**69. நீரா யுருக்கியென் ஆருயிராய் நின்ருனே !**

(எ - ன) எனது மலபோதத்தைத் திருவருளால் சலமாக உருகச்செய்து வந்த மலபோத உண்மையனை நானும் அவையோடு கெடாமல் '*அன்பின் வழியது உயிர்நிலை*' யாக நின்ற நாதனே ! (எ - க).

**70. இன்பமும் துன்பமும் இல்லானே ! உள்ளானே !**

(எ - ன) அநாதியே என்னுடனிருந்தும் இன்பக் கனமேயாகித் துன்பமில்லாத நாதனே ! என எதிர்நிரனிரையாகக் காண்க.

**71-72. அன்பருக் கன்பனே! யாவையுமாய் அல்லையு மாம் சோதியனே!**

(எ-ன) அன்பருக் கன்பனே - உள்ளபடி திருவடி ஞானம்பெற்று 'அன்பே யென்னன்பே' என அழுதாற் றும் பெரிய அன்புடையவர் குணநாதன் முதலியோர்கட்கு 'அன்பே சிவமாய்' (திருமந். 270) அமர்ந்திருப்பதான நாதனே!' எனக் காண்க. இவ்வன்பின் விலாசம் முதல் மொழிப்பத நுட்பத்துக்கு எடுத்துக் காட்டலான திருத் தொண்டத்தொகை உரை அநுபூதியிற் காண்க. (பக். 151-154).

யாவையுமா யல்லையுமாஞ் சோதியனே!-பிரபஞ்ச பேத மெல்லாம் தானுய்த் தோன்றி இவையெல்லாம் அல்லவாகி நின்ற அறிவினுள் விளங்கும் ஞானவொளியே! (எ-க).

**72. துன்னிருளே!**

(எ-ன) அநாதியே யென்னை விட்டு நீங்காத மகா கேவல இருள் சடமாதலால் அவை பிரேரிக்குங் கடவுள் தான் நாதனே யாதலால் அவையும் இடமாகவுடைய உடைப்பொருளே! எனக் காண்க. அவைக்கு, "வேந்த னடி" என்ற வாக்கிய உரையநுபூதியில் ஒளிக்கும் இருட் கும் ஒன்றே இடமென்ற அநுபூதி காண்க. (பக். 236).

**72. தோன்றாப் பெருமையனே!**

(எ-ன) உள்ளபடி திருவடி ஞான உண்மை தெரியா தார்க்கு நலமிலாதானும் நண்ணினர்க்கு உள்ளபடி பிரத் யக்ஷப் பொருளான பெருமையுடையவனுமான நாதனே! (எ-க).

**73. ஆதியனே! அந்தம் நடுவாகி அல்லானே!**

(எ-ன) எல்லாப் பொருட்குமநாதிப் பொருளே! அவைக்கு அந்தமான பொருளே! இவை இரண்டுக்கும் நடுவாகிய கடவுளே! இவ்வகையான ஆதிநடு அந்தமிலாத அளவில்லாத கருணை (எ-க).

**74. ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே!**

(எ - ன) அநாதியே மலவசமாய்க் கிடந்த என்னைக் கருணையால் இரங்கி என் வழி விடாது தன் வழி வலிய இழுத்து உள்ளே விளக்கி வெளியிலும் எழுந்தருளி அடிமை கொண்ட ஆண்டவனாகிய என் தகப்பனான பெரிய பெருமான் (எ - க).

இவைக்குச் சிவாகமக் காட்சியாவன :—

மாசிலா மரபின் வந்த
வள்ளல்வே தியனை நோக்கி
நேசமுன் கிடந்த சிந்தை
நெகிழ்ச்சியாற் சிரிப்பு நீங்கி
ஆசிலந் தணர்கள் வேறோ
ரந்தணர்க் கடிமை யாதல்
பேசவென் றுன்னைக் கேட்டோம்
பித்தனோ மறையோ னென்றார்

(பெரியபு. தடுத்தாட். 40)

இவை அகத்தடிமை யுறுதி பயப்பதைக் காண்க.

முதல்மொழி அநுபூதிக்கு அடிமைத் திறத்துக்காக 'பிந்நா' என்ற வேதப் பொருளநுபூதியினுங் (பக். 82) காண்க.

**75-76. கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின், நோக்கரிய நோக்கே!**

(எ - ன) மந்தம், மந்ததரம், தீவ்ரம், தீவ்ரதரமான பரிபக்குவ சத்திநிபாதத் தன்மைக்குத் திட்டாந்தரமாக்க அரம்பைக்காட்டம் (வாழைத்தண்டு) உலர்காட்டம் (விறகு); கரி, பஞ்சு; சுட்டபஞ்சு, அணில்மயிர்; இரும்பின்பாவை, மண்பாவை; அரக்குப்பாவை, வெண்ணெய்ப்பாவை. இவைகள் கடந்த கூர்த்தமாகிய சிவஞானவுண்மை யடிமை யநுபூதியாற் கண்ட அடியாருடைய கண்ணுக் கெளிதாகச் சகளீகரித் தெழுந்தருளி கண்கள் தம்மால் பெறும் பயனான

கடாட்சமுள்ள நாதனெனக் காண்க. 'உணர்ந்தார்க் குணர்வரியேன்' என்ற வேதச் சுருதிப் பயன் (எ - க).

76. நுணுக்கரிய நுண்ணுணர்வே!

(எ - ன) முற்பத விநியோகப்படி மலையிலக்காய் அநுபூதி பெறாத நுட்பத்துக்கு நுட்பமாய், அகல விஞ்ஞான யூகமுடைய வேறு அடியார்கட்கும் ஊசிக்கண்ணில் ஆகாசந்தோன்றல்போல் அரிதாகவே இருக்கும் (எ - க).

77. போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே!

(எ - ன) என்னைப் போல அச்சு மாறிப் புவன போக வரவும் அவையிற் பிரதிபந்தப்படாதமையுமுடைய புண்ணிய சொரூபநாதன் எனக் காண்க. 'நின்மலனீதுன்மலனுன' என்ற சாத்திர நுட்பங் காண்க.

78. காக்குமெங் காவலனே!

(எ - ன) எனதுயிரை மலவசத்தாக்காது அருள் வழி செலுத்தும் எனது ஆன்ம நாதனே! (எ - க).

காண்பரிய பேரொளியே!

(எ - ன) திருவடி ஞானமில்லாதார் காணுதற்கு எட்டாத சருவ வியாபகப் பிரகாச நாதனே! (எ - க).

79. ஆற்றின்ப வெள்ளமே!

(எ - ன) கருணை வழியொழுகும் அடியார்கட்கு இன்பம் அருளும் நாதனே! (எ - க).

அத்தா!

(எ - ன) 'அப்பனீ அம்மைநீ' (திருநாவுக் : 6 : 95 : 1) என்ற உண்மை காண்க.

மிக்காய்!

(எ - ன) எல்லாவற்றிற்கும் மேற்பட்ட நிலைமையுடைய நாதனே! (எ - க).

**79-80.** *நின்ற,*
*தோற்றச் சுடரொளியாய்!*

(எ - ன) சிவனடியார்கட்கு உணர்வு நேர்பெற, எழுந்தருளிய சுடர்க்கொழுந்தான நாதனே! (எ - க).

**சொல்லாத நுண்ணுணர்வாய்!**

(எ - ன) வாக்கிறந்த வாச்சியநாதன் எனக் காண்க. 'வாய் திறப்பதில்லை; சும்மாவிரு' என்ற பயன் காண்க.

**81. மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்து**

(எ - ன) இந்த ஞான பூமியிலே அந்த அந்த பரிபாகத்திற்குத் தக்க வேறு வேறு திருமேனி கொண்டு மூன்றிடத்தும் எழுந்தருளி, (எ - க).

**81-82.** *அறிவாம்,*
*தேற்றனே!*

(எ - ன) என் வெவ்வேறு அறிவிலே அறிவான தெருட்சிப் பொருளான நாதனே! (எ - க).

**82. தேற்றத் தெளிவே!**

(எ - ன) முற்பதத் தெருட்சியில் தெளிவாகிய நாதனே! (எ- க).

**82-83. என் சிந்தையுள்,**
**ஊற்றான உண்ணா ரமுதே!**

(எ - ன) எனது உளத்தில் சிவஞான ஊற்றானும் பிறராற் புசிக்கப்படாத அமிர்தமே! (எ - க).

**83. உடையானே!**

(எ - ன) அநாதி சிவனுடைமையாதலால் உடைப்பொருள் நாதனே! (எ - க).

84-85. வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேன்

(எ - ன) திருவடி ஞான மில்லாத பிரதிபந்த விடக் கூட்டினுள் காராக்கிரக் கலியும் துன்பமும் இனிப் பொறுக்ககில்லேன் (எ - க).

85-88. எம் மையா! அரனேஓ! என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு
[மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே!

(எ - ன) 'அப்பனீ அம்மைநீ ஐயனுநீ' (திருநாவுக்:6:95:1) என இடைவிடாது திருநாமத் திருப்புகழோதித் தேக பாசம் நீக்கித் திருவடி சாரும் அடியார்கட்கு இருவினைத் தொடக்கறுத்து மாயா தேகக் கட்டை அழித்து அருள் செய்யும் நாதனே! (எ - க).

89. நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே!

(எ - ன) மகா கேவலத்துள்ளிருந்து சூட்சும நடஞ் செய்யும் நாதனே ' (எ - க(.

90. தில்லையுட் கூத்தனே!

(எ - ன) ஆரண உருவாம் தில்லையிலே சகள நிர்த்தம் செய்யும் சுவாமியே! (எ - க).

தென்பாண்டி நாட்டானே!

(எ -ன) தக்ஷிண திருப்பாண்டிய தேசத்து இராசனே! (எ - க).

91. அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று

(எ - ன) என் துன்பப் பிறவி யறுக்குமோ? நாதனே! என ஓலமிட்டு, துதிப்பதே (எ - க).

92. சொல்லற் கரியானைச் சொல்லி,

(எ - ன) கூவும் தொழிற்கெட்டாத நாதனைத் துதித்து (எ - க).

திருவடிக்கீழ்,

(எ - ன) சர்வ வியாபக சத்தி மெய்கண்ட குஞ்சித பாதத்தின் கீழ் வியாப்பிய அபேத அத்துவித அடிமை யான நிட்டை கூடாமற்கூடி (எ - க).

93. சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லு வார்

(எ - ன) இப்போது அருளிய மகாவாக்கியப் பொருளை ஐயமின்றித் திருவருளால் துதிப்பவர்கள் (எ - க).

94. செல்வர் சிவபுரத்தி னுள்ளார்

(எ - ன) இம்மையே சீவன் முத்தராய் சஞ்சரிப்பார்கள் (எ - க).

94-95. சிவனடிக் கீழ்ப்,
பல்லோரு மேத்தப் பணிந்து.

(எ - ன) சஞ்சரிப்பவர்களான சீவன் முத்தர்கள் குஞ் சிதபாதத்தின்கீழ்ப் பரமுத்தர்களாய் இப்போதே யாவரும் தொழச் சிவானுபூதி பெற்றிருப்பார்கள் (எ - க).

பசுகரணமே சிவகரணமாகிய சிவபுராணம் முற்றிற்று.

---

## 2. கீர்த்தித் திருவகவல்

(தில்லையில் அருளியது)

சிவனுடைய அருளின் முறைமை

(நிலைமண்டில ஆசிரியப்பா)

திருச்சிற்றம்பலம்

*தில்லை மூதூ ராடிய திருவடி*
*பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி*
*எண்ணில் பல்குண மெழில்பெற விளங்கி*
*மண்ணும் விண்ணும் வானோ ருலகும்*
*துன்னிய கல்வி தோற்றியு மழித்தும்*
*என்னுடை யிருளை யேறத் துரந்தும்*
*அடியா ருள்ளத் தன்புமீ தூரக்*
*குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்*
*மன்னு மாமலை மகேந்திர மதனிற்*
*சொன்ன ஆகமந் தோற்றுவித் தருளியும்*
*கல்லா டத்துக் கலந்தினி தருளி*
*நல்லா ளோடு நயப்புற வெய்தியும்*
*பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்*
*எஞ்சா தீண்டு மின்னருள் விளைத்தும்*
*கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்*
*விராவு கொங்கை நற்றடம் படிந்தும்*
*கேவேட ராகிக் கெளிறது படுத்து*
*மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்*
*மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்*
*துற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்*
*நந்தம் பாடியி னான்மறை யோனாய்*
*அந்தமி லாரிய னாயமர்ந் தருளியும்*
*வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்*
*நூறுநூ றாயிர மியல்பின தாகி*
*ஏறுடை யீசனிப் புவனியை உய்யக்*
*கூறுடை மங்கையுந் தானும்வந் தருளிக்*
*குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்*

சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்
தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்
மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்
றீண்டு கனக மிசையப் பெறாஅ
தாண்டா னெங்கோ னருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
*இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்
ஆங்கது தன்னி லடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்
பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனில்

*இந்திர சாலம் இந்திர ஞாலமெனத் திரிந்தது.

குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய அதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்
மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்
ஓரி யூரி னுகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
பாண்டூர் தன்னி லீண்ட இருந்தும்
தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனி லீண்ட விருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்
ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்
சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னி லிடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையி லெழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும்
துருத்தி தன்னி லிருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்பய மதனி லறம்பல அருளியும்
குற்றா லத்துக் குறியா யிருந்தும்
அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்

டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்
தானே யாகிய தயாபர னெம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுட்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை அருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை யொருங்குட னறுக்கும்
ஆனந் தம்மே யாறா அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்
மூல மாகிய மும்மல மறுக்கும்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்
ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை யருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்

அப்பரி சதனு லாண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறு மடியவர்
ஒன்ற வொன்ற உடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதா ரெரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாத மெய்தினர் பாத மெய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை யம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவ னீண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.

திருச்சிற்றம்பலம்

---

உ

## இரண்டாவது

# கீர்த்தித் திருவகவல்

கீர்த்தித் திருவகவலான திருவருள் விநியோகம் அருளிச் செய்யப் புகுகின்றதாவன: இத்திருப்பா நிலமண்டிலமாக, சகல தத்துவ நடுவெளியான தில்லைத் திருச்சிற்றம்பலத்துள் ஆடும் திருவடியைத் துதித்ததெனக் காண்க.

முன் சொன்ன சிவபுராணத்தில் அநாதி முறைமையான நிட்கள சொரூப வியாபக சிவஞான போதப் பன்னிரண்டு சூத்திரக் கருத்தின் பழைமையை அருளி, இப்பாவில், சகள மயமாய் உலகின்கண் எழுந்தருளிய தடத்த தரிசன முறைமை அனுக்கிரகம் அருளியது. அவையாவன:—

அகத்திய சூத்திர மூர்த்தமாவன:—"சிவனுடைய அருளின் முறைமை"

இதன் பொழிப்புரைக் கருத்தநுபூதி.

தடத்தமாவது:—சுத்தான்மாக்களுக்குப் புலப்படுத்தல் தடத்தமே; அவையே, நிட்கள சொரூபம். எப்படி யென்னில், உருகின நெய் உறைந்தால், கூடின குணமாமே; அது நெய்யன்றி வேறல்லவே! சுத்த பரசிவமே வடிவெடுத்தால் மாயை காரணமல்லவே! மாயை காரணமானால், திருவுரு காரியமாமே! ஆகையால், மாயா வடிவன்று; அநாதியாகிய பரையே அநுக்கிரக வடிவுகளாகப் பக்குவ ஆன்மாக்களுக்குத் தக்கபடி குருவடிவாய் எழுந்தருளி, மற்றொன்றைச் சொல்லாது தற்சொரூபமாகிய சிவப் பேறான சிவாநந்த உண்மையை அநுக்ரக முறைமைகளாகப் பல பிரகார விரிவாய்ச் சொல்லும்போது, சொரூ

---

இது தில்லையிலே அருளப்பெற்றது.' (திருவாதவூரர்புராணம்: திருவம்பலச் சருக்கம்: 62.)

பமே நாம் என்பது தோன்ற, அநுபவப்பட, பெருங்கருணை யைத் துதிக்கும்போது, 'எவ்வுரு எடுத்து, எவ்விடத்து, எவ்வான் மாக்களுக்கு அநுக்கிரகம் பண்ணினதெனச் சுவாநுபவப்படும்படி சுருதி குரு வாக்குடன் கூறியதெனக் காண்க.

1. தில்லை மூதா ராடிய திருவடி

(எ - ன) முன் சொன்ன நாதன்ருளான பரம்பொருளுக்கே பெயர் திருவடி. அத்திருவடியானது [1]மூவகை யான்மாக் களுக்கும் உணரும் முறைமைகளாக, குணங்களாக, விளங் கியதெனக் காண்க. இறைவரல்லாத குணங்களின்றே என்றமை காண்க.

2. பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆகி,

(எ - ன) முன் சொன்ன ஆன்மாக்களுக்கு ஆதார மான இடமாகிய நாதன்ருளே பசுவுக்கிடமான பதி (எ - க).

3. எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி

(எ - ன) ஆன்மாக்களை இரக்ஷிக்கும் பொருட்டு [2]மூன்று மாயா புவனங்களிலும் அளவிடப்படாத சக்தி சிவ சொரூப [3]சாட்குணியப் பேரழகாய்க் கண்ணை விட்டு நீங்காத காட் சிப் பொருளெனக் காண்க.

---

2. பயின்றனன் - உறைந்தவன். இடைவிடாது ஆடுவானுகி; இவ்வடியின் பொருள் 'எல்லா உயிர்களிடமும் அவனே நின்று பஞ்ச கிருத்தியம் செய்கின்ருன்' என்பதாகும்.

---

1. விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்.

2. மூன்று மாயா புவனங்கள்: சுத்தமாயை, அசுத்தமாயை, பிர க்ருதி மாயை.

3. சாட்குணியம் - ஆறுகுணம்.

4-5. மண்ணும் விண்ணும் வானோ ருலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்

(என்) ஆறத்துவாவிற் கட்டுப்பட்ட எல்லா உயிர்கட்கும் [1]பிரேரககரண வாக்கானது திடமாக எல்லாத் துணைக் கருவித் தத்துவத்தோற்ற ஒடுக்கப் பஞ்ச கிருத்தியம் செய்த திருவடி (எ - க).

6. என்னுடை யிருளை ஏறத் துரந்தும்

(என) அநாதியாய் என்னை விட்டு நீங்காத மலபோத இருளை அகல்விக்கும் நாதன்றுளே (எ - க).

7-8. அடியா ருள்ளத் தன்பு மீதூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்

(என) சிவனடியார் உள்ளத்தின்கண் அன்பு மேன் மேலும் பெருகக் கலந்தபின் பிரிவில்லாது குடியாக அடி

---

4-5. 'மண்ணும் விண்ணும் வானோருலகும் உள்ளாரிற் சதாசிவர் அநந்தர் முதலாயினோர்க்கு உள்நின்றும், சீகண்ட ருத்ரர்க்கு நேர்நின்றும், திருமால் முதல் மண்ணுலகிலுள்ள மக்களீறான மற்றையோர்க்கெல்லாம் குருவடிவில் நின்றும் இறைவன் ஒருவனே எல்லார்க்குங் கல்வியறிவினைத் தோற்றுவிப்பான் என்பது,

நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும்
அந்நிலையே உண்ணின் றறுத்தருளிப்—பின்னன்பு
மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப்—பூவலயந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை—அன்னவனுக்
காதிகுண மாதலினால்

என்னும் போற்றிப்பஃறொடை (60-63) திருமொழியால் இனிது விளக்கப்பட்டமை கண்டு கொள்க.

(மறைமலையடிகள். திருவாச. விரிவுரை பக். 77)

6. ஏற - முழுதும். துறந்தும் - ஒழித்தும்.

---

1. பிரேரககரணம் - தூண்டும் கருவி.

மைப்படுத்தி ஆண்ட திருவுளச் சிறப்பாகிய திருவருள் தநுகரண புவன போகச் சிவாநுபூதியாவன :—

சுத்தம்

முதல் இடம் குடிலை. 1

சிவமாவது : லயபோக வதிகாரமாகிய நிட்கள சகள சகளாகளங்களாகிய சம்பு பட்ச நவந்தர பேதமாகிய எழு வகைப் பெயரும், அவர்க்குள் விளைவாகிய அட்ட வித்தீசுவரர்கள், அட்ட மூர்த்தங்கள், பஞ்சவிம்சதி மூர்த்திகளாக எழுவகையும் நாற்பத்தொரு பேதமாக விருக்கும். 2

சத்தியாவது : இச்சா, ஞான, கிரியை மூன்று. பிரேரக சத்திகள் ஏழு. இச்சக்திகளுக்குள் விளைவாகிய வாமாதி சத்திகள் ஒன்பது. பஞ்ச விம்சதி சத்தி இருபத்தைந்து. அட்டமூர்த்த சத்தி எட்டு. தொகை ஐம்பத்திரண்டு. 3

ஆன்மாவது : விஞ்ஞான கலராகிய மந்திர, மந்தரேசுவரர்கள், அநுசதாசிவர். 4

மலமாவது : வசப்பட்டுப் பேரின்பத்தைக் கொடுக்கிற ஆணவ மலம் ஒன்று. 5

சத்திநிபாதமாவது : சுட்ட பஞ்சிற் றீப்போலத் தீவிரம் என்ற பெயரையுடைய ஞானமேயாய் நிற்கும் முறைமை. 6

குருவாவது : சீகண்ட பரமசிவனாகிய மகாசதாசிவன்; அறுபத்துமூன்று நாயன்மார்கள். 7

தீட்சையாவது : உண்ணின்று பேதமற ஒன்றாக நின்று அறிவிக்கும் விஞ்ஞானதீட்சை. 8

அபிஷேகமாவது : [1]சிவதருமணி. 9

---

1. சிவதருமணி - சபீசதீக்ஷையின் ஒருவகை. இதற்கு நைட்டிக தீக்ஷை என்பது பரியாயப் பெயர். இது, முக்தி காமிகட்குத் திரோதான சுத்தி ரூபமாகிய சிகாச் சேதத்தோடு செய்வது (சைவசமயநெறி ஆசாரியரிலக்கணம் சூ. 62 உரை).

பூசையாவது : சிவாநந்த சுவாநுபூதிகமாகிய காலவரை யறையின்றிப் பிரியாதிருத்தலான அன்பாகிய இன்ப சுக பூசை. 10

நிட்டையாவது : உண்மையில் இரண்டறக் கலந்திருத்தல் தோன்ருமையாயிருந்தும் அடிமைத் திறமான அநுபூதிகம்.

தேகமாவது : திருவடி ஞானமாகிய சிவதத்துவங்கள். 12

புசிப்பாவது : பேரின்ப சுகம். 13

அனுட்டானமாவது : பஞ்சகிருத்திய சாட்குணியப் பெருங் கருணையைத் திளைத்தல். 14

ஞானமாவது : ஞாதுரு, ஞான, ஞேய மூன்றுமின்றி ஒன்றி நிற்றல். 15

குணமாவது : சிவசாட்குணியமின்றி வேறு குணம் பொருந்தாது நிற்றல். 16

அவத்தையாவது : தலைவனுமாய் அருளுமாய்ச் செயலுமாய் அருளேயாய்ப் பரசிவமாதல். 17

அத்துவாவது : மந்திரம் 5 பதம் 12. வன்னம் 19. புவனம் 33. தத்துவம் 5. கலை 2. அதிதேவதை 1. 18

ஆகத் தொகை 18.

இவைக்குத் தலமாவன :—அநாதி நித்திய வியாபகமாய், சைதந்நியமாய், விந்து சத்தி என்ற பெயருடையதாய், திரிபதார்த்தத்தில் பதி சொரூபத் தானமாய், நாத விந்து சகத் சொரூபத்தில் சகத் சொரூப விசுவலிங்கத் தானமாய், 'அவன் நான் அது' என்கிற மகாவாக்கியத்தின் தன்மை முன்னிலை வாக்கியப் பொருளாய்,(?) சுத்த சாக்கிரத்தானமாய், சர்வ சங்கார மகாச்மசான உத்தம அதி சூட்சும நடனத்தானமாய், சத்திவத்த உதைய கங்காதரண உத்தமாங்க சிவகாசிபர் பத சிவலோக மகாமேரு மகாரசத மகா கயிலாச லயத்தானமான தலமெனக் காண்க.

சுத்தாசுத்தம்

முன் சொன்ன குடிலை யிடத்தில் பிரிவற நின்ற இரண்டாமிடமாகிய மோகினி என்று பெயருடைய சுத்தா சுத்தங்களாகிய மிசிராத்துவாவாகிய சதசத்தான மாயை. 1

சிவமாவது : அநுபட்ச நவந்தரபேதம் ஏழு; ருத்திரர்கள் பதினேரு கோடியே பதினெட்டு. 2

சத்தியாவது : பிரேரக சத்திகள் ஏழு ; மற்றத் தொகை யும் அப்படியே. 3

ஆன்மாவது : சதசத்தாகிய மூவர்களிற் பிரளயாகலர். 4

மலமாவது : அறிவறியாமையாகிய ஆணவமலமும் சுத்தாசுத்தங்களாகிய கன்ம மலமும். 5

தத்துவமாவது : போக்ய காண்டம் ஏழு.

சத்திநிபாதமாவது : பஞ்சுத் தீப்போலும் உபயத்திலும் சார்ந்த பக்குவம். 6

குருவாவது : தக்ஷிணாமூர்த்தம் சற்குரு, பரநந்தி, சனற் குமரர் எழுவர். 7

தீட்சையாவது : சாம்பவி தீட்சை ; யோக தீட்சை. 8

அபிஷேகமாவது : சாதகாபிஷேகம். 9

பூசையாவது : அநுக்ரக குருவை யர்ச்சித்தல். 10

நிட்டையாவது : பரசிவ சொரூபத்யானம். 11

தேகமாவது : அபரஞானமாகிய கலாதி தத்துவங்கள். 12

புசிப்பாவது : சிவயோக ஆநந்த அமிர்தம். 13

அநுட்டானமாவது : முக்காலமுமொரு சந்தியாக இரண்டற நிற்றல். 14

ஞானமாவது : பரஞானம் அபரஞானம் இரண்டிலு முடிப்பு. 15

குணமாவது : பற்றின தத்துவங்களாய் நிற்றல். 16

அவத்தையாவது : சுத்தாசுத்த தத்வ மத்யாலவத்தையு மாக அடங்கியும் அடங்காக் கருவிகளாகவிருக்கும். 17

அத்துவாவது : மந்திரம் இரண்டு; பதம் இருபது; வன்னம் ஏழு; புவனம் இருபத்தேழு; தத்துவம் ஏழு; போக காண்டம் ஏழு; அதிதெய்வம் ஒன்று; கலை ஒன்று. 18

ஆகத் தொகை 18.

தத்துவத்தையும் கூட்டினல் தொகை எண் 19 ஆகும்.

தலமாவன :—

அநாதி நித்ய வியாபக சேதன சேதன மோகினி யென்ற மாயா சத்திப் பெயராய், பசு சொரூப தடத்தத் தானமாய், விந்துவாய், பரமானந்த சுத்த பஞ்ச கிர்த்திய நடனத் தானமாய், 'நானவன்' என்ற முன்னிலை வாக்கியப் பொருளாய், சுத்த சுழுத்தித் தானமாய், சருவ ரட்சமகாரகசிய சிதாகாச சூட்ச்மானந்த நிருத்த சத்தியான்மிக தரிசன, ஞான மோட்ச விசுவ விருதைய சத்திசிவாலயச் சிவ சிதம்பரமெனக் காண்க.

அசுத்தம்

முன்னிடத்திற் பிரிவற நின்ற மூன்ருமிடமானதாகிய அசுத்தமென்றும் பிரகிருதியென்றும் ஆன்மதத்துவமென்றும் [1]போககாண்டமென்றும் பெயருடைய அசத்தாகிய பிரகிருதி. 1

சிவமாவது : விட்டுணு, பிரமா, இந்திராதி எட்டு. 2

சத்தியாவது : லட்சுமி. சரசுவதி, இந்திராணி முதலெட்டு; துர்க்கை, பத்திரகாளி, கிராமதேவதை முதலான சத்திகள் பதினெட்டு. உஷாதேவி சத்தி முப்பதுநாலு. லோபா முத்திரை முதலெண்மர் துருவசத்தி, சாயையொன்று. கன்மயோக கிரியா சத்தி மூன்று கோடி. 3

ஆன்மாவாவது : சகலர் மூன்றுக்குள் சகலரில் விஞ்ஞான கலர் முப்பத்துமுன்று கோடி, சகலரிற் பிரளயாகலர் அட்டமா சித்தியாலும் அட்டாங்க யோகத்தாலும் யோககாண்டத்துக்குச் சொன்ன விதிகளாலும் முற்றுப் பெற்ற தவத்

1. 'போக்கிய காண்டம்' என்று சிவப்பிரகாசக்கட்டளை கூறும்.

தையுடைய தேவராஜ மனுஷபூத ரிஷிகள். சகலரில் சகலர் எண்பத்துநான்கு நூறுயிரம் யோனி பேதத்துள், மானிடர் ஒன்பது லட்சத்துள், புறச்சமய பேதங்களன்றி, உட்சமயம் ஆறுக்குள் சைவமொன்றில் வேதாகம அநுட்டானம் பெற்ற நால்வகைச் சத்திநிபாதங்களாகிய சரியை கிரியை யோக ஞானங்களை அநுட்டிக்கும் சுத்தான்மாக்கள். 4

மலமாவது : வசப்படுத்துந் தொழிலையுடைய ஆணவமல மும், ஒன்றை யொன்ருய் மயக்கும் மாயா மலமும், முக் காலங்களிலுள்ள கன்ம மலமும் இவைகளின் காரியமாகிய இருபத்தொரு மலமுமுளதாக விருக்கும். 5

தத்துவமாவது : பிருதிவி முதல் நாதம் வரை 96.

சத்திநிபாதமாவது : வாழைத்தண்டு, ஈரவிறகு, உலர்ந்த விறகு, செத்தை இவையிற் பற்றுதல் போல, மந்தம் மந்த தரம், தீவ்ரம், தீவ்ரதரமாகப் பக்குவபேத அநேக திட் டாந்தங்கள் உள. சரியை முதல் அநுட்டித்தல். 6

குருவாவது : சமயாச்சாரிமார் நால்வர்; சந்தானுச்சாரிமார் எழுவர்; பக்குவான்மாக்களுடைய சுயகுரு. 7

தீட்சையாவது : சமய விசேட நிர்வாணம்; இதிலடங்கிய எண்வகையும்; ஞானவுத்திரி, கிரியாவுத்திரி, நிர்ப்பீச, சபீச தீட்சை இவையிலடங்கும். 8

அபிஷேகமாவது : சாதக, போதக, லோக சிவதருமணி. சுத்தாத்துவர் சாட்குணிய சங்காபிஷேகம். 9

பூசையாவது : சிவாகம விதிப்படி உண்மைச் சரியாபாதம் முதல் விதிப்படி ஆன்மதான, திரவிய லிங்க சுத்தி, பஞ்ச கிருத்திய, பஞ்ச யேகீகரணமாக பரமசிவத்தை மெய்யன் புடன் சர்வ வியாபக வடிவான சிவலிங்கப் பெருமானிடத்து அன்பே உபகரணமாக, முக்காலமும் ஒரு காலமான முப் பொழுதாக, 'பத்தி மலர் தூவு'வதே பூசை.

இச்சையுடன் தரிசனமாவது : தன் பொருட்டு நியமஞ் செய்வதை ஒப்புக்கொண்ட நாதன், பிறர் பொருட்டுச் சர்வத்திர சாதாரணமாகச் சர்வ உயிர்கட்கும் தரிசனமே பூசையாமென்பதை அறிவிக்க வேண்டி அநேக சிவதலங்

களில் அநாதி சுவயம்பு அநாதி பிரதிட்டையாக எழுந்தருளிய சுவாமியைத் திருக்கோவில் நியமமாக விதிப்படி திரிவித கரணத்தாலும் வழிபடுதல் பூசையோடொக்கும். 10

நிட்டையாவது : நால்வகைச் சத்திநிபாதத்தாலும் கேட்டல், சிந்தனை, தெளிதலான ஞானகுரு உபதேசப்படி சதா காலம் அநுபோகம் பிரியாதிருத்தல். 11

தேகமாவது : பிரேரக போக்கிய காண்டங்களாற் பெற்ற பிரகிருதியின் காரியமான இருபத்துநான்கு தத்துவங்களும், அவற்றின் காரியமான அறுபது புறக்கருவிகளும் கூடிச் சிவகரண தீட்சையால் யோக்கியம் பெற்று அநுட்டிப்பே நியமதேகம். 12

புசிப்பாவது : பஞ்சபூத பரிணம காரிய தேகமானபடியினாலே, பஞ்சபூதத்திலும் பரிணமித்து ஓரறிவுடைய தாவர பேத தேகங்களாயிருக்கிற புண்ணிய சொரூபங்களில் பிறந்த சிவாகமத்தில் விதித்த பதார்த்தங்களைக் கொண்ட விரதத்துக்குத் தக்கதாகப் பிருதிவியிற் பிறந்து அப்புவிற் கலந்து அக்கினி வாயுவினாலே பக்குவப்பட்ட பதார்த்தத்தை நியமப்படி சிவாக்கினிக்கு ஆகுதி பூசையாகப் புசித்தலே புசிப்பு. 13

அநுட்டானமாவது: ஞானச்சாரியார் அநுக்ரகத்தால் சமயாசாரம் பெற்று விசேட சமக்காரமடைந்து, நிருவாண கலா சுத்தி பொருந்தி, சாதகாதி அபிஷேகம் பொருந்திக் குருவுபதேச வரன்முறை விதிகள், அநுட்டானக்கிரமம் பலவிதமாக விரிந்திருந்தாலும், ஒரு பொருளாகக் குவித்துத் திரிவித கரணமும் கருவியாக்க நாலு பாகத்துடன் விடாது உண்மை யநுபோகமாக நின்று செய்வதே அநுட்டானம்.

ஞானமாவது : உண்மையாகிய நால்வகைச் சத்திநிபாதம் அநுட்டிக்கும்போது முன்சொன்ன லயபோக விடங்களுக்குள்ளதெல்லாம் பிரகிருதி அநுட்டானத்திலே வெளிப்பட்டு விளங்கும்; அர்த்தவபிநயமாக முழுதும் முதலந்தமின்றி ஒன்றுகவே சாதித்தொன்றுவதெல்லாம் சிவமெனத் திருத்தொண்டின் அழுந்திப் பிரியாதிருத்தலே ஞானம். 15

குணமாவது : பிரகிருதியின் அர்த்தத்துவாரகத்த ஏழ் புண்ணிய பாபக் கிரியை முக்குண பேதத்தால் சீவிப்பதைத் திருவருளால் சிவகரணமாயிருத்தல். 16

அவத்தையாவது : கேவல சகல சுத்தம் மூன்று. சகலத்தில் கேவலமாகிய கீழாலவத்தை ஐந்தும் அதோடு கூடிய மத்தியாலவத்தை ஐந்தும், சகலத்திற் சகலமாகிய மேலாலவத்தை ஐந்தும், சகலத்திற் சுத்தமாகிய சுத்தாவத்தை ஐந்தும் உபதேசப்படி அநுக்ரக சம்பிரதாய 'கவர் கள்வன்' என்ற முதல் மொழியநுபூதிப்படி பெற்றிருப்பது. 17

அத்துவாவது : மந்திரம் நான்கு; பதம் நாற்பத்தொன்பது ; வன்னம் இருபத்தைந்து ; புவனம் நூற்றிருபத்தாறு; தத்துவம் எட்டு ; அதிதெய்வம் இரண்டு ; கலை இரண்டு. 18

இவைக்குத் தலமாவது :—

அநாதி நித்திய வியாபக அசேதன மான் என்ற பிரகிருதியான பரச் சொரூப தடத்தத்தானமாய், நாதமாகிய குண்டலிபுர அசபாநிர்த்த உற்பத்தி மோட்ச மூலாதார சிற்பிருதிவித் தானமாய், படர்க்கை மகாவாக்கிய ஸ்ரீவித்யாபீட சொற்பன பராசக்தி செல்வத் திருவாரூர் ஒளி வளர் புற்றிடமெனக் காண்க.

அடியாருள்ளமும் அன்பும் குடியும் கொள்கையும் சிறப்பும் இவ்வநுபூதி யெனக் காண்க.

இனிச் சிவாகமம் அருளிய பரம்பரையாவன :—

**9-11. மன்னு மாமலை மகேந்திர மதனிற்**
**சொன்ன ஆகமந் தோற்றுவித்**
**தருளிய**

(எ - ன) ஆன்மப் பொருட்டுப் பரோபகார பஞ்ச கிருத்தியம் அநாதியிலே செய்யும்போது, காலாந்தரங்களில் ஒரு மகாசங்கார கற்பங் கழித்து மகா சிருட்டியாகும்போது, வேதாகமங்கள் விந்துவில் உண்டானாலும், குருவடிவு

9-11. திருவிளையாடற்புராணம் சிவபிரான் ஆகமங்களை அம்பிகைக்கு உபதேசித்த இடம் உத்தரகோச மங்கை என்று கூறும். (திருவால : திருவிளையாடல் : 22 : 21).

கொண்டு எழுந்தருளி அவரவர்களுக்குத் தக்கபடி அநுக்ரகம் பண்ணினலன்றிச் சுத்தான்மாக்களுக்குப் புலப்படாதே! புலப்படும் வண்ணம் திருமயேந்திரமென்கிற தக்ஷிண கைலாசத்தில் முன் தான் அநுக்கிரகம் பண்ணின ஆகமங்களெல்லாம் தேவிக்கு எடுத்துச் சிந்தனை பண்ணும்போது (எ - கஃ).

**11-12.** **கல்லா டத்துக் கலந்தினி தருளி**
**நல்லா ளோடு நயப்புற வெய்தியும்**

(எ - ன) முன், சிந்தனை செய்யும் ஆகமங்களைத் தேவியுடன் கல்லாடம் என்கிற திருப்பதியிலே கலந்து இனமாக உபதேசித்ததெனக் காண்க.

**13-14.** **பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்**
**எஞ்சா தீண்டும் இன்னருள் விளைத்தும்**

(எ - ன) பஞ்சப்பள்ளி என்னும் தலத்திலே ஞானப்பால் மொழியாளான பராசத்தியுடன் குணகுணிபாவமாகக் கலந்து இவ்வுலக உயிர் பிழைப்பதாகச் சிவாகமக் காட்சியால் திருவருள் விளைத்ததெனக் காண்க.

**15-16.** **கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்**
**விராவு கொங்கை நற்றடம் படிந்தும்**

முற்பத விநியோக தலங்களிலேதானே, பரமசிவன் வேடத் திருவுருவாகி, தேவியும் எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளுமாகி, கிளிமொழியாளின் முதிராவிள முலை கைவந்து நெருடவே, எல்லா உயிர்கட்கும் சிவானந்த போகம் அளித்த, பெருங்கருணைக் குருமணிபாற் பெற்றழுந்தி ஒன்றானதற்கு ஈது விளங்கும்; என்ற அநுபூதி காண்க.

---

**11-12.** நல்லாள் - உமாதேவி. நயப்புறவு - இன்பம். நயப்புற எய்தியும் என்றும் பிரித்தலாம்.

**13-14.** எஞ்சாது - குறையாது. ஈண்டும் - மிகுந்த.

**15-16.** கிராதன் - வேடன். கிஞ்சுகம் - முருக்கம்பூ. விராவு - நெருங்கிய. சிவபிரான் கிராத வேடமெடுத்தது அருச்சுனன் பொருட்டு.

17-18. கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய வாகமம் வாங்கியும்

(எ-ன) சுவாமி பரத வேடரான திருவுருக்கொண்டு முன்னாலே கயிலையங்கிரியில் சிவாகமத்தைக் கிழித்துச் சமுத்திரத்தில் இறைத்ததை அநுக்கிரகஞ் செய்து, ஆகமமெல்லாம் சேர்ந்து வரும்படி நந்திநாயனாரைக் கெளிறு என்ற மச்சமாக்கி அதைத் தான் பிடித்து ஆகமங்களெல்லாம் ஏட்டுடன் சேர்த்துக் கொடுக்க வாங்கியும் எனக் காண்க.

19-20. மற்றவை தம்மை மயேந்திரத் திருந்து
உற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்

(எ-ன) முற்பத விநியோகத்தில் வாங்கிய ஆகமங்களை முன் அருள்வதான திருமயேந்திரம் என்கிற திருப்பதியிலே சதாசிவ வடிவாக வெழுந்தருளி, எந்த எந்த முகத்திலிருந்து எந்த எந்த ஆகமங்கள் பிறந்தனவோ அப்படியே அம்மைக்கும் சத்தான்மாக்களுக்கும் உபதேசம் செய்ததெனக் காண்க.

ஐந்து முகங்களிலும் பிறந்த சிவாகம விவரமாவன :—

1. சத்தியோசாத முகத்தில்,

(1) [1]காமிகாகமம், பரார்த்தம்; (2) யோகஜம், லட்சம்; (3) [2]சிந்திதம், 10 கோடி; (4) அசிதம், 16 ஆயிரம்; (5) [3]காரணம்.

---

17-18. கேவேடர் - வலையர்; கேவர்த்த : என்னும் வடமொழியின் சிதைவு என்பர். கெளிறு - ஒருவகைமீன். மாவேட்டு ஆகிய - பெரிய விருப்பத்தைத்தருகிற. இவ்வரலாறு திருவிளையாடலில் வலைவீசினபடலத்திற் காணப்படும்.

---

1. காமிகாகமம் பரார்த்தத்தொகையுள்ளது (அபிதானசிந்தாமணி பக். 117) பரார்த்தம் - ஒரு பேரெண்.

2. (பி-ம்) சிந்தியம்.

3. காரணத்தை நான்காவதாகக் கூறுவர் பிறர் (அபிதானசிந்தாமணி பக். 117). அசிதத்தை ஐந்தாவதாகக் கூறுவர் பிறர்.

2. வாம முகத்தில்,

(6) தீப்தம் வதம், 226 ஆயிரம்; (7) சூட்சமம், பரமம் சகத்திரம்; (8) சதாக்கிரம், (சஹஸ்ரம்) சங்கமம்; (9) அம்சுமான், 6 லக்ஷம்; (10) [1]சுப்ரபேதம், 3 கோடி;

3. அகோரத்தில்,

(11) விசயம், 3 கோடி; (12) (சைவ)நிச்வாசம், கோடி; (13) சுவாயம்பூ, 3 கோடி; (14) [2]அநலம் 48 ஆயிரம்; (15) வீரம், 26 ஆயிரம்;

4. தற்புருடத்தில்,

(16) மாரௌரவம் 8; (17) மகுடம், 100 ஆயிரம்; (18) விமலம், 300 ஆயிரம்; (19) சந்திரஞானம், 3 கோடி; (20) முகவிம்பம், 85 ஆயிரம்;

5. ஈசானத்தில்,

(21) புரோத்கீதம், 300 ஆயிரம்; (22) லளிதம், 8 ஆயிரம்; (23) சித்தம், 500 ஆயிரம்; (24) சந்தானம்; (25) சர்வோத்தமம், 6 ஆயிரம்; சாரோதீதம், 200 ஆயிரம்; (26) பாரமேச்சுரம், 38 நூறுயிரம்; (27) கிரணம், 500 ஆயிரம்; (28) வாதுளம், 100 ஆயிரம்;

பேதம் இவை இருபத்தெட்டு மூலாகம கிரந்தம்.

21-22. **நந்தம் பாடியில் நான்மறை யோனாய்**
**அந்தமி லாரிய னாய் அமர்ந் தருளியும்**

(எ - ன) திருநந்தம்பாடி என்ற தலத்திலே பிராமணத் திருவுருவாகி அளவிலாத சிவஞான உபதேச ஆச்சாரியராக அநுக்கிரகஞ் செய்த பரமகுருவெனக் காண்க.

---

21-22. ஆரியன் - ஆச்சாரியன்.

---

1. 1 முதல் 10 வரையிலிள்ள ஆகமங்கள் சிவபேதம்.

2. இதன் மறுபெயர் ஆக்னேயம்.

23-26. வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிர மியல்பின தாகி
ஏறுடை யீசனிப் புவனியை உய்யக்
கூறுடை மங்கையுந் தானும் வந்தருளி

(எ - ன) ஞாலத்து ஆயிரகோடி நற்றானமான விடத்தும் மற்றும் மூன்று புவனங்களிலும் மூவகை யணுக்களுக்கும் அவரவர்கள் பக்குவ தாரதம்யம் திருவுளத்தடைத்தபடி, பரமசிவனும் பார்ப்பதியும் வெவ்வேறு திருவுருக் காட்சியும் அனுக்கிரகமளவிலாத கருணையைக் காட்டப் புண்ணியவிடையேறி எழுந்தருளி இரட்சித்த பெருமையை வேதாகம புராண சுருதியினும் சாங்குசித்தாளிடமாயும் உபதேசத்தாற் காண்க.

27-28. குதிரையைக் கொண்டு குடநாட தன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்

(எ - ன) திருப்பெருந்துறையிலே திருவுளப்படி திருப்பணி செய்த திரவியம் குதிரைக்காகக் கொண்டு வந்ததாதலால், பாண்டியவிராசனுக்குத் திருவடி தரிசனம் காட்ட, சிவ புண்ணிய சொரூப வடிவான அநேகங் குதிரைகள் சூழத் தான் என் போதப் புரவிமேல் எழுந்தருளி, கீழ்த்திசை மேற்றிசையேயாகத் தோன்றிய **சாத்தா** என்ற சிவஞான உருவான சதுரனெனக் காண்க.

---

27-28. குடநாடு - மேற்கிலுள்ள நாடு. திருப்பெருந்துறைக்கு மேறகே உள்ளது மதுரை. சாத்தாய் - குதிரைவீரனாய் என்றும் வணிகக் கூட்டத்துடன் என்றும் பிறர் கொள்வர். திருவாலவாயுடையார் திருவிளையாடலும் 'வழுதில்லாச் சாத்தவர்கள் சூழ, ஆலவாய் அமுதவாயன் செழியன்முன் குதிரையிட்டனன்' என்று கூறும். (**27 :** ஞானோபதேசம் **: 1)** பகுதியையும் சான்றாகக் காட்டுவர்.

29-30. வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்

(எ - ன) திருவேலம்புத்தூர் என்ற தலத்திலே சிவனடியார்க்குப் பிரத்தியட்சமாக விடையடி தோன்ற நடத்துந் திருவருள் அழகு பொருந்திய திருவுருக்காட்சிப் பொருளான சிவனே யெனக் காண்க.

31-32. தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த பொருளும்

(எ - ன) திலதர்ப்பணம் முதலான தீட்சா அந்தரட்சையான வேதாகமப் பொருளைத் திருச்சாந்தம்புத்தூரிலே கொலைத் தொழில் வில்லாற் செய்யும் கிராதர்களுக்குத் திருவடிபெற அநுக்கிரகஞ் செய்த சிவஞான விளைவெனக் காண்க.

---

29-30. விட்டேறு என்றது ஏறுவிட்டு என்று கொண்டு, எருது விடுத்தருளி, என்று பொருள் கொள்வாரும், விட்டேறு - வேற்படை [சக்தி, எஃகம், உடம்பிடி, குந்தம் விட்டேறு, அரணம், ஞாங்கர் அயில் வேல் (திவாகரம்)] என்று கொண்டு இறைவர் உக்கிரகுமாரருக்கு வேற்படை நல்கிய வரலாற்றைச் சுட்டுவாரும் உளர். (திருவாலவாயுடையார் திருவிளையாடல் 11. 2. ஐப்பார்க்க).

31-32. தர்ப்பணம் அதனில் என்பதற்கு கண்ணாடியில் என்று பிறர் பொருள்கொண்டு, 'வேடனொருவனுக்கு அவன் வேண்டிய வாள்படை முதலியவற்றைக் கண்ணாடியின் வாயிலாக அளிப்பித்த வரலாற்றைக் கூறும் என்பர்.

33-34. மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்

(எ - ன) குதிரைத் தோப்பருவினிடமே சிவனடியாரன் பின் பொருட்டு அவர்கள் சிந்தனைப்படியே தழற் பிழம் பாகிய சொக்கலிங்கமானதெனக் காண்க.

35-36. அரியொடு பிரமற் களவறி யொண்ணுன்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்

(எ - ன) பசுவர்க்கமாகிய அரியாலும் பிரமனாலும் அள விடப்படாத சோமசுந்தரசுவாமி, அடியேன் பொருட்டுக் காட்டு நரிகளைத் தசநாட்டு அசுவங்களாக்கிய கிருபையை அன்பாற் காண்க.

---

33-34. மொக்கணி - தோற்பை; தோற்பை என்ற சொல்லே தோப்பரு என்று மருவியது. 'கழுவிய பயறுங் கொள்ளும் கடலையுந்' துவரையோடு, முழுவதுஞ் சிறக்க விட்டே மொக்கணி முட்டக்கட்டி என்று கூறும் (திருவால. 29 : 6) பகுதியைக் காண்க. சிவபெருமானே மொக்கணி கட்டித் தன் கழல்மேனியை அழகிய குதிரைவீர மேனியாகக் காட்டியருளினர் என்று இவ்வடிகளுக்குச் சிலர் பொருள் கொள்வர்.

கொங்கு மண்டல சதகம் செய்யுள் 24 ஐக்கொண்டு 'இறைவழி பாட்டின் பின்னரே உணவு அருந்தும் நியமம் பூண்ட ஒரு வணிக அன் பரைப் பரிகசித்தற்பொருட்டு அவரது மைத்துனர் கொள்ளுப்பையில் மணலை நிரப்பி, இலிங்கம்போல அமைத்து, மாலை முதலியன சாத்தி அவ் அன்பரை வழிபடச்செய்து, பின் உண்மையுரைத்து நகைத்து, அவர் முன்பேயே அக்கொள்ளுப்பையை அசைத்தார். அது பாதளம் வரையில் ஊடுருவிச் சிவலிங்கமே ஆகிவிட்டது. அதுமுதல் பெருமானும் மொக் கணீசர் (தருமபுர ஆதினம்) எனப்பெயர் பெற்றூர் என்று திரு. கா. சுப்பிர மணியப்பிள்ளை கூறுவர் (திருவாசகம் பக். 13). இக்கருத்தையே இவ வுரையாசிரியரும் கொண்டனர் போலும்.

37-41. ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டியன் றனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனக மிசையப் பெறுஅது
ஆண்டா னெங்கோன் அருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்

(எ - ன) திருவருளழகு பொருந்திய நாதனருளே என்னை யடிமையாகச் செய்வதே நியமமாகப் பாண்டிய இராசாவுக்கு முற்பத நரியான குதிரைகளை விற்கும் விலை மேல் அதிகப் பொருளாகக் காட்டிய கருணையை, இவ்விடத்திலே இராசனும் சம்மதி பொருந்தியிருத்தலைக் கண்டு, வாதவூரடிகளும் இவ்வநுபூதி தெரிந்து, தன்னை யாண்ட திருப்பெருந்துறைப் பரமகுருவான சோமசுந்தரனுடைய திருவருளே பொருளென, திருவிளையாடலை உன்னி, திருவடியே பரமென, அரசனும் ஈசனருள் வழியென சிவானந்த நிட்டை கூடிய காலம், தன் பொருட்டு நாதன் எழுந்தருளி அநுக்ரகம் செய்ததெனக் காண்க.

42-43. அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய வியல்பும்

(எ - ன) முற்பதச் சோதியான நாதன் பிராமண வடிவமான பரமகுருவாய் எழுந்தருளி அநுக்ரகஞ் செய்யுங்காலம், 'இந்திரசாலம் புரிவோரின் யாவரையும் தாமயக்கும் அத்தந்திரத்திற் சாராது சார்வது போல்' அத்திருவிளையாடல் செய்தருளிய சுவாமி எனக் காண்க.

---

37-41. ஈண்டு கனகம் இசையப் பெறுஅது என்பதற்கு உரையாசிரியர் காட்டும் நயம் குறித்தற்பாலது. 'பாண்டியன் குதிரைக்காசக் கொடுத்த பெரும் பொருளைப் பெறுதற்கு உடன்படாது' என்று பொருள் கூறுவர் பிறர்.

42. முன்னே எனையாண்ட, பார்ப்பானே எம்பரமா - (புணர்ச்சிப் பத்து 10) இந்திரஞாலம் - இந்திரஜாலம். கீர்த்தி 94 அடியையும் பார்க்க.

**44-45. மதுரைப் பெருநன் மாநக ரிருந்து**
**குதிரைச் சேவக ஞகிய கொள்கையும்**

(எ - ன) தன் பொருட்டு மதுரைத் திருப்பதியின்கண் எல்லாருங் காணச் சோமசுந்தரநாதன் பரிச் சேவகனுக எழுந்தருளி அநுக்கிரகம் செய்ததே திருவுளக் கொள்கையெனக் காண்க.

**46-47. ஆங்கது தன்னில் அடியவட் காகப்**
**பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்**

முற்பதத் தலத்திலே வந்தியம்மை அன்பும் வெளிப்பட அவ்வம்மை வீதக் கரை அடைக்கக் கூலியாட்போலத் திருமேனி கொண்டெழுந்தருளி, இன்பப் பிட்டுண்டு, திருமுடியில் மண்சுமந்து திருவிளையாடல் செய்ததைப் பாண்டிய ராசன் கண்டு மாறுேச்ச, ஓச்சினவன் தேக முதலாய் எங்கும் பட அருளிய சிவஞானப் பரிசே எனக் காண்க.

**48-49. உத்தர கோச மங்கையுள் ளிருந்து**
**வித்தக வேடங் காட்டிய இயல்பும்**

(எ - ன) திருவுத்தரகோச மங்கையான தலத்தில் எழுந்தருளிப் பரமகுருவடிவு காட்டியருளியதெனக் காண்க.

---

48-49. வித்தக வடிவு - ஞான வடிவு.

உத்தரகோசமங்கையில் பரமன் ஞானுபதேசம் செய்த வரலாறு திருவலாவாயுடையார்ப் புராணத்திலும் காணப்படுகிறது :—

அருந்தவம் புரியா முன்ன ரறுபத்து நால்வ ரங்கட்
பொருந்தல்கண் டெமக்கு ஞானம் புகன்றுருக் காட்டென் றேத்தத்
திருந்துப தேச னோக்காற் செய்துமா முனிவ ருய்யப்
பெரும்பொரு ளுரைத்தான் மன்றற் பேதையோ டுருவங் காட்டி.

(வலைவீசன : 22)

அத்தலத்தில் தவம்புரிந்தவர் ஆயிரவர் என்று உத்தரகோசமங்கைத் தலப்புராணம் கூறும்.

**50-51. பூவண மதனில் பொலிந்திருந் தருளித்**
**தூவண மேனி காட்டிய தொன்மையும்**

(எ - ன) திருப்பூவணமான தலத்திலே பொன்னனை யென்ற அடியவட்காக அவ்வம்மை திருவுருக்கண்டு முத்த மிட்டருள அநுக்ரகம் செய்ததெனக் காண்க.

**52-53. வாத வூரினில் வந்தினி தருளிப்**
**பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்**

(எ - ன) திருவாதவூரில் எழுந்தருளித் திருச்சிலம்பின் ஓசைவழியே திருநடனங்காண அநுக்கிரகஞ் செய்த சிவ ஞானப்பண்பே எனக் காண்க.

---

50-51. இதன் வரலாற்றைப் பொன்னனையாளுக்கு அருள்புரிந்த திருவிளையாடலிற் (45) காண்க.

பொன்னனையாள் முத்தமிட்ட வரலாறு :—

பணிபவ ளழகு கண்டே பரவுமெம் பெருமா னுக்கிங்
கணிபொலி வடிவ மச்சோ வழகிய வாவென் றன்பி
னிணையிலா வருங்க போலத் திருகையான் மாறி யள்ளித்
தணிவற முத்த முண்டாள் சம்புவி னருளை வாழ்த்தி.

(திருவாலவா : 45. பொன்னனையாள் 15)

திருப்பூவணமுடையாரின் திருநாமம் அழகிய பெருமான் என்றுயிற்று

(ஷை செய்யுள் 17)

52-53. ஆதர வடியார் முற்று மடிபணிந் தேத்தப் போந்து
வாதையம் புரத்து நண்ணி மணிச்சிலம் போசை காட்டத்
தீதற வாண்ட வெந்தை திருச்சிலப் போசை யென்றே
யேதமா முனிவர் தேறி யிசைபடத் துதிக்க லுற்றார்.

(திருவால : நரிகுதிரையான திருவிளையாடல் : 14)

**54-55. திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்**
**கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்**

(எ - ன) திருப்பெருந்துறையான தலத்திலே சிவ ஞானச் செல்வனாக எழுந்தருளி, 'என் உள்ளங் கவர் கள்வனை'ப் போல இருந்தபடி நானிருப்ப, என் கருவில் ஒளித்த கருணைச் சோதியே எனக் காண்க.

இவை, சுத்தாவத்தை : முதல் மொழிக்கு முதல் வேத மொழிப்பாவின் (பக். 52) அநுபூதியுரையிற் காண்க.

**56-57. பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்**
**பாவ நாச மாக்கிய பரிசும்**

(எ - ன) இந்தப் பிரகிருதி மாயையான பூலோகத்திலே பார்ப்பதியும் பரமசிவனுமாக அநேகந் திருத்தலங்களிலே சுத்தான்மாக்களைத் திருவுருக்கொண்டு எல்லாப் பாவமுந் தீர்ப்பதே நியமமெனக் கொண்ட கருணைப் பொருளெனக் காண்க.

**57-58. தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து**
**நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்**

(எ - ன) ஆன்மாக்களுடைய பிறவிக் கிலேசத் தாகம் தீர்தற்பொருட்டுத் திருவடி நிழலும், திருஞான சலமும் புசிப்பிக்க நீராளனாயிருந்த திருவிளையாடலான நலத்தை அன்பாற் காண்க.

---

54-55. கரு ஆர் சோதி - எல்லாப் பொருட்கும் மூலமான பேரொளி: என்றும் பொருள் கொள்வர்; கரு என்பதற்குப் பரமாணு என்று பொருள் கொண்டு, 'பரமாணுவுருவாய் விளங்கும் ஒளி' என்றும் பொருள் கூறலாம் என்பர் ஆசிரியர் மறைமலையடிகள்.

56-57. பூவலம், பிறர் இதனை ஒரு திருப்பதி என்பர்.

57-58. இங்குக் கூறிய வரலாற்றைத் தண்ணீர்ப்பந்தர் வைத்த திருவிளையாடலிற் காண்க.

60-61. விருந்தின ளுகி வெண்கா டதனிற்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்

(எ-ன) சிவனடியாரை இரட்சிக்கும் பொருட்டு விருந்து வந்தவர்களைப் போலத் திருவெண்காட்டில் எழுந்தருளிப் புதிய காட்சியருளிக் குருந்த விருட்சத்தின் கீழ்ப் பரமகுருவாய்க் கண்டதே திருவருட் கொள்கை யெனக் காண்க.

62-63. பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய வதுவும்

(எ-ன) திருப்பட்டமங்கையென்னும் தலத்திலே இருடிகட்கு அட்டமாசித்தி அருளிய கருணை யெனக் காண்க.

64-65. வேடுவ ளுகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்

(எ-ன) மிருக சஞ்சாரக் காட்டிலே அருச்சுனனுகிய அடியார் பொருட்டு வேடத்திருவுருவாகி மறைந்திருந்து அநுக்கிரகஞ் செய்த சுவாமி யெனக் காண்க.

---

62-63. இதன் வரலாற்றை அட்டமாசித்தி பகர்ந்த திருவிளையாடலிற் காண்க.

பட்டமங்கை, பட்டமங்கலம் என்றும் பெயர் பெறும். இவ்வூர் சிவகங்கையைச் சார்ந்தது. சித்தி அருளப்பெற்றவர் அறுமுகனுக்குப் பால்கொடுத்த இயக்கமாதர் அறுவர்.

அட்டமாசித்தி கூறிய வரலாறு :—

அணிமா மகிமா கிரிமா லகிமா
நணுகீ சத்துவம் வசித்துவ நன்குள
விணைசேர் பிராத்திப் பிராகா மியமெண்
குணமா சித்திக ளெங்கக் கூறினன்

(திருவால: அட்டமாசித்திபகர்ந்த திருவிளையாடல்: 15)

66-67. மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்

(எ - ன) தன் திருவுள இச்சைப்படி, அடியார் இரட்சை நிமித்தம் வேண்டிய திருவுருக்கொண்டதன்றியும், பாண்டிய விராசாவுக்கு மெய்க்காட்டிட்ட திருவிளையாடற் பெருமையை அன்பாற் காண்க.

68-69. ஓரி யூரி லுவந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்

(எ - ன) ஓரியூர் என்ற தலத்திலே அடியவட்காகச் சிவ ஞானச் செல்வப் பாலகனாகி அநுக்கிரகம் செய்த மெய்ப் பரிசுடைய நாதன் எனக் காண்க.

70. பாண்டூர் தன்னி லீண்ட விருந்தும்

(எ - ன) திருப்பாண்டூர்த் தலத்திலே இதுவே நமதிடமென எழுந்தருளிய கருணையைக் காண்க.

---

66-67. இதன் வரலாற்றை மெய்க்காட்டிட்ட திருவிளையாடலிற் காண்க.

மெய்க்காட்டிடுதல் - (படைகளின்) உண்மையைக் காட்டுதல்.

68-69. 'நவகோடி சிவலிங்கத் திருவுருவா ... இலங் ..........ஞான உபதேசம் செய்யுங்கால் அவள் புருடனான இராவணன் வர ஓரியூர் என்ற தலத்திலே குருவடிவாக வண்டோதரி அடியவட்காகச் சிவஞானச் செல்லப் பாலனாகி அநுக்ரகம் செய்த மெய்ப்பரிசுடைய நாதனெனக் காண்க' என்று ஒரு பிளப்பு வரியில் காணப்படுகிறது.

இவ்வரலாறு திருவிளையாடலில் காணப்பெறும் விருத்தகுமாரபாலரான திருவிளையாடலைக் குறிக்குமென்பர் சிலர்.

71-72. தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்

(எ-ன) திருத்தேவூர் என்ற தலத்துத் தென்பாரிசச் சோலையிடத்தில் பசுபதியாக அடியார்க்கருளிய திருவுருவை அன்பாற் காண்க.

73-74. தேனமர் சோலைத் திருவா ரூரின்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்

(எ-ன) திருவாரூரென்ற தலத்திலே பரமுத்தி அடியார் அடையும் பொருட்டுச் சிவஞானப் பிறப்பே பொருளென அசபை நிருத்தம் காட்டிய நாதன் எனக் கொள்க.

75-76. இடைமரு ததனி லீண்ட விருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்

(எ-ன) சுழிமுனை மார்க்க மத்தியார்ச்சுனமான திருப்பதியிலே 'நமது இடம்' என வெழுந்தருளித் திருவடி காட்டியருளிய மெய்ப்பரிசை அன்பாற் காண்க.

77-78. ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்

(எ-ன) திருவேகம்பமான தலத்திலே அபேதமாக எழுந்தருளி அம்மையை நோக்கி, 'உன் பூசை என்பால் முடியாது' எனச் சிவபூசை யருமை காட்ட, நதி பெருக, அணை முலை யழுந்தித் திருமேனியிற் காட்டிய அன்பு கொண்டு அர்த்தநாரீசுவரம் அளித்த கருணையை அன்பாற் காண்க.

---

71-72. கோவார் கோலம் என்பதற்கு அரசத்தன்மை நிறைந்த திருவுருவென்பர் பிறர்.

77-78. இவ்வரலாற்றைக் காஞ்சிப்புராணம் தழுவக்குழைந்த படலத்திற் காண்க.

79-80. திருவாஞ் சியத்திற் சீர்பெற விருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்

(எ-ன) திருவாஞ்சியம் என்ற தலத்திலெழுந்தருளிப் பராசத்தியும் பரமசிவனும் குண குணிப் பொருளான பெரிய வாழ்வைக் காட்டி அம்மையும் அடியாரும் மகிழச் செய்ததெனக் காண்க.

வண்ணம் என்றது, 'கண்ட வண்ணம் என் வண்ணமே' என அளவையுரை முன்மொழியிலே காட்டிய திட்டாந்தர அநுபூதி (பக். 120-148) காண்க.

81-82. சேவக ஞகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்

(எ-ன) மதுரைத் திருப்பதியிலே பரியாளனுகியும், மற்ற திவ்ய தலங்களிலே வேடத் திருவுருவாய் வில்லாளனுகியும், எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் அவருள்ளத்து விரைந்து சேரலான அநேகம் அடியார்க்கு அநேகம் திருவுருக் காட்டிய நாதன் எனக் காண்க.

'கல்விற் கமரிற் கதிர்வாளில்' (திருக்களிற்றுப்: 50) என்ற சாத்திர நுட்பங் காண்க.

83. கடம்பூர் தன்னி லிடம்பெற விருந்தும்

(எ-ன) திருக்கடம்பமான தலத்திலே எல்லாப்புவனமும் தமது வியாபகம் எனக் காட்டி யெழுந்தருளிய சுவாமியென அன்பாற் காண்க.

84. ஈங்கோய் மலையி லெழிலது

(எ-ன) திருவீங்கோய்மலை என்ற தலத்திலே, குறுமுனியடிகள் ஈயுருவாகி ஈயறியாப் பசுந்தேனை நாதன் திருவடியில் தேனபிடேகப் பூசை அநுக்கிரகம் பெற்றது (எ-க).

---

81-82. 'இது பாண்டியன் பொருட்டுப் போரிற் றேன்றிப் பல தோற்றங்களைக் காட்டிய இறைவன் தன்மையைக் கூறியது' என்பர் மறைமலையடிகள் (பக். 111).

85. ஐயா றதனிற் சைவ ஞகியும்

(எ - ன) திருப்பஞ்சநதியான அம்மை திருப்பால் முத லாக அபிடேகங் கொண்டருளி, அடியார்கட்கு முதன்மை யான நந்திநாயனுர்க்குச் சிவசம்பந்தமே அடிமையெனக் காட்டியருளும் சைவ சம்பிரதாயப் பொருளைத் திருவருளாற் காண்க.

86. துருத்தி தன்னி லருத்தியோ டிருந்தும்

(எ - ன) திருத்துருத்தியான தலத்திலே மணவாளக்கோலம் காட்டிச் சிவஞான லாபங் காட்டிய அன்பை இன்பாற் காண்க.

87. திருப்பனை யூரில் விருப்ப ஞகியும்

(எ - ன) திருப்பனையூரென்ற தலத்திலே தேவிக்கு விருப்ப ஞகிப் பஞ்சாக்கர முபதேசித்ததெனக் காண்க.

88. கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்

(எ - ன) திருக்கழுமலமான தலத்திலே பிரணவத் திருத் தோணிமே லெழுந்தருளி மூவுருவும் ஓருருவெனச் சகல பக்குவ தேவர் அடியார்க்குப் பரமகுருவாய் ஒன்ருகக் கண்ணில் இன்புறக் காட்சியருளும் பெருங் கருணையை யன்பாற் காண்க.

89. கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்

(எ - ன) திருக்கழுக்குன்றமென்ற தலத்தில் வேதத்திற்கும் பட்சிக்கும், "நாதனுக்கே நீங்கள் அடிமை" யென வழு வாது சுருதி காட்டும் பரம் பொருளே (எ - க).

---

85. இதற்குத் திருவையாற்றுப் புராணத்திலுள்ள ஆதிசைவப் பார்ப்பனர் இருவர்க்குள் நிகழ்ந்த மாறுபாட்டைக்குறிக்கும் என்பர் மறை மலையடிகளும் சுப்பிரமணியப்பிள்ளை அவர்களும்

86. துருத்தி; திருத்துருத்தி ; குற்ருலம் (சோழநாடு)

88. திருக்கழுமலம் - சீகாழி

90. புறம்பிய மதனி லறம்பல வருளியும்

(எ - ன) திருப்புறம்பியம் என்ற தலத்திலே அம்மைக்கு ஆன்மாக்களை இரட்சிக்கும் பொருட்டுச் சகல பசு புண்ணியத்துக்கும் மேலான புண்ணியம் சிவபுண்ணியமென அநுபூதி காட்டியருளும் சாட்சிப் பொருளெனக் காண்க.

91. குற்ற லத்துக் குறியா யிருந்தும்

(எ - ன) திருக்குற்றாலம் என்ற தலத்திலே பொதியாசல அடிகட்காகக் "குறிகளும் அடையாளமும் கோவிலும் நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மை"யாக எழுந்தருளி அநுக்கிரகம் செய்ததெனக் காண்க.

92-96. அந்தமில் பெருமை யழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்
டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்தும்
தானே யாகிய தயாபர னெம்மிறை

(எ - ன) ஒரு காலமும் நாசமில்லாத திருவருட் பெருமையனன சிவன் தழற் பிழம்பான திருமேனி தானே அன்புப் பிழம்பாய் அழகு பொருந்திய திருவருளான சுந்தர வேடமணிந்து, ஏக பரப்பிரும்ம வத்துவே, இந்திரஜால வித்தை செய்வோன் அதிற் சாராது நின்றது போலவே, தான் தோயாது சகல பிரபஞ்சத்தும் தான் தோன்றி, அதில் பக்குவான்மாக்களுக்கனுக்கிரகத் திருவிளையாடலுஞ் செய்து, முக்குண பேத சர்வ உயிர்க்குணமும் தன்வசமாக்கித் தானே பரமென வருளுங் கடவுளெனத் தோன்றும் பெருங் கருணையுடைய எனது உயிர்ப் பொருளான நாயகன் (எ - க).

---

91. குற்றாலம்; தென்பாண்டி நாட்டிலுள்ளது.

97-99. சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்து வந்தழகமர் பாலையுட்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்

(எ-ன) சிற்பர ஞானகாசப் பொருளே திருவுருவாகி, சந்திரதீப, ஞானகமதீபச் சாத்திரப் பொருளை, திருவருளழகு போன்ற திருக்கழிப்பாலை என்ற தலத்திலே பராசத்திக்கு அநுக்கிரகஞ் செய்து, அவளுந் தானும் கலந்திருந்து அநுக்கிரகம் செய்தது (எ-க).

100-101. மந்திர மாமலை மயேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை யருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரில்

(எ-ன) பிரணவ சொரூப வடிவான திருமயேந்திர வெற்புக் கிறைவனாகி அளவில்லாத பெருமையனான சுவாமி எனை யாண்ட பெருங்கருணை யின்பஞ் சொல்லக் கேண்மின் என்ற தசாங்க அநுக்கிரகம் வருவதை அநுபூதியாற் காண்க.

*தசாங்கம்

103-104. ஆற்ற லதுவுடை யழகமா திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்

(எ-ன) அடியேனை இரட்சிக்கும் பொருட்டுச் சர்வ தேவர்கள் பலத்துக்கு மேம்பட்ட திருவருட்பலமான திருவுருவிலே, தழற்பொடி போலத் திருவருட்பரையே நீறாக விளங்கிய ஊர்த்த தாண்டவ வெற்றிக்கொடி (எ-க).

---

97-99. சந்திரதீபம் என்பதை ஒரு திருப்பதி என்பர் பிறர்.

*தசாங்கம்; ஆறு மலையும் யானையுங் குதிரையும், நாடு மூருங் கொடியும், முரசும், தாரும் படையும் தசாங்கமெனப்படும் (சூடாமணி நிகண்டு). அடிகள் கூறிய தசாங்க உறுப்புக்கள் சிறிதளவு மாறுபட்டுள்ளமை காண்க.

103-104. நீற்றுக்கோடி - திருநீற்று வரிகள் என்பர் மறைமலையடிகள்.

105-106. ஊனந் தன்னை யொருங்குட னறுக்கும்
ஆனந் தம்மே யாறா வருளியும்

(எ - ன) எனது மல போதப் பிறவியை வேரோடு களையுஞ் சிவஞான வின்பமே ஆறுக அடியேனுள்ளத்திற் பெருகச் செய்தது (எ - க).

107-108. மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்

(எ - ன) பராசத்தியை வாமபாகமுடைய பெருங்கருணையாளனுன நாதன் என்னை இரட்சிக்கும் பொருட்டு, தத்துவத் தோற்றப் பொருளான நாதத்தை அதிட்டிக்கும்போது, சத்தமே பிறப்பதான ஒளி வளர் நாதத்தொலிப்பெரு முழக்கப் பறை யெனக் காண்க.

109-110. அழுக்கடை யாம லாண்டுகொண்
[டருள் பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்

(எ - ன) அடியேன் உயிரில் மலவழுக்குச் சேராமல் அடியேனை ஆண்டு கொண்டருளிய நாதன் படைக்கலம் ஞானமேயாகத் திருக்கையில் தரித்ததெனக் காண்க.

111-114. மூல மாகிய மும்மல மறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏல்புடைத் தாக வெழில்பெற வணிந்தும்

(எ - ன) எனதுண்மைப் பொருளான அழியாத மல சத்தியடங்கலையும் அழித்து, அழியாத மூலமும் மலத்தையும் திருவடியிலடக்கி, ஞானமே எனது உயிரிற் பிரகாசிக்கும் பொருட்டுத் திருவுளத்திச்சை கொண்டு, கலைஞானிகள்

---

109-110. கழுக்கடை - முத்தலை வேல்.

111-114. மூலமும்மலம் - பிறவிக்குக் காரணமான மூன்று மலங்கள் ; ஆணவம், மாயை, கன்மம்.

காதலனுகத் திரோதான சத்தி வடிவாகிய செங்கழுநீர்மாலை யைச் சுபாவத் திருமேனியில் திருவருளழகு பெற அணிந்த தெனக் காண்க.

115-116. அரியொடு பிரமற் களவறி யாதவன்
பரிமா வின்மிசை பயின்ற வண்ணமும்

(எ - ன) இருவரும் அளவினுற் காணுத நாதன், அடியேன் பொருட்டு என் போதப் புரவிமேல் எழுந்தருளி என்னைத் திருவடி சேரப் பிரேரித்த தெனக் காண்க.

117-118. மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்

(எ - ன) 'பெற்றூர் போக்கற்றூரே' என, மறந்தாலும் இனி இங்கு வாரா வழி அருள்வதான என்னுயிர் நாதனுக்குப் பதி வினவில், அருட்பூமியான தமிழ்ச்சுவை பிறக்கும் பாண்டிய தேசமெனக் காண்க.

119-120. பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்

(எ - ன) நாதன் திருவடியிற் பத்தி மலர் தூவும் வழித் தொண்டடிகளைப் பரமுத்தியிலும் அடிமையென இரட்சிக்கும் சுவாமியின் ஊர் வினவில், அநாதியே சிவஞானம் அருள்வதான திரு உத்தரகோச மங்கையெனக் காண்க.

121-122. ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் றிருப்பெய ராகவும்

(எ - ன) அணு சதாசிவ அட்டமூர்த்திகட்கும் திருவருள் கொடுப்பதான நாதனுக்குத் திருப்பெயர் வினவில், மகாதேவன் எனக் காண்க.

---

115-116. இருவரும் - பிரமனும் அரியும்.

123-124. இருள்கடிந் தருளிய வின்ப வூர்தி
அருளிய பெருமை யருண்மலை யாகவும்

(எ - ன) ஆணவ விருட்டைத் துரக்கும் அருளின்ப அங்கமுடைய நாதனுக்கு மலை திருவருண்மலையெனக் காண்க.

இத் தசாங்கமும் தற்பொருட்டு அநுக்கிரகமென அநுபூதி பெறத்தக்கது.

இனி, சிதம்பரம் வரக் கூவியாண்ட திருவருட் பெருமை யாவன :—

125-126. எப்பெருந் தன்மையு மெவ்வெவர் திறமும்
அப்பரி சதனு லாண்டுகொண் டருளி

(எ - ன) இன்னும், அநேக சுத்தான்மாக்களுக்காக எழுந்தருளி அநுக்கிரகம் செய்ததும், அவர்கள் பேறும் அடியேனை ஆளுவதற் பொருட்டன்றி வேறில்லையானதால்,

127-129. நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல வென்னை யீங்கொழித் தருளி

(எ - ன) கடைச் சன்மமான நாயடியேனைத் "திருவருள் நலம் பொலிவதான தில்லையின்கண் என் வண்ணமான சிற்

---

125-126. எப்பெருந்தன்மையும் எவ்வெவர் திறமும் என்றது விஞ்ஞானகலர், பிரளயாகலர் சகலர் என்ற மூவகையினரையும் அவரவர் திறத்தையும் நோக்கிக் கூறியது.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்

என்ற சிவஞானபோதம் 8ஆம் சூத். 3ஆம் செய்யுளையும் காண்க.

127-131. திறம் கூறுபாடு. இவ்வாலாற்றினைத் திருவாலவாயுடையார் திருவிளையாடலில் காண்க.

ஏல - பொருந்த.

சபையிலே வா" எனத் திருவாய் மலர்ந்தருளி எனது அஞ்ஞானம் முழுதும் ஒழித்து இத்தேகத்திலேதானே, 'இம்மை நின்தாளை என் நெஞ்சத்து வைத்த நாதன்' எனக் காண்க.

130-131. அன்றுடன் சென்ற வருள்பெறு மடியவர்
ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்

(எ - ன) நாதனருளால் அநாதியே குஞ்சிதபாத பர முத்தி பெற்ற அடியார்கள், 'கலந்தபின் பிரிவதில்லை' (திருநாவுக் : 4 : 40 : 4) என, அன்பாலின்புற்று அவர்கட்கு அன்றே பேராநந்தம் அருளியதெனக் காண்க.

132. எய்தவந் திலாதா ரெரியிற் பாயவும்

(எ - ன) இப்பேறுன திருவடி ஞானவுண்மை யடிமைத் திறப்பணி பெறுதவர்கள் நரக வேதனையில் ஆழ்ந்தவுமானுர் களெனக் காண்க.

133. மாலது வாகி மயக்க மெய்தியும்

(எ - ன) சிவராகமோகமுடையார்கள் அந்தத் திரு வடியே கதியான மயக்கமுற்றிருப்பார்களெனக் காண்க.

134-137. [1]பூவல மதனிற் புரண்டு வீழ்ந்தலறிக்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத வென்றழு தரற்றிப்
பாத மெய்தினர் பாத மெய்தவும்

(எ - ன) திருவடி பெறப் பாரில் அழுந்தும்படி புரண்டு நின்றபடி வீழ்ந்து, அலறி அலறி விசை கொண்டோடிக் கடலிலே விழப்போகி, அழுது, காமுற்று, அரற்றி, 'நாதனே! உனைக் காணேனே!' என ஓலமிட்டு, குஞ்சித

132. எய்தவந்திலாதார் - தன்னைக்கலக்க வராதவர் ; தன் அருளை அடையாதவர்

134. (பி - ம்) 1. பூதலம்

138-139. இதம் - இதயம் ; ஹ்ருதயம்

பாதமே பொருளெனப் பரமுத்தி பெறுவதான அடியார், பேறு இம்மையிலே பெற்றுக் கொண்டிருப்பர் எனக் காண்க.

138-139. பதஞ்சலிக் கருளிய பரம நாடகவென்
றிதஞ்சலிப் பெய்த வேங்கின ரேங்கவும்

(எ-ன) வியாக்கிர, பதஞ்சலி யென்னும் திருநாமம் பெற்ற அடியார்க்கு, இரண்டு சிவ சத்தி சொரூபமாதலால்-, அவர்கள் கண்காணச் செய்யும் பரமானந்த நிருத்தம் நமது அன்பினுற் கிடைப்பது எப்போவோ என ஏங்கி அடியார்களும் நிற்பர் எனக் காண்க.

140-144. எழில்பெறு மிமயத் தியல்புடை யம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
யிறைவன்

(எ-ன) அழகு பொருந்திய இமயாசலம் போன்ற ஒள்ளிய நின்மலத் திருவருளழகான பெரும்பற்றப் புலியூரின்கண் விளங்கிய சிற்றம்பலத்திலே நன்னடனமாடுங் குஞ்சிதபாத சேவையை மாயாவடிவான பத்திரகாளிக்கும் அருள்வடிவான சிவகாமிக்கும் தரிசனங் காட்டுவதான திருமுக மண்டலமும் அதனிடமான குமிண்சிரிப்பும் அருளும் நடராசனெனக் காண்க.

144-146. ஈண்டிய வடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே.

(எ-ன) சிவனடியார் தோத்திரம் செய்யும் திருநாம ஒலியும் அருவி பாயுமொலியும் பெருகாநின்ற கயிலையைப்

---

138-139. இதம் - இதயம் ; ஹ்ருதயம்.

பிரத்தியங்கமாகக் கொண்டெழுந்தருளிய பரமசிவன் இப் புவன வாச அடியாரோடும் அழகு பொருந்திய தில்லைத் திருச்சிற்றம்பலத்திலே பேரானந்தவின்ப நடனம் அநுக் கிரகம் செய்து கொண்டிராநின்ற நாதன் எனக் காண்க.

இத்திருவகவலிலே திருத்தலக் கீர்த்தியே பொருளென வருளியதால் அவைக்கு முழுவதும் அநுபூதி காண,

வேதத்தில்,
'ஈசனிடமாம்'
என்றும்,
ஆகமத்தில்,
'மண்ணும் தலமுமாம்'
என்றும்,
புராணத்தில்,
'நற்றுனமுளது'
என்றும்,
சாத்திரத்தில்,
'அருட்டுறையுறையும்'
என்றும் வருவனவற்றுற் காண்க.

கீர்த்தித் திருவகவல் முற்றிற்று.

## 3. திருவண்டப் பகுதி

(தில்லையில் அருளியது)

சிவனது தூலசூக்குமத்தை வியந்தது

(இணைக்குறளாசிரியப்பா)

திருச்சிற்றம்பலம்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் றெரியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமுஞ் சிறப்பு மீற்றொடு புணரிய
மாப்பே ரூழியு நீக்கமு நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியிற்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோ னாடொறும்
அருக்கனிற் சோதி யமைத்தோன் றிருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் றிண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலி னூக்கங் கண்டோ னிழல்திகழ்
நீரி லின்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோ னென்றென்
றெனைப்பல கோடி யெனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயி னடைத்தோ னஃதான்று

முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் றானே காண்க
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறு நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க
அன்னதொன் றவ்வயி னறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழின் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மை யிலையோன் காண்க
இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதி லரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமு மாதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதுஞ் செல்வது மானோன் காண்க
கற்பமு மிறுதியுங் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறு மீசன் காண்க
தேவரு மறியாச் சிவனே காண்க
பெண்ணா ணலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானுங் கண்டேன் காண்க
அருணனி சுரக்கு மமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க

அவனெனை யாட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந் தானு முடனே காண்க
பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா வின்னருள் நுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட வரையுறக்
கேதக் குட்டங் கையற ஓங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாப நீங்கா தசைந்தன
ஆயிடை வானப் பேரியாற் றகவயிற்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தூழூ ழோங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்
துருவ வருணீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட வுழவ ரார த் தந்த
அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க

அருந்தவர்க் கருளு மாதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலு மீர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் மிறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க
நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை ஏற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்
துற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்
மறைத்திற னோக்கி வருந்தினர்க் கொளித்தும்

இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தி னவ்வயி னொளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலின்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் றொடர்மின் விடேன்மின்
பற்றுமி னென்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்னே ரில்லோன் றானேயான தன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்
உளையா அன்பென் புருக வோலமிட்
டலைகடற் றிரையி னார்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழில்நகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையி னெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ

தரியே னாயேன் றானெனைச் செய்தது
தெரியே னாவா செத்தே னடியேற்
கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரைபுரைவித்
துவாக்கடல் நள்ளுநீ ருள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுத மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியே னூன்றழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையு மிருப்ப தாக்கின னென்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

திருச்சிற்றம்பலம்

---

மூன்றாவது

# திருவண்டப் பகுதி

திருவண்டப் பகுதியான திருவருள் விநியோகம் அருளிச் செய்யப் புகுகின்றதாவன :—

[1]இவ்வகவல் இணைக்குறளாசிரியப்பா தில்லையிலே துதித்தது. இவைக்குக் குறுமுனியடிகள் அநுபூதிச் சூத்திரமவையாவன :—

சிவனுடைய தூல விரிவையும் சூக்கும மேன்மையையும் வியந்தது

இவைக்குப் பொழிப்புரையாவன :—

முன் சிவபுராணத்தில் சொரூபத்தைச் சொல்லி, பின் கீர்த்தித் திருவகவலில் தடத்தத்தைச் சொல்லி, இவையில் அந்தச் சொரூப தடத்தத்தின் பெருமையும் நுட்பமும் பெருங் கருணையும் பெறுதற்கருமையும் தூல சூக்குமங்களில் வைத்தது.

அண்டமும் பிண்டமும் ஒன்றாகவே யிருக்கும்; தூல சூக்கும வியாபக வியாப்பியத்தாற் காண்பதாவன :—

உண்டை போலுமிருக்கிற அண்டத்ினது முடியடிகளை விசாரிக்கும்போது, அளத்தற்கரிய தன்மைகளும் வளத்திற் சிறந்த காட்சிகளும் மிகுந்திருக்கிற ஒவ்வோரண்டத்திற்குத் தொகையளவு சொல்லுமிடத்து நூறுகோடி யோசனை அளவாக விருக்கும். அப்படி அளவில்லாத அண்டங்களும் பல உண்டு. அவ்வண்டங்களெல்லாம் சிவனது பெருமைக்கும் அண்டங்களின் பெருமைக்கும் அளவைப் பிரமாணம் சொல்லுமிடத்து ஓர் அண்டத்தின், ஓர் உலகத்தின், ஒரு தேசத்தின், ஒரு நாட்டின், ஒரு வீட்டில், ஓரோட்டையின்கண் சூரியகிரணம் ஓடும்போது அதற்குள்ளே கண்ணுக்குத் தெரிகிற பலவணுக்கள் கூட்டத்தில் ஓர் அணுவென்று சொல்லலாம். அஃதன்றியும், நுட்பத்தைச் சொல்லுமிடத்து விட்டுணு பிரமா ஈறாயுள்ளவர்கள் தூல

1. இவ்வகவல் ஸ்ரீமாணிக்கவாசகரால் தில்லையிலே பாடப்பெற்றது. (திருவாதவூரர் புராணம் : திருவம்பலச்சருக்கம் : 62).

சூக்கும உடல்களில் அதற்கும் சூட்சுமமாக இருப்பர் என்பது அதற்குப் பிரமாண அநுபவம். ஊழிக் காலங்கள் தோறும் இவ்வணுக்கள் தேகங்கள் போக்குவரவு எப்படியென்றால், சூறாவளிக் காற்றில் அகப்படுகிற அணுக்கள் போல விரைவாகவிருக்குந் தன்மைக்குள்ளே யிருந்து பிரேரித்தலால் நுட்பமென்று திருவுளம் பற்றினது.

பெருங்கருணையாவது, மகத்துவம் முதல் அணுவரையிலுள்ள ஆன்மாக்கள் மலத்தைப் பரிபாகப்படுத்துகிற பெருங்கருணை. அது, "முழுதும் படைப்போன் படைக்கும் பழையோன்" (வரி 12-13) என்பது முதல் "அனைத்தனைத்தவ்வயினடைத்தோன்" (வரி 28) என்பது வரை காண்க.

அப்பால் "முன்னோன்" (வரி 29) என்பது முதல் "பிரமன் மாலறியாப் பெற்றியோன்" (வரி 38) என்பது வரை, பெறுதற் கருமையை உணர்த்தினது.

இனி, பதப்பொருளாவன :—

பெருமையும் நுட்பமும்

1\. அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்கம்

(எ-ன) திரட்சி உருட்சியாய் உண்டை போலும் அண்ட பிண்டம் சமமாக விருக்கிற அண்டம் பூமண்டலம்

---

1\. உண்டைப்பிறக்கம் - கோளத்தின் விளக்கம். அண்டம் என்பது முட்டை வடிவமானதைக் குறிக்கும்; ஆகவே உண்டை என்றார்.

பஞ்சாசத் கோடி - ஐம்பது கோடி :—

எழுநூறு யிரத்துடனே யிருபதுநூ றாயிரத்தைத்
தழுவியுறு மொருகோடி சத்தசமுத் திரவிரிவு
மெழுநிலமு மைம்பதினு யிரற்குறைய விவ்வளவே
குழுமியுறும் பஞ்சாசத் கோடிபெருங் குன்றிறுவாய்

(சிவதருமோத் : கோபுர : 77)

மேலேழு உலகங்கள்: பூமி, புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், சனலோகம், தபோலோகம், சத்யலோகம்.

கீழேழு உலகங்கள்: அதல, விதல, சுதல, தராதல, மகாதல, இரசாதல, பாதலம் என்பன.

தீவு ஏழு: நாவலந்தீவு, இறலித்தீவு, இலவந்தீவு, கிரௌஞ்சத்தீவு, குசைத்தீவு, தேக்கந்தீவு, புட்கரத்தீவு.

பிறவாறு கூறுவாறும் உளர்

பித்திகை - அண்டச்சுவர்.

பஞ்சாசத்கோடி, மேலேழு கீழேழுலகம்; தீவு ஏழு; இவற்றைச் சுற்றியிருக்கிற சக்கிரவாளகிரி; அதைச் சுற்றி யிருக்கிற பெரும்புறக்கடல், அவைக்குமேல் பித்திகை; இவை பதினாறு கூடினது பிரக்கிரியை யண்டமென்று கூறப்படும். அவைக்கு மேலுள அண்ட பேரண்டங்கள். அவை, விசுவ விராட்புருடனுடைய ரோமத்துவாரங்களில் தொங்கலாகவே யிருக்கும். அவையும் நாதன் தாளில் வியாப்பியமாகவே யிருக்கும். அவற்றின் விரிவை அண்ட கோசம் சொல்லிய சிவாகமபுராணத்திற் காண்க.

2. அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி

(எ - ன) முற்பத அண்டங்களும் அவைகளில் உள வாகிய லோகாலோகங்களும் ஆன்மாக்களுக்குத் தேக போக ஆயுளும் அளவில்லாத பெருமைக் காட்சியாயிருக்கு மெனக் காண்க.

3-4. ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடி மேற்பட விரிந்தன.

(எ - ன) முற்பத அண்டகோடிகளும் அக்காட்சிகளும் ஒன்றினுக்கொன்று வளப்பக் காட்சி வினவில், நூறு கோடிக்கு மேன்மேலும் அளவு; காட்சி, வியாபக வியாப் பியமாகவே விளங்குமெனக் காண்க.

5-6. இன்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்; தெரியில்

(எ - ன) முற்பத அண்டங்களினது பெருமைக்கும் பரமசிவனது பெருமைக்கும் ஓர் அளவுப் பிரமாணம் தெரிய வினவில், ஆகாசத்தினது நிறைந்த அணுவில் ஓர்

---

1-2. "அண்டப்பகுப்பினையுடைய கோளத்தின் விளக்கம் அளத்தற் கரிய தன்மையையுடைய வளமாகிய பெருங்காட்சியையுடையது;" என்பது பதப்பொருள்.

5-6. இல் நுழை - இன்னுழை. துன் அணு - நெருங்கிய அணு. புரைய - ஒப்ப. சிறியவாகப் பெரியோன் - அண்டம் அணுப்போலச் சிறியதாகப் பரமசிவன் பெரியோன் என்க.

அணு கண்ணுக்குத் தனியே புலப்படாதது வீட்டின் ஓட்டையிலும் பல அணுவாய்க் காணும். அவ்வணுவில் ஓரணுப்போல நாதன்றுளில் அவையெல்லாம் அடங்கி யிருக்குமெனக் காண்க.

முற்பத அண்டகர்த்தாக்கள் ஆகியோர் :—

**7-8. வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியும்**
**தோற்றமும் சிறப்பு மீற்றெடு புணரிய**

(எ - ன) அநேகம் பிரமா விட்டுணுக்களுடைய தூல சூக்கும தேகங்களிற் பஞ்சகிர்த்தியஞ் செய்வதற் பொருட்டு அக்கர்த்தாக்களிலும் சூட்சுமமாக உள்ளிருந்து பிரிப் பின்றி நடாத்துமெனக் காண்க.

**9-12. மாப்பே ரூழியு நீக்கமு நிலையுஞ்**
**சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்**
**தெறியது வளியிற்**
**கொட்கப் பெயர்க்குங் குழகன்**

(எ - ன) முற்பத அண்டபுவன கர்த்தாக்களை ஊழிக் காலங்கடோறும் அவர்கள் பரிபாகப் பொருட்டு அவர்கள் தேகங்களின் போக்கு வரவுக்குத் திட்டாந்தரம் வினவில், சூறுவளிக் காற்றில் முன்சொன்ன அணுவொன்று தனித்து அகப்படுங்கால் என்ன விரைவாக ஓடுமோ, அதி லும் அதிகமாய் நடத்தும் குழகன் எனக் காண்க.

---

7-8. வேதியன் - பிரமன். தோற்றமும் சிறப்பும், வேதியன் தொகையுடனும் மாலவன் மிகுதியோடும் தனித்தனியே கூட்டிப்பொருள் காணலும் ஆம். ஈற்றெடுபுணரிய மாப்பேர் ஊழியும் என்று கூட்டிப் பொருள் காண்பதும் உண்டு. ஈற்றெடு புணரிய - இறுதியடைய என்றும் பொருள் கொள்வர்.

9-12. மாப்பேர் ஊழி - மகாசங்காரகாலம்; நீக்கம் - அழிவு; நிலை - இருப்பு. எறி - வீச்சு; வளி - சிறுகாற்று. கொட்க - சுழல. பெயர்க் கும் - நிலைபெயர்க்கின்ற; திரிக்கும். குழகன் - அழகன்; இளையோன்.

இறைவனது தூலநிலை 1-6 வரிகளிலும் சூக்குமநிலை 7-12 வரி களிலும் கூறப்பட்டுள்ளன. பெரியோன் வேதியன் மால் முதலிய கடவுளரைப் பெயர்ப்பன் என்பது கருத்து.

பெருங்கருணை

12-13. முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன்

(எ-ன) முற்பத புவன உயிர்களை உண்டுபண்ணுவ தான பிரம கிருத்தியத்தை அநாதியே தனது சத்தியால் நடத்துவதொழிய, அக்கர்த்தாக்களுக்குச் செயலில்லை எனக் காண்க.

13-14. படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை

(எ-ன) முற்பதக் கர்த்தா படைத்த சகத்தை வைட்டுணவி (வைஷ்ணவி) என்ற தனது சத்தியாலே இரட்சிப்பதெனக் காண்க.

15. கரப்போன் கரப்பவை

(எ-ன) ருத்திரியாக விருந்து தானொழிய மற்றவை யழிக்கும் திருவருட் சத்தி சொரூபனெனக் காண்க.

15-16. கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்

(எ-ன) முற்பத சிவசத்தியான பராசத்தி ஆன்மாக் களை இரட்சிக்கும் பொருட்டுத் திருவுளங் கருதாத் திரோ

---

12-13. படைப்போன் - பிரமன்; அவனைப் படைக்கும் பழை யோன் என்றபடி.

13-14. காப்போன் - திருமால். காப்பவை என்பதைக் காப்போன் என்பதுடன் கூட்டிப் பொருள் காணலும் ஒன்று. படைத்தவை காப் பவை காப்போன் காக்கும் கடவுள் என்று கொண்டு இங்கு உரை கூறப் பட்டிருக்கிறது.

15-16. கரப்பவை கரப்போன் என்று மாறுக, கரப்போன் - அழிப்பவன்; ஒடுக்கி மறைப்பவன் என்றும் ஆம். அன்றி, கரப்பவை என்பதை அடுத்து வரும் சொற்களோடு கூட்டிப் பொருள் காணலும் ஆம். திருத்தகும் கடவுள் என்க. கரப்பவை கருதாக் கருத்துடைக்கடவுள் என்பதற்கு, மறைக்கப்பட்டவற்றைச் சிலகாலம் நினையாமலிருந்து பின்னர் நினைக்கும் கடவுள், என்றும் பொருள் காண்பர்.

தான சத்தியால் மறைப்பித்து, அவ்வருளே திருவுளப் பிரசாதப்படி மலபரிபாக நிமித்தம் அநுக்கிரகஞ் செய்த பஞ்சசத்தியெனக் காண்க.

**17-19.** **அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்**
**வீடுபேருய் நின்ற விண்ணோர் பகுதி**
**கீடம் புரையுங் கிழவோன்**

(எ-ன) முற்பதப் பஞ்ச கிருத்தியப் பொருளான நாதன் தன்னாலருளிய வேதாகமப்படி பரிபாகதாக சித்தாந்தத்தே சிவன்றான் திருக்கடைக்கண் சாத்திய சைவ சமய முதல் அறுவர்க்கும், அவைக்குள் பேத வபேதாபேத வபேத பக்குவ அறுவர்க்கும், தனது திருவடியான பரம முத்தி யருள்வதன்றிச் சந்நிதானத்தில் அன்பிலாது நிற்கின்ற தேவகூட்டங்களை என்பில்லாத புழுவினும் கடையாய்த் திருவுளத்தடைத்துத் தன் அடியாராக்கி இவர்களை வணங்கிப் பணிசெய்ய அநுக்கிரகம் செய்யும் உரித்தான நாதன் எனக் காண்க. இழிவும்மை யெனக் கொள்க.

**19-20.** **நாடொறும்**
**அருக்கனிற் சோதி யமைத்தோன்**

(எ-ன) முற்பத நாதனான சிவன் அநாதியே உலகத்தை இரட்சிக்கும் பொருட்டுத் தனது சத்தியாற் சோதியை அருக்கனிடத்து வைத்து அதற்குள்ளடங்கிய,

**20-21.** **திருத்தகு**
**மதியில் தண்மை வைத்தோன்**

(எ-ன) சகல ஓஷதிகளைப் பக்குவப்படுத்திச் சீவத்துவம் அளிக்கும் சத்தியைச் சந்திரனிடத்தருளியும்,

---

17-19. கீடம் புரையும் - புழுவை ஒக்கும்.

19-20. அருக்கன் - சூரியன்: நாடொறும் சோதியமைத்தல்; இதனிலமைந்த நுட்பப்பொருளைக் காண்க.

20-21. திருத்தகு மதி; சிவபிரானின் திருமுடியை அழகு செய்யும் பெருமை பெற்றிருத்தலால்.

21-22. திண்டிறல்

தீயின் வெம்மை செய்தோன்

(எ-ன) சகல வத்துக்களையும் அடக்குவதான அக்கினிக்கு வெப்பம் தான் அளித்தும்,

22-23. பொய்தீர்

வானிற் கலப்பு வைத்தோன்

(எ-ன) மலபோதம் உயிர்கட்குத் தீரும் பொருட்டு வானை ஞானகாசமாக நிரந்தர சத்தியை அருளியும்,

23 24. மேதகு

காலி னூக்கங் கண்டோன்

(எ-ன) வாயுவினிடத்து மேம்பட்ட வலிமை யளிக்கும் சத்தியை யருளியும்,

24-25. நிழறிகழ்

நீரி லின்சுவை நிகழ்ந்தோன்

(எ-ன) சர்வ உயிர்க்கும் துப்பாய சலத்தில் இன்சுவைச் சத்தியை யருளியும்,

25-26. வெளிப்பட

மண்ணிற் றிண்மை வைத்தோன்

(எ-ன) உருவக் கருவியான பிருதுவியிலே வலிமையான சத்தியை யருளியும்,

26-28. என்றென்று

எனைப்பல கோடி எனைப்பல பிறவும்
அனைத்தனத் தவ்வயின் அடைத்தோன்

(எ-ன) அநாதியான அண்டகோடிகளில் உளவாகிய உயிர்கட்கும் அவைகட்குக் கருவியாகிய அநேக தத்துவக்

22-23. கலப்பு - வியாபிக்கும் தன்மையென்றும், பொருள்கள் கலந்திருக்கும் தன்மையென்றும் பிறர் பொருள் கூறுவர்.

24-25. துப்பாய - உணவாகிய. 'துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி' (குறள் 12),

கூட்டங்கட்கும் அவற்றைப் பிரேரிக்கும் சத்தியைத் திருவுளத்தடைத்து அதிட்டுக்கும் அட்ட முகூர்த்த சொரூபமெனக் காண்க.

**29. அஃதான்று,**

(எ-ன) இப்போது சொல்லி வந்த பரமசிவத்தை அறிதற்கருமையெனக்கூறி இனி, மேலும் திருவடியைத் துதிப்பதாவன:—

திருவடித்துதி

அன்பர்க்கு அருளும் விநியோகம்

**29. முன்னோன் காண்க**

(எ-ன) முன்னோன் - அறுவகைப் பொருட்கு முன்னமே திருமேனியுடைய நாதன்.

காண்க - வெளிப்பட்டருளுவன் அன்பர்க்கு என்றது (எ-க).

**29. முழுதோன் காண்க**

(எ-ன) சேட்சித்து எங்கணும் தற்பொருளான நாதன் வெளிப்பட்டருள்வன் (எ-க).

**30. தன்னே ரில்லோன் தானே காண்க**

(எ-ன) தனக்குமேல் ஒரு கடவுளும் இலதாதலால் தனக்குத் தானே ஒப்புடைய நாதன் வெளிப்பட்டருள்வன் (எ-க).

**31. ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க**

(எ-ன) முற்பத விநியோகத்தில் மேலொரு கடவுளுமில்லை யென்பதற்கு அடையாளமாக, எவ்வகைத் தேவர்

---

29. அஃதான்று - அஃதன்றி.

31. ஏனம் - பன்றி. எயிறு - பல். இவ்வரியிலடங்கிய வரலாறு, சிவரகசிய காண்டத்தில் தக்ஷகாண்டம் என்னும் பகுதியில் 16ஆவது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

கட்கும் முதன்மையான மகாவிட்டுணுவானவர் எடுத்த வராக முதலான அவதார உருவை நிக்கிரகம் செய்து பற்களை ஆபரணமாகத் தரித்த நாதன் வெளிப்பட்டருள் வன் (எ - க).

**32. கானப் புலியுரி யரையோன் காண்க**

(எ - ன) முற்பத நாதன் அருள்வதான ஞானகாண் டம் தெரியாது கருமகாண்டம் பொருளென வன்புடையா ராகியவர்களால் அனுப்பின புலியை, ஞானமே சித்தாந்த மெனத் தெளியும்படி, நாதன் அரையிலே அடையாள மாகத் தரித்த சுவாமியே வெளிப்பட்டருள்வன் (எ - க).

**33. நீற்ேறான் காண்க**

(எ - ன) பரையாகிய விபூதியைத் திருமேனியில், வெந்த சாம்பல் விரையென அநுபூதி பெறத் தரித்த நாதன் வெளிப்பட்டருள்வன் (எ - க).

**33-34. நினைதொறும் நினைதொறும் ஆற்றேன் காண்க**

(எ - ன) முற்பத உரை சொல்லிய திருவருட்கோலப் பெருமையை அடியேன் ஒருகால் நினைத்து மற்றொரு கால் சிந்திக்க முற்றுப் பெறுதாதலாலும், வெளிப்பட்டருள்வது அன்பர்க்கே என்றமை காண்க.

**34. அந்தோ ! கெடுவேன் !**

(எ - ன) ஐயையோ! கெட்டுப் போவேனே! நாதனே! தேவரீரோ! (எ - க).

---

32. கானம் - தேவதாருவனம். இதன் வரலாறு, கந்தபுராணம் ததீசியுத்தரப் படலத்தில் கூறப் பெற்றுள்ளது.

33-34. ஆற்றேன் - சகியேன்.

**35. இன்னிசை வீணையி னிசைந்தோன் காண்க**

(எ - ன) 'சிவத்துரோகம் செய்த இராவணன் தன் அங்கங்கொண்டு இசைந்த வீணுகானத் தோத்திரஞ் செய்ய வெளிப்பட்டருள்வதான நாதனே! எனை இரட்சிப்பது அருமையோ?' என உள்ளுரை கொள்க.

**36. அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க**

(எ - ன) அந்த அந்த உண்மையும் அவ்வவர் கோட்பாடும் திருவுளமறியா தொன்றில்லையே! அப்பொருளின் அடியேன் வேறல்லவே! நாதனே வெளிப்பட்டருள்வதே! (எ - க).

**37. பரமன் காண்க**

(எ - ன) எல்லா வத்துவுக்கும் மேலான பொருளான தால், பரமசிவனே வெளிப்பட்டருள்வன் (எ - க).

**பழையோன் காண்க**

(எ - ன) அறுவகைப் பொருட்கும் அநாதியான பழைமையோனுனதால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

**38. பிரமன்மால் காணுப் பெரியோன் காண்க**

(எ - ன) அகழ்ந்தும் பறந்தும் திருவடியைக் காணுதாக லாற் பெரியோனுன நாதன் வெளிப்பட்டருள்வன் (எ - க).

---

35. வீணை நாதமாகவும் விளங்குபவன் என்றும் பொருள் கொள்வர்.

36. இவ்வரிக்கு இவ்வியல்பதாகிய (இன்னிசை வீணையின் இசைந்தோனுய் இருக்கும்) தன்மை ஒன்றினை அவ்வீணையில் அறிந்தவன் என்று பொருள் கூறி, இதற்குத் திருட்டாந்தமாக 'விறகுவிற்ற திருவிளையாடலை'க் காட்டுவர்.

37. 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே' (திருவாச. **163**) என்று பின்னும் கூறுவர்.

38. பிரமன் பறந்தும், மால் அகழ்ந்தும் என்று கொள்க.

39. அற்புதன் காண்க

(எ - ன) சுகசொரூபம் சிவனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

அநேகன் காண்க

(எ - ன) ஆன்மாக்களை இரட்சிக்கும் வண்ணம் அவ்வவ்வடிவே சத்தி சொரூபமாதலால் அநேகனென நாதன் வெளிப்பட்டருள்வன் (எ - க).

40. சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க

(எ - ன) வாசகத்துக் கெட்டாத வாச்சியப் பொருள் நாதனே யாதலால் அப்பழையோன் வெளிப்பட்டருள்வன் (எ - க).

41. சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க

(எ - ன) பசு ஞானச் சிந்தனைக் கெட்டாத தூரமுள்ளவனுதலால் வெளிப்பட்டருள்வதே நாதன் (எ - க).

42. பத்தி வலையிற் படுவோன் காண்க

(எ - ன) வன்பர்க்குத் தூரப் பொருளாயிருப்பினும் அன்பரானவர்கட்கு அவர்களாற் செய்யும் திருத்தொண்டான வலையிலே சிக்கும் சிவனுனதால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

43. ஒருவ னென்று மொருவன் காண்க

(எ - ன) அறிவே சொரூபமாக ஆன்மாக்களுக்குள் விளங்கிய நாதன் ஏக வாக்கியப் பொருள் நாதனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

---

41. சேட்சியன் - தூரத்திலுள்ளவன்.

43. ஒருவன் - ஒப்பற்றவன் : தனித்து நிற்பவன்.

44. விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க

(எ - ன) பார் முழுதும் பரப்பிரம்ம சந்நிதியான சருவ வியாபகப் பொருள் நாதனே யாதலால் வெளிப்பட்டருள் வன் (எ - க).

45. அணுத்தருந் தன்மை இலையோன் காண்க

(எ - ன) தற்சுட்டாகிய ஆன்மகுணம் போல் காயத் தடங்கிய பொருளல்லாத பேரறிவான நாதனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

46. இணைப்பரும் பெருமையின் ஈசன் காண்க

(எ - ன) ஒப்புவமானமாக எத்தேவர்களையும் சொல்லு தற் கொண்ணாத ஏக கர்த்தாவாகிய ஈசுவரநாதனே யாத லால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

47. அரியதில் அரிய அரியோன் காண்க

(எ - ன) எப்பொருளை அருமையாக வேதாகம புராணம் பொதுவிற் சொல்லுவதோ அப்பொருட்குச் சிறப்பாக விளங்குவது நாதனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

48. மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க

(எ - ன) எல்லா வத்துக்களையும் அவர்களைப் போலவே உள்ளிருந்து பரிபாகப் படுத்துவது நாதனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

---

44. பொழில் உலகம் : 'ஏழுடையான் பொழில்' (திருக்கோவை : 7).

45. அணுத்தரும் தன்மையில் ஐயோன் காண்க என்று பிரித்தும் பிறர் பொருள் கொள்வர். ஐ, என்றதற்கு நுணுக்கம் என்றும் வியப்பு என்றும் பொருள்.

46. ஈசன் - ஈசுவரன்; ஐசுவரிய முடையவன்; தலைவன்.

49. நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க

(எ - ன) 'நூலும் வேண்டா நுண்ணறிவோர்க்கே' என்றமை, பத்தி கலை ஞானப் பொருள்களுக் கெட்டாத பரஞான நுட்பப்பொருள் நாதனே யாதலால் வெளிப்பட் டருள்வன் (எ - க).

50. மேலோடு கீழாய் விரிந்தோன் காண்க

(எ - ன) எப்பொருட்கும் மேலாகவும் எப்பொருட்கும் கீழாகவும் நிறைந்த சருவ பரிபூரணன் நாதனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

51. அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க

(எ - ன) சகத்தேபோல் உற்பத்தி நாசமில்லாத நிட் கள வியாபகப் பொருள் நாதனே யாதலால் வெளிப்பட் டருள்வன் (எ - க).

52. பந்தமும் வீடும் படைப்போன் காண்க

(எ - ன) ஆன்மாக்களுக்கு அநாதி மலபந்தமும் அவை விடுவதும் நாதனுடைய பஞ்ச கிருத்தியமாதலால் வெளிப்பட் டருள்வன் (எ - க).

53. நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க

(எ - ன) அகில சராசரமான ஊர்வனவும் நிற்பனவும் தானான நாதனாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

54. கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க

(எ - ன) எத்தேவும் இறுதியான கற்பகாலங் கண்டு கொண்டிருப்பது நாதனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

55. யாவரும் பெறவுறும் ஈசன் காண்க

(எ - ன) எல்லா உயிர்க்கும் பக்குவ காலத்தில் திருவடி யருள்வது நாதனின் ஈசுவரத்துவமாதலால் அவன் வெளிப் பட்டருள்வன் (எ - க).

56. தேவரும் அறியாச் சிவனே காண்க

(எ - ன) எத்தேவரும் தம்மறிவதனல் காணும் தகைமையனல்லாத நாதனே சிவனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

57. பெண்ஆண் அலியெனும் பெற்றியன் காண்க

(எ - ன) அவன் அவள் அதுவாகி உபகரிப்பதான பெருமையுடையவன் நாதனே யாதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

58. கண்ணுல் யானும் கண்டேன் காண்க

(எ - ன) ஒன்றுக்கும் பற்ருத யான் எனது என்னும் பசுக்குணமுடைய எனது கண் இன்புறக் கண்டோனுன நாதனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

59. அருள்தனி சுரக்கும் அமுதே காண்க

(எ - ன) தன்னை உள்ளபடி நம்பின அடியார்கட்குத் தேடிய கன்றைக் கண்டவுடன் தாய் முலைப்பால் சுரந்த அன்புபோலச் சிவாநந்த அமிர்தம் பெருகுதலைச் செய்யும் நாதனுதலாலே வெளிப்பட்டருள்வன் (எ - க).

60. கருணையின் பெருமை கண்டோன் காண்க

(எ - ன) அநாதியே என்னை மலத்தை விட்டுப் பிரிப்பதாக எண்ணிய திருவுளமான கருணையைக் காணும் நாதனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

61. புவனியிற் சேவடி தீண்டினன் காண்க

(எ - ன) இப்பூமியின்கண் திருவடி தோய அடியேன் பொருட்டு எழுந்தருளும் நாதனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

62. சிவனென யானும் தேறினன் காண்க

(எ - ன) பசுவான என்னைப் பதியாக்கி வைத்த தெருட்சியுடைய நாதனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

63. **அவனெனை யாட்கொண் டருளினன் காண்க**

(எ - ன) பெருங்கருணை வழக்கால் என்னை அநாதியே அடிமைப்படுத்திய கருணையாளனான நாதனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

64. **குவளைக் கண்ணி கூறன் காண்க**

(எ - ன) திருவளர் மலர் போன்ற கடாட்சமுடைய அம்மைக்குச் சமபாகமளித்த நாதனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

55. **அவளும் தானும் உடனே காண்க**

(எ - ன) பரமசிவனும் பார்ப்பதியும் குணகுணியான அபேதப் பொருளான நாதனுதலால் வெளிப்பட்டருள்வன் (எ - க).

"முன்னோன் காண்க" (29) முதல் இவ்வரை, அன்பர்க்குள் வெளிப்படும் விநியோக மருளி, இனி, "பரமானந்தம்" (66) முதல், "தொண்ட உழவர்" (94) வரை, சிவார்ச்சனை மகிமை அருளிச் செய்வதாவன :—

சிவார்ச்சனை மகிமை

66. **பரமா னந்தப் பழங்கட லதுவே**

(எ - ன) பரமானந்த சிவமென்கிற பொருள்தானே (எ - க).

67. **கருமா முகிலிற் றோன்றி,**

(எ - ன) திரோதான சத்தி வடிவாய மாயையிலெழுந்தருளி (எ - க).

---

65. இங்குக் கூறப்பெற்ற 'ஈசுவரனும் உமையும் குணகுணியான அபேதப் பொருள் என்னும் கருத்தை மறைமலையடிகள் (பக். 209) மறுத்து அவரிருவரும் தனித்தனிப் பொருள்களே என்று நிறுவுகிறார்.

67. முகிலின் தோன்றி - முகிலைப் போலத் தோன்றி என்றும் ஆம்.



**68. திருவார் பெருந்துறை வரையி லேறி,**

(எ - ன) திருவருளழகு பொருந்திய திருப்பெருந்துறையான திருவருள் மலைமேல் வியாபகமாகி (எ - க).

**69. திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய,**

(எ - ன) முற்பத வியாபகப் பொருளான அறிவானந்த மின்னொளி சருவ ஆன்மாக்களின் பரிபாகப் பொருட்டு, 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்'ப் பிரகாசித்தது (எ - க).

**70. ஐம்புலப் பந்தனை வாளர விரிய,**

(எ - ன) முற்பதச் சிவானந்தக் கருணை வியாபக வொளி பிரகாசிக்கும்போது, பஞ்ச விந்திரியமான புலாதிப் பாம்பு கெட்டோட, (எ - க).

**71. வெந்துயராக் கோடை மாத்தலை கரப்ப,**

(எ - ன) வெப்பமாகிய இருவினைத் துன்பப் பிறவித் துயர்க் கடுங்கோடை விருட்ச சாகோபசாகைகள் ஒளித்தோட (எ - க).

**72. நீடெழில் தோன்றி வாளொளி மிளிர,**

(எ - ன) முற்பதக் கருணை மேகமானது தனித்தனியான பரம சிற்சத்தியைப் பிரேரித்து சிவஞான வொளியாகத் திருவருணோக்கம் பாலிக்க (எ - க).

---

70. வாள் - கொடுமை; ஒளி.
அரவு இரிய.

71. (பி - ம்). வெந்துயர்க். மாத்தலை கரப்ப - தன் பெரிய தலையை ஒளித்துக் கொள்ள என்றும் பொருள் கொள்வர். சாக உப சாகைகள் - கிளைகளும் கொம்புகளும்.

72. தோன்றி என்பதற்குத் 'தோன்றிப்பூ' என்றும்,

73. எந்தம் பிறவியிற் கோப மிகுத்து,

(எ - ன) எனது சனனத் துன்பத்தின் பேரில் பெருங் கருணை பொங்கி (எ - க).

74. முரசெறிந்து,

(எ - ன) நாதப்பறை முழங்கி (எ - க).

மாப்பெருங் கருணையின் முழங்கி,

(எ - ன) முற்பத நாத விந்துவான தத்துவங்களைத் திருவருளால் பிரேரித்து (எ - க).

75. பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட,

(எ - ன) முற்பதப் பிரேரகத்தால் ஒள்ளிய காந்தள் மலர் விரிந்தது; அத்திருக்கருணைத் திருவருளைக் கண்டு அடியேன் அஞ்சலி செய்ய, (எ - க).

76. எஞ்சா இன்னருள் நுண்டுளி கொள்ள,

(எ - ன) நித்தியானந்தத் திருவருள் எனது உளத்தில் அதீதப்பட்டு ஆனந்தபாட்ப சிவஞான மழைத்துளி மேன் மேலும் பொழிய (எ - க).

77. செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட,

(எ - ன) முற்பத சிவானந்தத் துளி பெருகிச் செம் பொருள் காண்பதான சிவானந்தப் பிரகாச வெள்ளம் பூரணமாய் நிறைந்தோடித் தேங்க, (எ - க).

வரையுற,

(எ - ன) முற்பதச் சிவானந்தமான கருணைப் பெருக்க மலையான சமய பேதங்களிலெல்லாம் அறிவாய் இப்பொருளாய்க் கோட்பாடு கொள்ள, (எ - க).

---

73. 'கோபம்' என்பதற்கு' இந்திர கோபம்' என்றும் பொருளுரைப்பர் பிறர்.

75. 'தாமரை மலரை ஒத்த கைகள் கூப்பிக் காந்தண்மலரை ஒப்ப நிற்க' என்றும் பொருள் கூறுவர்.

77. 'வரையுற' என்றதற்குக் கூறப்பெற்ற இவ்வுரைநுட்பம் கவனிக்கத் தக்கது.

78. கேதக் குட்டங் கையற வோங்கி,

(எ - ன) முற்பதக் கருணைவெள்ளம் 'யான் எனது' என்ற பொய்ப்போதக் குளமானது திருவருளாற்கெட்டுச் சத்தியபோதம் பூரணமாயோங்கி, (எ - க).

79-82. இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாப நீங்கா தசைந்தன

(எ - ன) முற்பதக் கருணை வெள்ளம் எங்கும் பெருகி நின்றபோது உலகாயதன் முதல் மாயாவாதி ஈறாக அறுவகைச் சமயத்தோர்கள் கானலைச் சலமென்று ஓடித் தவிக்கும் மான்கூட்டம்போல் திருவடி ஞானமின்றி ஐயமுற்றுங்....அறிவின்றித் திருவருட் சகாயமின்றித் தவித்து நிற்பச் சிவஞான சமயத் தவத்தின் வழித்தாய்த் ததும்பிப் பெருகின. (எ - க).

83-85. ஆயிடை வானப் பேரியாற் றகவயின்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்து,

(எ - ன) முற்பதக் கருணை வெள்ளம் ஆகாசம் வரை முட்டி, ஞானசக்தியான ஏரிவாய், ஆற்றுவாய், பாய்ந்தெழுந்து பேரின்பச் சுழி சுழித்தது (எ - க).

85. எம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்து

(எ - ன) முற்பதச் சிவானந்தக் கருணைவெள்ளம் அதிவிரைவாய் ஓடி வரும்போது எனது பஞ்சபாசக் கட்டான பெருங்கரையை ஞானத்தால் இடிப்பன் என்றபடி இடித்து, (எ - க).

---

78. கேதம் - துன்பம்.

79-82. தவப்பெரு வாயிடைப்பருகி - மிகப்பெரிய தம் வாயினல் குடித்து, என்றும், தவமாகிய பெரிய வாயினல் பருகியென்றும் பொருள் கொள்வர். கொழித்து - தெளித்து.

83-85. ஆயிடை - அவ்விடத்தே. கரை பொருது அலைத்து இடித்து. பொருது - முட்டி.

86-88. ஊழ்ஊழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்து
உருவ,

(எ - ன) அக்கருணை ஞான வெள்ளம் அநாதியாய் எனைத்தொடர்ந்ததான கன்ம வழியிலுளதாகிய இருவினை மாவிருட்சத்தை வேரோடுங் களைந்துருவியோட, (எ - க).

88-90. அருள் நீ ரோட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி, மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி

(எ - ன) முற்பத ஞான வெள்ளம் என்னை விட்டுப் போகாதபடி அருமை உரிமையான சந்தன விருட்சத்தால் அணைகோலி, சிவமணம் வீசிய மலர்க் குளவாய் கோலி, (எ - க).

90-92. நிறையகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள,

(எ - ன) நிறைவான அகில் முதலான வாசமல திரவியங்கள் வரம்பும் சைவ சித்தாந்த வளமும் பொருந்திய வயலில் மேன்மேலும் சிவானந்த வெள்ளநீர் பூரணமாக, (எ - க).

92. மேன்மேன் மகிழ்தலி ஞேக்கி

(எ - ன) என்னுள்ளத்தில் புதிது புதிதாகத் திருவருள் நோக்க, இன்ப வெள்ளம் திருவடி ஞானத்தால் உள்ளே நோக்க, (எ - க).

---

86-88. ஊழ்ஊழ் - முறை முறையாய். உருவ என்பதனை அருளோடும் கூட்டி உரைப்பர்.

88-90. மட்டு அவிழ் வெறி மலர்க் குளவாய் கோலி - தேன் விரிகின்ற மணத்தையுடைய மலர்கள் நிறைந்த குளங்களின் இடங்களை வளைத்து என்க.

90-92. வண்டுடை குளத்தின் மீகொள - வண்டுகளையுடைய குளத்தின் மேற்கொள்ள.

86-92. சிவானந்தம் அடியார்களை அடைதலும் அதனை அவர்கள் காப்பதுமான அரிய செய்திகள் ஓர் அழகிய உருவகத்தால் கூறப்பெற்றன.

93. அருச்சனை வயலுள் அன்பு வித்திட்டு

(எ - ன) முற்பதத் திருவருளாகிய வயலிலே, "என் அறிவு மலரால் அர்ச்சனையே பரமுத்தியென என் பூசையும் நேசமும் யானும் உனக்கெங்கே?" என, அடிமைத்திற அன்பாகிய விதையை அவனருளால் விதைத்து, (எ - க).

94. தொண்ட உழவர் ஆரத் தந்த

(எ - ன) திருத்தொண்டடிகளாகிய நாயன்மார்கள் சிவபணி உழவு செய்ய அடிமை விலாசம் அளவளாவி நாதன்றுளே பரமென நிற்பதென அநுக்கிரகம் செய்தது. (எ - க).

95. அண்டத் தரும்பெறல் மேகன் வாழ்க!

(எ - ன) முற்பதப்படி அநுக்கிரக கர்த்தா தேவர்கட்கரிய மகாதேவர் சிவஞானமான மேகமானது கைம்மாறின்றி இரட்சித்த நாதன் உளத்தில் பிரியாதிருக்கவென அருளியது (எ - க).

96. கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க!

(எ - ன) எனது பாசம் தீர்தற்பொருட்டுப் பரிதிருப்த சத்தியாகிய கரிய நிறம் பொருந்திய பணத்தையுடைய சர்ப்பத்தைக் கச்சையாகத் திருமேனியில் தரித்த நாதன் எனதுள்ளத்திற் பிரியாதிருக்க (எ - க).

---

93. அருச்சனைக்குரிய வயலில் அன்பாகிய வித்தை இட்டு என்க.

93-95. ஆற்றகவயின் சுழி கொழித்து, இடித்து, பறித்து, எழுந்து, உருவ, கட்டி, கோலி, நோக்கி, இட்டு, தந்த மேகன் எனப்பொருள் முடிவு செய்க. சிவபெருமானை மேகன் என வாழ்த்தியதற்கேற்ப, அதன் தன்மையையும் தொழிலையும் பயனையும் வரி 66 முதல் 95 வரையில் விளக்கிக் கூறினர். உரை நுட்பம் ஆராய்ந்து மகிழ்தற்குரியது.

94. ஆர - உண்ண.

96. பணம் - படம்; பாம்பு. கச்சை - அரைக்கச்சை.

97. அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க!

(எ - ன) தன்னை உள்ளபடி அறிந்து வழிபடும் அடியவர்கட்கனுக்கிரகஞ் செய்யும் அநாதியான நாதன் எனது உளத்திற் பிரியாதிருக்க (எ - க).

98. அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க!

(எ - ன) இனிப் பிறவா வண்ணம் அச்சம் தீர்வதற் பொருட்டு எனது போதப்பரி மேலெழுந்தருளிய பிரியரான நாதன் எனது உளத்திற் பிரியாதிருக்க (எ - க).

99. நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க!

(எ - ன) எனது பிறவித் துன்பந்தீர என்னை வலிய இழுத்து அடிமைப்படுத்திக் கொள்ளும் நாதனுனவன் எனது உள்ளத்திற் பிரியாதிருக்க (எ - க).

100. சூழிருந் துன்பம் துடைப்போன் வாழ்க!

(எ - ன) எனது ஊழாற் சூழ்ந்த, 'இருள்சேர் இருவினை சேரா' (குறள் 5) வண்ணம் சங்கார கிருத்தியம் செய்யும் நாதனே எனது உளத்திற் பிரியாதிருக்க (எ - க).

101. எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க!

(எ - ன) தன்னை உள்ளபடி நண்ணினர்க்கு நல்லனுன ஞானநாதனுனவன் அமுதளிக்கும் எனது உளத்திற் பிரியாதிருக்க (எ - க).

---

97. தவர் - தவசி; இங்குத் தொண்டர் என்று கொண்டார்.

98. சேவகன் - வீரன்.

99. நிச்சல் - தினந்தோறும்; நித்யம் என்பதன் திரிபு. நிச்சலும் ஆட்கொள்ளவேண்டிய இன்றியமையாமை ஆய்ந்தறியற்பாலது.

102. கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க!

(எ - ன) என்னைப் பரமுத்தியில் விடும் பொருட்டு மகா கேவலத்தினின்று மாமாயை.....................ஞ் சூக்கும பஞ்ச கிருத்திய நடனஞ் செய்யும் நாதன் எனது உளத்தில் பிரியா திருக்க (எ - க).

103. பேரமைத் தோளி காதலன் வாழ்க!

(எ - ன) 'வேயுறு தோளி பங்கனு'ன (ஞானசம்பந்:2:221:1) நாதன் எனது உளத்திற் பிரியாதிருக்க (எ - க).

104. ஏதிலர்க் கேதில்எம் இறைவன் வாழ்க!

(எ - ன) தன்னை வேறாக நினைக்கும் எத் தேவான ஆன்மாக்களையும் பரிபாகம் செய்யும் வண்ணம் அவர்களைப் போலவே எழுந்தருளி நிக்கிரகம் செய்யும் நாதனுனவன் எனதுளத்திற் பிரியாதிருக்க (எ - க).

105. காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க!

(எ - ன) கலைஞானியர் காதலனுன நாதன் அவர்கள் தற்போத விறுதியில் திருவருட்போத சேம வைப்பாக நின் றருளும் நாதன் எனது உளத்திற் பிரியாதிருக்க (எ - க).

---

102. குனித்தல் - வளைந்தாடுதல்

"'கூரிருட் கூத்தொடு குனிப்போன்' என்றது உயிர்கள் தம் அறிவு செயல் வேட்கைகள் ஒடுங்கிக் கேவல நிலையில் ஆணவவல்லிருளில் இடையிடையே அழுந்திக் கிடக்கும் காலத்தும், இறைவன் அவர் பொருட் டுச் செய்யும் ஐந்தொழிற் கூத்தை ஓவாது இயற்றுவான் என்பதை அறி வித்தவாறும். மேலும், 'நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே' என் றருளிச் செய்தார்" (மறைமலையடிகள் : பக். 220).

104. இவ்வடிக்கு 'அயலார்க்கு அயலவனுயிருக்கும் எம் தலைவன் வாழ்க' என்று பிறர் பொருள் கொள்வர். இவ்வுரையின் நுட்பம் ஆரா யத் தக்கது.

105. எய்ப்பு - இளைப்பு.

106. *நச்சர வாட்டிய நம்பன் போற்றி!*

(எ-ன) என் மலபோத விஷப்பாம்பைத் தன் வச மாக்கி, 'ஆட்டுவித்தாலாரொருவர் ஆடாதார்", (திருநாவுக்: 6:95:1) என்ற அநுபூதிப்படி குஞ்சிதபாத நிருத்தத்தில் ஓயாது ஆட்டுவித்து அடக்கும் நாதன் என்னை இரட்சிக்க (எ-க).

107. *பிச்செம்மை யேற்றிய பெரியோன் போற்றி!*

(எ-ன) கலந்து பலியிடுவதான எனது உயிரைப் பலி யாகக் கொள்ளும் என்னைப் பித்தனுக்கும் பெரியோனன மகாதேவன் என்னை இரட்சிக்க (எ-க).

108. *நீற்றெடு தோற்ற வல்லோன் போற்றி!*

(எ-ன) எனது பாச விமோசன நிமித்தம் பரையாகிய நீற்றெளியொடு எனது கண்ணின் இன்புற எழுந்தருளும் நாதனைவன் என்னை இரட்சிக்க (எ-க).

108-109. *நாற்றிசை*

*நடப்பன நடாஅய்க்*

(எ-ன) எந்தப் புவனத்திலும் நாம் நடப்பினும் எனக் குள்ளிருந்து நடாத்திய நாதன் (எ-க).

109. *கிடப்பன கிடாஅய்*

(எ-ன) எப்புவனத்தில் நான் வசித்தாலும் என்னுள் ளிருந்து வசிக்கும் நாதன் (எ-க).

110. *நிற்பன நிறீஇ*

(எ-ன) நான் எப்புவனத்தில் நின்றாலும் என்னுள் நிற்கும் நாதன் (எ-க).

---

107. பிச்சு - பித்து.

109. கிடப்பன கிடாஅய் - கிடப்பனவற்றைக் கிடத்தி.

109-110. நடப்பன, கிடப்பன, நிற்பன என்பவற்றிற்கு 'நடப்பன வற்றை, கிடப்பனவற்றை, நிற்பனவற்றை' என்றும் பொருள் கூறுவர்.

**111. சொல்பதங் கடந்த தொல்லோன் ;**

(எ-ன) முற்பதப்படி, சென்றுழிச் சென்று புக்குழிப்புகும் நாதனனுலும் வாசகத்துச் கெட்டாத வாச்சியப் பொருளெனக் காண்க.

**112. உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன் ;**

(எ-ன) தன்னறிவதனுற் காணும் தகையனல்லன் (எ-க).

**113. கண்முதற் புலனுற் காட்சியு மில்லோன் ;**

(எ-ன) உயிரினேடு உணர்வு பற்றுவதான இந்திரியக் காட்சி முதலான தத்துவ போதத்துக்கு எட்டாதவன் (எ-க).

**114. விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன் ;**

(எ-ன) முற்பத ஆன்ம சிற்சத்தியால் அளவிடப் படாத பொருளாயிருந்தாலும் ஆகாசம் முதல் சகல தத்துவங்களையும் அதிட்டித்து எழுந்தருளிய நாதனெனக் காண்க.

**115-116. பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்**
**ஒழிவற நிறைந்து மேவிய பெருமை**

(எ-ன) பூவினிற் கந்தம் பொருந்தினவாறேபோல் சீவனுக்குள்ளே சிவமணம் பொருந்திச் சேட்சித்து எங்கணும் சருவவியாபகமான பொருளுடைய பெருங்கருணை (எ-க).

**117. இன்றெனக் கெளிவந் தருளி**

(எ-ன) என் பொருட்டுப் பெருங்கருணையால் நிட்களமே சகளமாக எழுந்தருள்வதான நாதன் (எ-க).

---

112. உள்ளத்துணர்ச்சி - மனவுணர்ச்சி.

111-113. வாக்காலும், மனத்தாலும், மெய்யாலும் அறியப்படாதவன் என்று கூறப்பட்டதாம்.

117-119. அடுத்த அடியிலும், 'இன்றெனக் கெளி வந்து' என்று உடனுக்குடனே கூறிய அடிகளின் மனப்பான்மை கருதத்தக்கது. 'இன்றெனக்கருளி' என்று பின்னும் கூறுவர் (திருவாச. கோயில் : 7)

118-119. அழிதரும் ஆக்கை யொழியச்செய்த
[வொண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி!

(எ - ன) முற்பத நிட்கள சிவன், சகள சிவனுன பரம குருவே என்பொருட்டு என்போல் எழுந்தருளி அநித்திய காயம் கழிய அருள்பவரான நாதன் என்னை இரட்சிக்கக் கடவன் (எ - க).

120. அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி!

(எ - ன) இத்தேகத்தை இப்படியே முத்தனுகச் செய் தருள்பவரான நாதன் என்னை இரட்சிக்கக் கடவன் (எ - க).

121. ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி!

(எ - ன) எனதுள்ளத்தில் திருவருள் இன்பப்பெருக்கு ஊற்று ஊறுதல்போல் எனக்கு இன்பூறி விளங்கும் சிவா நந்தக் களிப்பான நாதன் என்னை இரட்சிக்கக் கடவன் (எ - க).

122. ஆற்ரு இன்பம் அலர்ந்தலை செய்ய,

(எ - ன) ஒருவராலும் புசிக்கப்படாத பேரின்பமென் னுயிரின் நிறைவாகிச் சிவாநந்த வெள்ளம் உள்ளலைப்பாக என்னை அலைத்தது (எ - க).

---

120. அளிதரும் ஆக்கை செய்தோன் என்றதற்குக் கனிந்தழிகின்ற உடம்பைப் படைத்தோன் என்றும் பிறர் பொருள் கூறுவர். 'ஊனுடம்பை அதன் வாலாமை நீக்கி அன்பாற் குழையும் இன்ப உடம்பாக்கித் தமக்கருள் செய்த பான்மை கூறினர்' என்பர் மறைமலையடிகள் (பக். 224).

119-120. 'அழிதரும் ஆக்கை' என்றும் 'அளிதரும் ஆக்கை' என்றும் யாக்கையின் இழிவு சிறப்புக்களை அடுத்தடுத்துக் கூறிய நயம் நோக்கற் பாலது. 'மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே (திருநாவுக் : 4 : 81 : 4 : 4) என்பதையும் நோக்குக.

122. அலர்ந்து - பரவி, அலை செய்ய - அலைகளை எழுப்ப,

123. போற்று ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்!

(எ - ன) "நாதனே! தேவரீர்க்கு அடாத இவ்வாக்கையைத் திருமேனியாகக் கொண்ட கருணையை அடியேற் கருளிச் செய்ய வேண்டும்" என ஆராமையுற்று வியந்தது (எ - க).

124-126. மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்,

(எ - ன) அநேக பச்சை மாணிக்கச் சோதி விளங்கிய தெனவே, நாதன் திருமேனியில் ஒரு பாகம் தேவியும் மின்னுருப்போல, திருச்சடையும் பொன்போல, மற்றொரு பாகத் திருமேனியும் விளங்குவதான திருமுடியை அநேக கோடிகாலம் பிரமன் தேடியும் காணாது உள்ளே ஒளித்தது (எ - க).

தேடினர் என்ற பன்மையால் இருவரும் அடிமுடி தேடிய தெனக் கொள்க.

127. முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்

(எ - ன) சிவாகமத்தில் அருளியபடி யோகநிலை பொருந்தச் சுழிமுனை மார்க்க உள்ளொளியே பொருளென அவ்வொளி பெற முயற்சி செய்யும் அவர்கட்கு வெளியே நின்றொளிக்கும் நாதன் (எ - க).

128.129. ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்(து)
உற்றவர் வருந்து முறைப்பவர்க் கொளித்தும்

(எ - ன) திருவடி ஞானத்தில் ஒத்த கருத்தினர்க்கு அருள்நோக்கம் பொருளென உள்ளத் தெளிவுடையோர்

---

123. பொறுத்தல் - தாங்குதல்.

124-126. குவால் - திரள். பிறக்கம் - ஒளி. இருவரும் - திருமாலும் நான்முகனும்.

127. முறையுளி ஒற்றி - நியமப்படி அடுத்து முயன்று. இங்கு முறையுளி என்றதற்குச் சிவாகம நூலிற் கூறப்பெற்ற யோக முறைப்படி எனப்பொருள் கொண்டனர்.

129. (பி - ம்). வருந்த உறைப்பவர்.

எப்போது சிவஞானம் கிடைப்பதென அடிமைத் திறமுற்று வருந்தும் பொருளை, ஞானமிலாத வைராக்கியம் நன்றன்ருதலால், அவ்வைராக்கியத்துக்கு எட்டாது ஒளித்தும் (எ - க).

130. மறைத்திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்

(எ - ன) ஆதிமறை நூலோதி அதன் பயனென்றும் அறியா வேதியர் செய்யும் முயற்சிக்குத் திருவருள் ஞானம் எட்டாது ஒளித்தும், (எ - க).

131-132. இத்தந் திரத்திற் காண்டுமென் [றிருந்தோர்க்கும்
அத்தந் திரத்தின் அவ்வையி னொளித்தும்

(எ - ன) தற்போதத்தால் தந்திர மந்திரக் கிரியா யோக ஞானத்தால் பரப்பேறு பெறலாம் என்றவர்கட்கு வெளிப் படாது முக்கலைப் பொருளாய் ஒளித்ததெனக் காண்க.

133-135. முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாள்நுதற் பெண்ணென வொளித்தும்

(எ - ன) இச்சகத்தில் நிக்கிரக அனுக்கிரகம் செய்யும் பொருட்டு அவனவளது என்ற மூவகையுமாக நின்றொளித்த தெனக் காண்க.

---

133-135. முனிவற நோக்கி......ஒளித்தும்—“ அவ்வச் சமயவழி நின்று ஒழுகி இறைவனைத் தாந்தாம் அறிந்தவாறு வழுத்தி அன்பராய் இருக்குநரை எல்லா இரக்கமுமுடைய இறைவன் வெறுப்பின்றி நோக்கி அவரைப் பற்றிக் கொண்டு அருள்புரியுமிடத்தும், தன்னைப் பெண்ணுரு வாய்க் கருதி வழிபட்டார்க்கு அதற்கு மாறுன ஆணுருவிற் றேன்றியும், ஆண் பெண் என்னும் இரு திறமுங் கலந்த வுருவில் வழிபட்டார்க்கு அவ்விரண்டுமல்லா அலியுருவிற்றேன்றியும், ஆணுருவாய்க்கொண்டு வழி பட்டார்க்கு அதற்கு மாறுன பெண்ணுருவிற் றேன்றியும் அவ்வவர் அறி வின் சிற்றளவினையும் அதற்கு அகப்படாத தன்னியல்பின் பேரளவினை யும் தெரித்தருளுவான் என்பது உணர்த்துவார் ‘முனிவற நோக்கி நனவரக் கௌவி, ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து, வாணு தற் பெண்ணென வொளித்தும்’ என்றருளிச் செய்தார். (மறைமலை யடிகள் பக். 229-230).

135-138. சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத் தருவரை
[தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும்

(எ-ன) இற்றைவரை இசைந்தும் ஏதும் பழக்கமில்லா வெற்றுயிரானவர்கள் வெளியிலே ஐம்புலன்களேயும் செலுத்தி, குன்றத்தின்கண் வெயில், மழை, குளிர், இவை முதலான துன்பம் பொறுத்துத் திருவடி ஞானம் கிடைக்கச் சந்நியாசம் பூண்ட அருந்தவத்தோர்கட்கு வெளிப்படாது உள்ளே ஒளித்தது (எ-க).

139. ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்

(எ-ன) பிரமம் ஒன்று உண்டு என்றும் அது புலப் படாத வத்து என்றும் விவேகிக்கும் அவர்கட்கு வெளிப் படாது உள்ளே அறிவாகவே ஒளித்தது (எ-க).

140.141. பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்

(எ-ன) அநாதியான அன்றுமுதல் இன்றளவும் அவ் வின்பப் பொருளான நாதன், 'உள்குவார் உள்கிற் றுட னிருந் தறியும் கள்வனைத் தேடி நாடிக் கண்டு கொண்டேன் ஓர் மொழியாற் கயிலையிலிருந்தபடி' (எ-க).

142-145. ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்

(எ-ன) இப்போது பிரத்தியட்சமாகக் கண்ட பொருளை அன்பினல் ஆராமை மீக்கொள ஆற்றுங்கள்!

---

135-138. துற்றவை - புலநுகர்ச்சிப் பொருள்களை.

145. பற்று - பிடிப்பு. பற்றுமுற்றொளித்தும் என்பதற்கு, அவர் பிடிப்புக் கடங்காமல் நழுவியும் என்பது ஒரு பொருள்.

நால்வகை மலர்களாற் பூமாலே புனேந்து திருவடியில் சாத்துங்கள்! பிரதக்ஷிணம் செய்யுங்கள்! இடைவிடாது அருட்பணி செய்யுங்கள்! சந்நிதியிற் சமாதி செய்யுங்கள்! இவ்வகைச் செய்யுமவர்கட்கும் கண்ட பொருளே வேறென்றவர்கட்கும் அவர்க்குள்ளே ஒளித்தது (எ-க).

146. தன்னே ரில்லோன் [1]தானேயாய தன்மை

(எ-ன) தனக்குமேல் ஒரு கடவுளும், ஒப்பும், உவமையும் இல்லாத நாதன் தன் திருவுளக் கிருபையால் தானே வந்து அநுக்கிரகம் செய்யும் பெருமையுடையவன் (எ-க).

147-148. என்னே ரனேயோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி,

(எ-ன) ஒன்றுக்கும் போதாத என் போலியானவர்கட்கு வெளிப்பட்டு உபதேசமான வேதாந்த வத்துவைப் புலப்படக் காட்டி எனே அடிமைப்படுத்தி யருள்வதான நாதன் (எ-க).

149. மறையோர் கோலம் காட்டி யருளலும்,

(எ-ன) உத்தம விப்பிர வர்க்கமான பரமகுருவாய் எழுந்தருளியது (எ-க).

150. உளேயா அன்பு என்புருக,

(எ-ன) முற்பதப் பரமகுருவைக் கண்டவுடன்றானே திருவருளால் வரும் அன்பு வந்து என்பு உருக, (எ-க).

---

146. (பி-ம்) 1 தானேயான. தானேயாய தன்மை - தனக்குத் தானேயாய் உள்ள இயல்பு.

147-148 அறைகூவி ஆட்கொண்டு - பொர அழைத்து அடிமையாக்கிக் கொண்டு; ஈசுவரன் வலியவந்து ஆட்கொண்டதை வியந்தது.

150. உளேயா - உளேந்து; உளேயா அன்பு என்றும் கூட்டி உரைக்கலாம். அப்பொருளில் உளேயா என்றதற்கு வெருத அன்பு என்று பொருள் கொள்க.

**150-151. ஓலமிட்டு,**

**அலைகடல் திரையின் ஆர்த்தார்த் தோங்கி,**

(எ - ன) உள்ளத்தின்கண் நெகிழ்ந்த, 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்' (குறள் 71) என்றபடி அடைப்பு இல்லாததாதலால் அவை பெருகி ஓலமிட்டுச் சமுத்திரம் சந்திரனைக் கண்டவுடன் மேன்மேலும் பொங் கித் திரையால் சத்தித்ததுபோல் என் உள்ளம் அவ்வகை கொள்ள, (எ - க).

**152. தலைதடு மாறு வீழ்ந்துபுரண் டலறி,**

(எ - ன) அன்பு பெருக்க, மோகத்தால் தலைதடுமாற் றம் கண்டு கீழே வீழ்ந்து அங்கப் பிரதக்ஷிணம் செய்து உளறி அலறு நின்று, (எ - க).

**153. பித்தரின் மயங்கி,**

(எ - ன) அவ்வாராமை மயக்கம் பித்தர்களைப் போல இருவினையும் தெரியாதெனக் காண்க.

**153. மத்தரின் மதித்து,**

(எ - ன) உன்மத்த தசையாகி (எ - க).

**154. நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும்**

(எ - ன) முற்சொல்லிய வகையாகத் திரியும்போது கண்ட உலகத்தார்கள் பயமுறவும், இவை கேட்போர்கள் திகைக்கவும், (எ - க).

---

151. அலை கடல் - அசையும் கடல். ஆர்த்து ஆர்த்து - இடையறுது ஆரவாரித்து.

153-154. இருவினை - நல்லது, தீயது.

இவ்வரிகளின் அமைந்த கருத்தைப் பின்வரும் சிவஞானசித்தியார் (சூ. 32) பாடலுடன் ஒப்பிட்டுக் காட்டுவர் மறைமலையடிகள்

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோர்க்கு
நன்மையொடு தீமையிலை ; நாடுவதொன் றில்லை
சீலமிலை ; தவமில்லை ; விரதமொடாச் சிரமச்
செயலில்லை ; தியானமிலை ; சித்தமல மில்லை ;
கோலமிலை ; புலனில்லை ; கரண மில்லை ;
குணமில்லை ; குறியில்லை ; குலமு மில்லை ;
பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப்
பாடலினே டாடலிவை பயின்றிடினும் பயில்வர்.

155-156. கடக்களிறு [1]ஏற்றத் தடப்பெரு மலத்தின்
ஆற்றே னாக

(எ - ன) என் எதிரே வரும் மதயானையைக் கண்டும் என் மதம் அவ்யானை ஆற்றாதுபோல நிற்பதாக (எ - க).

156-157. அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்

(எ - ன) முற்பதப் பயன்படி திரியுமென்னை என்போல் எழுந்தருளிய நாதன் ஓரிந்திரிய இன்பத் தேனல்லாது, எல்லா இந்திரியங்களும் பேரின்பமான முடிவிலுள்ள திருவடிஞானத் தேனை எற்கு அருளிச் செய்தனன் (எ - க).

---

155-156. (பி - ம்) 1. எற்றாத்.

கடம் களிறு ஏறு ஆ - 'தடப்பெருமதத்தின் மதயானை மதித்த இடபம்போல மிகப்பெரிய மதத்தால்' என்றும், 'மத நீரினையுடைய ஆண்யானை தன்மேற்பாகனை ஏறவிடாமைக்குக் காரணமாய் அடைந்த மிகப்பெரிய மதாளிப்பினைப்போல' என்றும் பிறவாறு பொருள் கொள்வர்.

156-157. கோற்றேன் - கொம்புத்தேன்.

158-160. ஏற்றூர் மூதூர் எழில்நகை யெரியின்
வீழ்வித் தாங் கன்று
அருட்பெருந் தீயின்

(எ - ன) திரிபுர தகனம் செய்யும்போது அது திருவருள் நோக்கத் தீயாதலால் நண்ணூரை எரிசெய்ததெனக் காண்க.

160-161. அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்

(எ - ன) நண்ணினரான வழித்தொண்டடிமை பூண்ட அடிமைக் குடியில் ஒருவரையும் அக்கினியால் தகிக்காமல் அருளின்பமாக அநுக்கிரகம் செய்த நாதன் (எ - க).

162. தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்

(எ - ன) அடியேற்கு உள்ளங்கையிற் பழுத்த திருவருட் பிரசாதப் பிரத்தியட்சப் பொருளான நாதன் (எ - க).

---

158-160. எற்றூர் மூதூர், மும்மலங்கள் என்பர் திருமூலர்
அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார்அறி வாரே

(திருமந்திரம் 343)

158-160. 'அன்று அருட்பெருந் தீயின்', என்பதற்குப் பொருள் கூறப்படவில்லை. அப்பகுதியை 160–161 வரிகளோடு கூட்டி யுரைக்க.

'அன்று......ஒடுக்கினன' என்ற பகுதிக்கு ஆசிரியர் மறைமலை யடிகள் கூறும் உரையும் விளக்கமும் பின் வருமாறு :—

'எம்மை ஆட்கொண்ட அந்நாளில் ஒருவரும் தவறிப்போகாமே அடியேங்களது அடிமைச் சிறு வீடுகளைத் தனது அருளாகிய பெருந் தீயினிடத்தே ஒடுங்கச் செய்தனன்; அடிகளும் அடிகளோடு உடனிருந்த தொண்டர்களும் இறைவன் திருவருளால் தம்முடம்புகளும் தூயவாகத் தாம் அவன் திருவடிப் பேரின்பத்தின்கண் ஒடுக்கப்பட்டமையின்' இவ்வாறு 'அருளிச் செய்தார்'.

**163. சொல்லுவ தறியேன் வாழி!**

(எ - ன) திருவருட் பிரசாத அநுக்கிரகத்தைத் தற்போதத்தால் சொல்லுவதற்குத் தகாதாதலால் என் உள்ளத்திற் பிரியாதிருக்கவென அருளியதைக் காண்க.

**164.** முறையோ?
தரியேன் நாயேன்

(எ - ன) நாதனே! இனி இப்புவனம் வசியேன்; நாயடியேன் (எ - க).

**165.** தான்எனைச் செய்தது
தெரியேன்

(எ - ன) எனது ஆன்மநாதன் என்னைத் தன் அடிமையாகச் செய்த திருவருள் எனக்குத் தெரிந்ததில்லை (எ - க).

**165.** ஆ ஆ! செத்தேன்!

(எ - ன) தற்போதமற்றுச் சாந்த பீசமானது அதிசய வதிசயமே! (எ - க).

**165-166.** அடியேற்
கருளிய தறியேன்

(எ - ன) அடியேன் நிமித்தம் எழுந்தருளி உபதேசித்த கருணைப்பெருக்கு என் போதத்தால் அறிவதில்லை (எ - க.)

**166.** பருகியும் ஆரேன்;

(எ - ன) உபதேச வின்பம் என்னுற் புசித்து முடிவதன்று (எ - க).

**167. விழுங்கியும் ஒல்ல கில்லேன்**

(எ - ன) அவ்வின்பம் விழுங்கும் விரைவைக் காணேன் (எ - க).

---

164. முறையோ? - நீதியோ?

167. ஒல்லகில்லேன் - பொறுக்கமாட்டேன்.

**168-169.** செழுந்தண் பாற்கடல் திரைபுரை வித்து
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகந் ததும்ப

(எ - ன) அவ்வின்பம் என் உள்ளத்திலே பாற்சமுத்திரத் திரை குளிர்ச்சியாகச் சந்திரனைக் கண்டதுபோலச் சத்திப்பது; கடல் நடுவானது நிரம்பித் தளும்பாது நின்றது போல நிறைந்து நின்றது (எ - க).

**170-171.** வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன்

(எ - ன) எனது உளத்தின் நிறைந்த இன்பம் பொங்கி என்னை மவுனனந்த அமிர்த சொரூபம் செய்து மயிர்க்கால் தோறும் நிறைந்ததென்னும்படி அருள்வதான நாதன் (எ - க).

**171-173.** கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பை கொண்டின்தேன் பாய்த்து[1]

(எ - ன) அவ்வின்பத் திருவடி மறந்த கொடிய பாதகனை குற்றம் பெருகும் தேகந்தோறும் நாயடியேன் உள்ளத்தில் திருவருட் பூரணப் பிரவாக இன்பத்தை ஒதுக்கிஎற்கு ஏற்ப எனது உயிர் திருப்தியடையச் செய்த நாதன் (எ - க).

**173-175.** நிரம்பிய
அற்புதமான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன்

(எ - ன) அவ்வின்பமான அற்புத அமிர்த ஞானத் தாரைகள் என் அன்பு துளைபடும்படி ஊடுருவச் செய்த நாதன் (எ - க).

---

168-169. திரை - அலை. புரைவித்து - ஒக்கச்செய்து. உவா - முழு நிலா. நள்ளு நீர் - செறிந்த நீர்.

171. குரம்பை - உடம்பு; குடில்.

(பி - ம்) 1 பாய்த்தி

**175-177.** உருகுவது

உள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தனன்

(எ - ன) முற்பத விநியோகப் பேரின்பமானது உள்ளத்தில் எழுந்தருளி என்னைத் தன்னுருவாக்கிக் காயத்துள் மெய்ஞ்ஞானக் கள் ஊறுவதாகத் திருவருளின்ப அநுக்கிரகஞ் செய்த நாதன் (எ - க).

**177-179.** ஒள்ளிய

கன்னற் கனிதேர் களிறுஎனக் கடைமுறை
என்னையு மிருப்ப தாக்கினன்

(எ - ன) இவ்வரை யனுக்கிரகஞ் செய்த பரமவின்பக் குருபதத்தை அடியேன் பெற்றும் பெறுத பரிசு சுத்தமான கன்னலின் தேறலைப் புசித்த யானையானது உயிர்க் கரும்புக்குக் கனியுண்டெனத் தேடுவதுடன்பட்டுத் தேறுவது போலவே என்னையும் முடிவில் இவ்வகைச் செய்த நாதன் (எ - க).

**179-182.** என்னிற்

கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

(எ - ன) யானையைப் போலத் தேட வைத்த நிமித்தம் வினவில் பசு வர்க்கமான விட்டுணு பிரமதேவன் இருவரும் தேடிக் காணுத பெருமையுடைய நாதன் பெருங்கருணையினுல் திருவருளின்பம் எனதுயிரிற் கலக்கத் திருவடி ஞானத் திருவருளின்பவடிமை செய்த பெருங்கருணை வழக்கெனக் காண்க.

திருவண்டப்பகுதி முற்றிற்று.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

---

**175-177.** எனக்கு அள் ஊறு ஆக்கை என்றும் பிரித்துப் பொருள் கொள்வர்.

**177-179.** கன்னல் கனி என்பதற்கு இனிதாகிய கனி என்பாரும், கரும்பையும் களவின் கனியையும் என்பாரும், உளர்.

**179-182.** பரா அமுது - மிக்க அமுது.

## 4. போற்றித் திருவகவல்

(தில்லையில் அருளியது)

சகத்தின் உற்பத்தி

(நிலைமண்டில ஆசிரியப்பா)

திருச்சிற்றம்பலம்

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியு மாதர வதனிற்
கடுமுரண் ஏன மாகி முன்கலந்
தேழ்தல முருவ இடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில்
யானை முதலா வெறும்பீ றாய
ஊனமில் யோனியி னுள்வினை பிழைத்தும்
மானிடப் பிறப்பினுள் மாதா வுதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியி னிருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவி னொருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னு ளம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களி னூறலர் பிழைத்தும்
ஏழு திங்களிற் றாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தவக் காலை
ஈண்டியு மிருத்தியு மெனைப்பல பிழைத்தும்

காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்
தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானா ரயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்த மதங்களில்
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாத மென்னும்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்
துலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்

தொழுதுள முருகி யழுதுடல் கம்பித்
தாடியு மலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்ற தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாரும்
கதியது பரமா அதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலு நினையா
தருபரத் தொருவ னவனியில் வந்து
குருபர னாகி அருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி அரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூட லிலங்கு குருமணி போற்றி
தென்றில்லை மன்றினு ளாடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி

மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னா ருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா வென்றனக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி யிறைவ போற்றி
தேசப் பளிங்கின் றிரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையே னடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர் விறந்த ஒருவ போற்றி
விரிகட லுலகின் விளைவே போற்றி
அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி

மன்னிய திருவருண் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி இருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி
முழுவது மிறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலு நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையு மெந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரு ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி
குற்றா லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் மெந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி

அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தே னடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தே னாயே னடியேன் போற்றி
இலங்கு சுடரெம் மீசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி

மருவிய கருணை மலையே போற்றி
துரியமு மிறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த வொருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி.

திருச்சிற்றம்பலம்

---

நான்காவது

# போற்றித் திருவகவல்

போற்றித் திருவகவல் திருவருள் விநியோகம் அருளிச் செய்யப் புகுகின்றதாவன :—

இவைக்கு அகத்திய நாயனுர் அருளிய அநுபூதிச் சூத்திரமாவது :—

மாற்றரு குருவைப் போற்றுதிரு வகவல்
மிகப்பெரி தான [1]சகத்துற் பத்தி

பொழிப்பநுபூதியாவன :—

முதலகவலிற் பரமசிவனின் சொரூபநிலையும், இரண்டாமகவலில் தடத்தநிலையும், மூன்றுமகவலில் அண்டபிண்ட பெருங் கருணையுமாக அநுக்கிரகம் பண்ணி, அவை அனுபவப்பட்டிருக்கிற [2]பெருங்கருணைக்குக் கைம்மாறு வணக்க மெய் வணக்கம் பெறுதற்கருமைக்குத் தடையாகிய இடையூறும், அவ்விடையூறு திருவருள் முன்னின்று தீரத் தெளிய வந்தாண்ட முறைமைக்குக் கைம்மாறு அடிமையென்ப தொழிய வேறில்லையெனப் பேரின்பங் கூறுகின்றது.

---

1. சகம் - சகத்து உயிர்கள்.

2. ‘பெருங்கருணைக்குக் கைம்மாறு வணக்கமென்பதும், மெய்வணக்கம் பெறுதற்குத் தடையாகிய இடையூறும் அவ்விடையூறு திருவருள் முன்னின்று தீரத்தெளிய வந்தாண்ட முறைமைக்குக் கைம்மாறு அடிமையென்ப தொழிய வேறின்று என்பதுமான பேரின்பம் கூறுகின்றது’ என்று அமைக்கலாம்.

பதப்பொருளநுபூதியாவன :—

திருவடிச் சிறப்பு

1-2. நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து

(எ - ன) பிரம தேவர் முதலாகிய சகல தேவர்களும் வணங்க மாவலியிடத்திலே வாமன ரூபமாய் மண்ணிரக்க, எல்லா வுலகங்களையும் ஈரடிகளால் அளக்கவும் (எ - க).

3-4. நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றி செய்

(எ - ன) சகல முனீசுவரர்களும் பஞ்ச விந்திரிய ஒருமைப் பாட்டுடன் வணங்கித் தோத்திரம் செய்யப்பட்ட (எ - க).

4. கதிர்முடித் திருநெடுமால்

(எ - ன) இரத்தினமுடி விளங்கிய மகாவிட்டுணுவானவர் (எ - க).

4-6. அன்று,
அடிமுடி யறியும் ஆதர வதனில்
கடுமுரண் ஏன மாகி,

(எ - ன) முன் அநாதியே திருவடியினது முடியை அறிய வேண்டுமென்ற ஆசையினாலே வராகவுருவம் எடுத்து (எ - க).

---

1-2. மூவுலகளந்தவர் திருநெடுமால் (அடி 4).

3-4. ஐம்புலன் மலர - ஐம்புலன்களும் மகிழ.

4-6. கடு முரண் ஏனம் - மிக்க வலியினையுடைய வராகம்.

6-7. முன் கலந்து
ஏழ்தலம் உருவ இடந்துபின் எய்த்து

(எ - ன) தேடிப் "பாதலத்துச் சொன் முடிவும் காணுது அலேந்தோமே" என்று 'நான்' என்பதழிந்து (எ - க).

8-9. 'ஊழி முதல்வ! சயசய!' வென்று
வழுத்தியுங் காணு மலரடி யிணேகள்

(எ - ன) "துணேக்காரணமான காலங்களுக்கு முதற் பொருளான சச்சிதானந்த சொரூபம் தேவரீரல்லாது வேறில்லே" என அநேக தோத்திரஞ் செய்தும் காணு நின்ற பொற்கமல பாதங்கள் (எ - க).

10. வழுத்துதற் கெளிதாய்

(எ - ன) முற்பத நாதன்ருளே எளிதாகப் பெறுதற் பொருட்டு, அநுக்கிரகம் செய்யும் (எ - க).

அத்திருவடி கண்டு தோத்திரம் செய்ய வரும் இடையூறுகளாவன :—

பிறவியின் அருமையும் ஊறுகளும்

10-12. வார்கடல் உலகினில்
யானே முதலா எறும்பீ ருய
ஊனமில் யோனியி னுள்விணே பிழைத்தும்

(எ - ன) எழுவகைச் சமுத்திரம் சூழ்ந்த உலகத்தின் கண் இந்தச் சுத்த பூமியிலே, யானே முதல் எறும்பு ஈருன

---

6-7. முன் கலந்து - முற்பட்டு. எய்த்து - இளேத்து.

10-12. யோனியினுள் விணே பிழைத்தும் என்பதற்கு யோனி பேதங்களில் நல்விணேயால் தப்பி என்றும், கருப்பைகளினின்றும் உள்ளத்தின் கண்ணதாகிய நல்விணேயால் தப்பியும் என்றும் பிறர் பொருள் சொல்வர். அதாவது பல பிறப்புக்களுள்ளும் பிறவாது மானிடப் பிறப்பெடுத்தும் என்றபடி.

தூல சூக்கும பேதங்களின் நால்வகைத் தோற்றம், எழு வகைப் பிறப்பு எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களெல்லாம் ஊழாற் புசிக்கிறதாலும் (எ - க).

**13-14. மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து**
**ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்**

(எ - ன) முற்பதப்படி புசிக்குங் காலம் ஊழுடையான் திருவருளால் உத்தம மானிடப் பிறப்பினுள் மாதா உதரத் திலே பிதாவினுடைய சுக்கிலத்தின் வழியாய்ச் சுரோணி தத்திற் சமமாய்க் கலந்து ஒருமித்திருக்கிற அவ்விடத்தி லுள்ள அணுவிலும் சிறிதாகிய கிருமிக்கூட்டங்களுடைய இகலுக்குப் பிழைத்தும் (எ - க).

**15. ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்**

(எ - ன) மேலொரு மாதத்தில் இரண்டும் ஒன்றும் தன்மை ஏற்றக்குறைச்சலினாலும் இருவர் உபாதி வசங்

---

**13-14.** ஈனம் - அளவிற் குறைவு; ஈனமில், மிகப்பல என்றபடி. கிருமிச்செரு - புழுக்களால் செய்யப்படும் வாதனை. செரு - போர். தான்றி - எல்லை. இருமை - மிகுதி.

**15.** 'முதல் மாதத்தில் தான்றிக்காயின் வடிவினை ஒப்பதாகி' 'இருவகைப்பட்ட தன்மையினின்று தப்பியும்' என்று பொருள் கூறி 'கருக்கொண்டதாயின் கருப்பை முதல் திங்களில் தான்றிக்காய் போன்ற வடிவுடையதாய் இருத்தலின்' என்றும், 'முதற்றிங்களில் இருமையிற் பிழைத்தலாவது, தந்தையின் வெண்பாலிற் றோன்றிய புழுக்களில் ஒன்று தாயின் செம்பாலிற் றோன்றிய கருவிற் பதிந்து ஒன்றாகாமல் வேறாய் நின்றால் மகவு உண்டாமா றில்லை; மற்று அங்ஙனமின்றி அப்புழுக்கள் பலவற்றுள் ஒன்று ஏனையவற்றைப் பின்றள்ளித் தாய்க்கருவையணுகி அதனுள் தன் தலையை நுழைத்தவளவாலே, தாய்க்கரு அப்புழுவினைத் தன்கைப்படுத்திக் கொண்டு, ஏனைப்புழுக்கள் தன்னை அணுகாவாறு தன் மஞ்சட்கருவினின்றும் மெல்லியதொரு தோலினைத் தோற்றுவித்துத் தன்னுட் புழு நுழைதற்கு வாயிலான துளையை உடனே அடைத்துவிடா நிற்கும்; அவ்வாறு செய்த பின்னர்த்தான் நுழைந்த புழுத் தாய்க்கருவிற் கரைந்து ஒன்றாய்ப்போக மகவு உண்டாவதாகும். ஒரோவழித் தாய்க்கரு நோயாலேனும் மயக்கம் ஏற்படுதலாலேனும் அங்ஙனம் வழியடைத்தலைச் செய்யாது வாளா இருந்திடுமாயின் மகவு உண்டாமாறில்லை' என்று விளக்கம் கூறுகின்றார் ஆசிரியர் மறைமலையடிகள் (பக். 262-63).

களாலும் ஒன்றும் திரட்சி வேறுபடாமல் பிழைத்தும் (எ - க).

16. இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்

(எ - ன) இரண்டு மாதத்தில் சுக்கில சுரோணிதம் ஒன்றுபட்டுத் திரண்டு வலுக்கிற தன்மையில் ஒன்று இளகி யுருகிப் போகாமல் பிழைத்தும் (எ - க).

17. மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்

(எ - ன) மூன்றும் மாதத்திலே திரட்சி மதப்படுகிற போது சரீரமுழுவதும் மதப்படும்படி—சரீரத்துக்கும் மதத் துக்கும் தொடர்ச்சி இருக்கையால்—அக்காலத்தில் சரீர உபாதிகள் இல்லாமல் பிழைத்தும் (எ - க).

18. ஈர்இரு திங்களிற் பேர்இருள் பிழைத்தும்

(எ - ன) நான்காம் மாதத்திலே அந்தகாரத்துக்குள் அகப்பட்ட குருட்டுக் கண்போல ஒன்றும் தெரியாமல் மன வாக்குக் காயங்களால் வேண்டாததை வேண்டியும், விரும் பாமலிருப்பதை விரும்பியும் வருகிற மயக்கத்துக்குச் சரீரத் தில் வாதாதி மந்தாதி வாராமல் அவிழ்தங்களாற் காத்து வரும்படிக்குத் தப்பாமற் பிழைத்தும் (எ - க).

---

16. விளைவு - நிகழ்ச்சி. ஒருமை - ஒன்றுபடுந்தன்மை.

17. 'வாயில் அடைபட்டுக் கருத்தோன்றி வளருங் கருப்பையி னுள்ளே, முன்னெல்லாம் புறத்தே கழிந்து கொண்டிருந்த தாயின் மதநீர் இப்போது கழிவாயில் காணமையின் கருவளர்தல் வேண்டிப் பெருகிவந்து நிறையாநிற்கும். அதனால் கருப்பை பெருக்க வயிறு புடைக்கும்; இவ் வாறு வந்து பெருகும் மதநீர் தாங்கமாட்டாமல் அக்கருப்பை ஒரோவொரு கால் கிழிந்து கருச்சிதைதலும் மூன்றுந்திங்களில் நிகழ்தலுண்டாகலின் அதற்குந் தப்பி வந்தமை அருளிச் செய்தார்' (மறைமலையடிகள். புக். 264.)

19. அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்

(எ - ன) ஐந்தாம் மாதத்திலே வயிற்றிலிருக்கிற புழுக்கள் பதார்த்தப் புசிப்புப் பேதங்களால் புசிப்பித்து, புசித்தால் இறந்துபோம் போலப் புசிக்கும் பதார்த்தங்களெல்லாம் நாபித் தண்டாற் புசிக்கும் சாரங்களெல்லாம் அமிருதப் பிரபாகமாய்ப்போய் வளர்க்குங் காலத்துப் புசிப்பு மாறுபாடுகளுக்குத் தப்பியும் (எ - க).

20. ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்

(எ - ன) ஆறும் மாதத்திலே சரீர அவயவங்களெல்லாம் ஏற்றக் குறைச்சலில்லாமல், புசிக்கும் சாரங்களெல்லாம் அமிர்தப் பிரபாகமாகப் போயூறிப் புடலம்பூப்போல அவயவமுண்டாமிடத்துச் சரீர உபாதி இடையூறுகளால் வரும் [1]பழிக்குத் தப்பியும் (எ - க).

21. ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்

(எ - ன) ஏழாம் மாதத்திலே நல்ல ஞானவானுய்த் திரிகாலம் உணர்ந்து நின்ற கர்ப்பத்தில் இந்தக் கட்டமல வனுசயத்தில் வந்திருக்கிரேமே! பூமியிற் பிறக்க வேண்டியிருக்கிறதே !" என்று தோன்றும்போது சிவனது கருணை தோன்ருமல் அனு(ச)யமாய் அழுந்திக் கெட்டுப் போகாமல் பிழைத்தும் (எ - க).

---

19. முஞ்சுதல் - முதிர்தல்.

'ஐந்தாந் திங்களிற் கருப்பையினுள் மதநீரும் இருளும் மேன் மேன் மிகுதலின் அவற்றிடைப்பட்ட மகவு பிழைத்தல் அரிதென்பர்' (மறைமலையடிகள், 264).

20. ஊறு - இடையூறு. 1. அலர் - பழிச்சொல்; எட்டில் பிழை என்று எழுதப்பெற்றிருக்கிறது.

21. அனுசயம் பச்சாத்தாபம்.

22. எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்,

(எ - ன) எட்டாம் மாதத்திலே அந்தக் கட்டப்படுகிற வருத்தமும் அனுசயமும் தோன்ருமலிருந்தாலல்லது யோக்கியப் படாதிருந்ததனல் வரும் பிழைக்குத் தப்பியும் (எ - க).

23. ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்,

(எ - ன) ஒன்பதாம் மாதத்திலே வெளியே வரவேண்டியிருக்கிறதே! மாதா வருத்தப்படுவாளே! நாம் வருத்தப் படுவோமே!" என்று அவ்வருத்தம் தோன்றி ஏங்கி இறந்து போகாமல் பிழைத்தும் (எ - க).

24-25. தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்,

(எ - ன) பத்தாம் மாதத்திலே திரிவித கரணங்களும் யோக்கியப்பட்டுச் சகல உபாதிகளும் தோன்ருமல், ஞானம் மேலிட்டு, அறிவு விளங்கியிருக்கும்போது, ஓரிமைப் பொழுதில் கன்மத்துக்குத் தக்கதாக மகாப்பிரசண்ட வாயுவில் மலையினது முடிவில் நின்றவன் சுழன்று விழுந்து கலங்கும் போது முன்னுள்ளதெல்லாம் மறந்து, சிவாக்கினையினலே, தாயும் பிள்ளையும் பல்லூழிக் காலம் இருபத்தெட்டுக் கோடி நரகத்திற்படுகிற உபாதிகளெல்லாம் வயிரவனுடைய சூல நுனியில் ஓர் கணத்திற் படுகிறதுபோல மயங்கிப் பிறந்து பிழைத்தும் (எ - க).

---

22. கட்டம் - கஷ்டம். அநுசயம் - இரக்கம்.

**26-27.** ஆண்டுகள் தோறும் அடைந்த அக்காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்,

(எ - ன) வருடங்கள் தோறும் சரீரம் பக்குவப்படுகிற இளமைக் காலங்களில் தன்னை இரட்சித்துக் கொள்ள மாட்டாத பக்குவ காலத்தில் இருக்கும் போதும், படுக்கும் போதும், அநேகம் ஜந்துக்கள், மிருகங்கள், சத்துருக்கள், நஞ்சுகள் ஏற்றக்குறைச்சலாகிய புசிப்புக்கள் இவைகளுக் கெல்லாம் தப்பியும் (எ - க).

**28-29.** காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்,

(எ - ன) மேல் யௌவன காலத்தில் உதயகாலம் தேக சுத்திக்கும் மத்தியான காலம் பசியான புசிப்புக்கும், இராத் திரிகாலம் நித்திரைக்கும், யாத்திரை முதலான சஞ்சாரங் களிலும் இவை முதலான உபாதிகட்குத் தப்பியும் (எ - க).

---

**26-27.** ஈண்டியும் இருத்தியும் என்பதற்கு இவ்வுரைகாரர் இருக் கும்போதும் படுக்கும்போதும் என்று பொருள் கூறுவர். 'மனிதப்பருவம் எய்திய அப்பொழுது பொருளைத் தொகுத்தும் தொகுத்த பொருளைப் புதைத்து வைத்தும்' என்பர் மறைமலையடிகள். இச்சொற்களுக்கு நேர் பொருள் 'நெருக்கியும் இருத்தியும்' என்பதே யாகலாம். பிள்ளை வளர்ச்சிக் காலத்தில் அவர்கள்மீது செலுத்தப்படும் கட்டுப்பாடுகளையும் நெருக்கடி களையும் இவை குறிப்பனவாகக் கொள்ளலாம்.

30-35. கருங்குழல் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்(து)
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்(து)
ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்,

(எ - ன) நீருண்ட மேகம், கருமணல் முதலான கருமைக்கும் நள்ளிருட்கும் மேம்பட்ட அளகபாரமும், தொண்டைக்கனி, துப்பு (இவற்றிற்கு) மேம்பட்ட சிவந்த வாயும், முத்துப்போன்ற தந்த பந்தியும், கார்கால மயில்போல் ஒருங்கிய சாயலும், இரண்டு சுவர்ணகிரி நெருங்கியது போலும் நெருங்கிச் சிவனடியார்போல் இறுமாந்து உள்மதர்த்து, கச்சு அற விம்மித் திருவருள் போலப் பிரகாசித்து, அன்றில்போல இரு பணையலாகி அதன் பாரந்தாங்காது இடை இல்லாள்போல வருந்த, எழுந்து, உள்ளாள்போல (?) வியாபகமாகி, ஈர்க்கு நுழையாதபடி அடிமைபோல நெருக்கமுற்று, வற்றாது முற்றாது தாமரைப் பொகுட்டைப்போல இளமையான தனத்தையுடைய பெண்களாகிய நாரிகள் சன்னையான அதி தீவிர நோக்கக் கொள்ளைக்குத் தப்பியும் (எ - க).

இவை இழிந்தவை சிறப்பித்தவெனக் கொள்க.

---

30-35. ஒருங்கிய - ஒன்று கூடிய. சாயல் - மென்மை. மதர்த்து - களிப்புக்கொண்டு. கச்சு - பட்டிகை. அற - அற்றுப்போம்படி. கதிர்த்து - ஒளிபெற்று. பணைத்து - பருத்து. இடை எய்த்து - இடுப்பு இளைப்புற்று. புடை - பக்கம். கூர்த்த நயனம் - கூர்மையாகிய கண்களின். கொள்ளை - மிகுதி. சன்னை - குறிப்பு ; சமிக்கை.

**36 37. பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்**
**மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்,**

(எ-ன) பயித்தியத் தன்மையாயிருக்கிற உலக முழு வதுக்குள்ளும் அநேக விவகாரத் தப்புக்களாகிய இழிவு வழக்குக்கள் மதப்பட்ட ஆனைகளுக்குச் சமானமானதால் அவையால் மிகுந்த அவாவுக்குப் பிழைத்தும் (எ-க).

**38. கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்,**

(எ-ன) மேலான கல்வி யென்று சொல்லப்பட்ட அநேகங் கடல் போல விரும்புகிற ஆசைக்குத் தப்பியும் (எ-க).

**39. செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்,**

(எ-ன) செல்வமாகிய மிகுந்த துன்பத்துக்குத் தப்பியும் (எ-க).

**40. நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்,**

(எ-ன) தரித்திரமாகிய கொடுமையான விடத்துக்குத் தப்பியும் (எ-க).

**41. புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்,**

(எ-ன) சிற்றின்பமாகிய பல கூடாநட்புக்களுக்குத் தப்பியும் (எ-க).

**42. தெய்வ மென்பதோர் சித்த முண்டாகி,**

(எ-ன) முற்பத விநியோகங்களாகிய உபாதிகள் அடங்கலுக்கும் பிழைத்து, கேட்டல் முதலிய நிட்டைகூடி

---

36-37. அவாவினைக் களிறாக உருவகப்படுத்தினர். மதக்களிறு, மத்தக்களிறு என்றாயிற்று.

38. கல்வி - உலகியற்கல்வி.

41. புல்வரம்பாய பலதுறை என்பதற்குப் புல்எல்லையாகவுடைய பல பிறவித்துறைகள் என்றும் பொருள் கூறுவர். 'புல்லாகிப் பூடாய்' (சிவபு : 26) என்பதனைக் காண்க.

இருவினைப்பயன், மறுபிறப்பு பரதெய்வமுமுண்டென்று மனதிற்கொண்டு அப்பொருளை விசாரிக்குமிடத்து என்க.

43. முனிவி லாததோர் பொருளது கருதலும்,

(எ - ன) ஐயந் திரிவின்றிச் சித்தாந்தங் கிடைப்பதற் பொருட்டு வெறுப்பின்றிப் பரம குருவைக் கருதும் காலத்து (எ - க).

44-45. ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின

(எ - ன) அநேக மாயா சத்திகள் தாங்கள் தாங்களே தெய்வமென்று இந்திரசால வித்தை காட்டியதிற் சொல்லா மற் பிழைத்தும் (எ - க).

46-47. ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்

(எ - ன) மேலும் தனக்கு விசுவாசமாயுள்ளார் 'இம்மை ஏது ? மறுமை ஏது ? ஒன்றுமில்லை' என்று பேசிப் பேசி நாக்குத் தழும்பேறினார்கள் (எ - க).

48-49. சுற்ற மென்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்

(எ - ன) தொன்று தொட்டு வரும் பந்துக்கள் தங்கள் வசப்பட வேண்டுமென்று வெகு பதறுதலுடன் மிகவும் சுற்றிக்கொண்டார்கள் (எ - க).

---

43. முனிவு - வெறுப்பு.

46-47. ஆத்தமானார் - ஆப்தமானவர் ; உண்மை கூறுகிறவர் ; நண்பர், நட்பு, பகைமை, நொதுமல் ஆகிய மூவழிகளில் நிற்பவர்களுக் குள் பகைவர் தீமையே கூறுவராகையால் அவரை நீக்கி நன்மை செயற் பாலவரான நண்பர், நொதுமலர் ஆகியவர்கூட நாத்திகம் பேசும் தன்மை யினை அடிகள் குறிக்கின்றார்.

48-49. பசு - பாசத்தாற் கட்டப்படும் உயிர்.

50-51. விரத மேபர மாகவே தியர்களும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்

(எ-ன) பின்னும் பெரியவர்கள் விரதமே பொருளென்று வெகுவித சாத்திரங்கள் சொல்லி வெகுமலைவு வரப்பண்ணினார்கள் (எ-க).

52-53. சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்

(எ-ன) இஃதன்றியும், சமயத்தார் தங்கள் தங்கள் மதங்களே பெரிதென்று கருத்தமையும்படி அரற்றிப் பிடுங்குகிறார்கள் (எ-க).

54-55. மிண்டிய மாயா வாத மென்னும்
சண்ட மாருதம் சுழித்தடித் தார்த்த

(எ-ன) பெறுவானும் பேறும், திருத்தொண்டின் இயல்பும், அநுபூதியும் அற்ற முறட்டுப் பிடியாகிய மாயா வாதிகளானவர்கள் பிரசண்டச் சூறுவளிக் காற்றேபோல் என் மனம் தூளாகப் பண்ணிப் போடுகிறார்கள் (எ-க).

56 57. உலகா யதனெனு மொண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி,

(எ-ன) தேகப்பற்றாகிற நல்ல பாம்பு விட மயக்கிப் போட்டது (எ-க).

---

50-51. பரம் - மேன்மை. சரதம் - உண்மை.

54-55. மிண்டிய - நெருங்கிய. சண்டமாருதம் - கடுங்காற்று. மாயாவாதம் - பௌத்தரின் கொள்கை: உலகம் யாவையும் மாயையே என்று கூறும் கொள்கை.

56-57. உலகாயதன் - சார்வாகன். காட்சியே அளவையாவதென்றும், நிலம், நீர், தீ, வெளியெனப் பூதம் நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றிப் பிரிவால் மாய்வதாய் உடம்பின் கண்ணே அறிவு மதுவின்கண் களிப்புப்போல வெளிப்பட்டழியுமென்றும், மறுமையில்லையென்றும், சரீரமே ஆன்மாவென்றும், கடவுள் இல்லையென்றும், இன்பமும் பொருளுமே புருஷார்த்தங்களென்றும் சொல்லும் உலகாயத மதம் (பிரபோத சந்திரோதயம்).

கலாபேதத்த - சாஸ்திர வேறுபாடுகளையுடைய.

58. அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்,

(எ - ன) இன்னமுமவைமுதல் அநேகமாகிய மாயாப் பிரபஞ்சங்கள் வலியப் பிடித்திழுத்து மயக்கவும் (எ - க).

59. தப்பா மேதாம் பிடித்தது சலியா,

(எ - ன) முற்பத விநியோக மாயாப் பிரபஞ்சம் அடங் கலுக்கும் தப்பித் தான் கொண்ட குருவுபதேசத்துக்குத் தவறு வராமல் அதிற் சலிப்பில்லாமல் (எ - க).

60-61. தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுளம் உருகி,

(எ - ன) எக்காலமும் அக்கினியில் அகப்பட்ட மெழுகு போலப் பேரன்பால் தொழுது உள்ளமுருகி (எ - க).

61-62. அழுதுடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்,

(எ - ன) இரு கண்ணீர் ஆறு பெருக, உடல் தழு தழுப்ப, ஆனந்தக் கூத்தாடியும், அலறுநின்றும் உளறு நின்றும், விழுந்து கும்பிட்டும், பாடியும், பணிந்தும் எனக் காண்க.

63.64. கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகி,

(எ - ன) கொடிறு பிடித்தது போலும் பேதையள் பிடித்து போலும் அதுவேயாகி (எ - க).

64-65. நல் இடையறு அன்பில்
பசுமரத் தாணி அறைந்தாற் போல,

(எ - ன) திருவருள்மலம் பொருந்திய நீக்கமில்லாத தலை யன்பானது பசுமரத்தில் அறைந்த ஆணியைப் போல நாதன்றாளில் இன்புற்று (எ - க).

---

63-64. கொடிறு - குறடு ; பேதை - அறிவிலி.

**66-67.** கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்து,

(எ-ன) முற்பதத் தாளில் அவ்வன்பானது ஒட்டை மதகு நீரால் கசிவது போலும் அக்கசிவு பெருகிக் கடலென மறுகி உள்ளடங்கி, அகங்குழைந்து, சத்திய போதராய்த் தேக முழுதும் பரவசராய், மயிர்க்கூச்சிட்டுக் காணுவதெல்லாம் திருவருட்பெருக்காய், உண்மை ஞானத் தவப் பிரயாசை யில்லாதபடி நடக்கும்போது (எ-க).

**68-70.** சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
[1]பூணுத லாகக் கோணுத லின்றி,

(எ-ன) உலகத்தாரெல்லாம் இவன் பேயென்று நகைக்க, அவ்வுலகப் பழிப்பினுல் வெட்கமடையாது, மனங் கோணுது, ஆபரணம்போல் ஒப்புக்கொண்டு (எ-க).

**71-72.** சதுர்இழிந்(து) அறிமால் கொண்டுசாரும்
கதியது பரமா

(எ-ன) யான் எனதென்னும் தற்போதச் சதுரிழந்து ஞானப் பித்துக்கொண்டு உயிரின்மேல் அடையப்பெற்ற பரம கதியே தானுய் (எ-க).

**73-74.** அதிசய மாகக்
கற்ரு மனமெனக் கதறியும் பதறியும்
மற்ரோர் தெய்வங் கனவிலும் நினையா(து),

(எ-ன) இளங்கன்றைத் தேடும் பசுப்போல் ஓயாத அன்பாய்க் கதறியும் பதறியும் வேரோர் தெய்வமுண்டென்று சொப்பனத்திலும் நினையாமல் (எ-க).

---

66-67. அநுகுலமாய் - அதற்கிசைந்து. விதிர்த்து - நடுங்கி.

68-71. (பி-ம்) 1. பூணதுவாக.

71-72. சதுர் - திறமை. மால் - மயக்கம்.

72-73. பரிமா அதிசயமாக என்று இங்குப் பிரித்துள்ளார். பிறர் பரம அதிசயமாக என்று பிரிப்பர்.

73-74. கன்று ஆ - கற்ரு.

75-76. அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையை,

(எ - ன) நிட்களமாகிய சிவமே குருபரனுகச் சகளீகரித் தெழுந்தருளி அனுக்கிரகம் செய்த பெருமையை (எ - க).

77. சிறுமையென் றிகழாதே,

(எ - ன) முற்பத விநியோகத்தை இப்புவனமிம்மானுட உருவெனச் சிறுமையாக இகழாதே (எ - க).

77-79. திருவடி யிணையைப்
பிறிவினை அறியா நிழலது போல
முன்பின் ஆகி,

(எ - ன) முன்னும் பின்னும் தன்னை விட்டுப் பிரியாத தன்னிழல் போல நாதன்றுளை விட்டுப் பிரியாது உளம் பெத்தமுத்தம் இரண்டிடத்தும் (எ - க).

79-81. முனியாது அத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள

(எ - ன) வேற்றுமையின்றி எல்லாப் பொருளையும் அதுவாகவே சிந்தித்து ஊனும் உயிரும் கரைய நெக்கு நெக்காகவே ஏங்கி அன்பாகிய பிரவாகம் வரம்பின்றிப் புரண்டோட (எ - க).

82. நன்புலன் ஒன்றி நாதஎன்(று) அரற்றி,

(எ - ன) பஞ்சேந்திரிய ஒருமைப்பாட்டுடன் நாதனே எனத் தோத்திரம் செய்ய (எ - க).

---

75-76. பரத்து ஒருவன் - மேன்மைத் தன்மையையுடைய ஒப் பற்றவன்.

77-79. பிறிவினை - பிறிதுபடுதலாகிய தொழில். முன்பின் ஆகி முனியாது என்று கூட்டியும் உரைக்க.

79-81. முனியாது - வெறுப்பின்றி. அத்திசை, 'எல்லாப் பொருளையும் அதுவாகவே சிந்தித்து' என்று பொருள் கூறுகின்றார். அத்திசை, குருபரன் எழுந்தருளிய திசை என்று கூறுவாரும் உளர்.

83-85. உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்ப

(எ - ன) சொற்றடுமாறி புளகாங்கிதமுற்றுக் கைகூப்பி இருதய மலர்தானே மலர்களாக ஆனந்தபாட்பம் துளித்துப் பெருக (எ - க).

86-87. சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி!

(எ - ன) முற்பதப் பேறுகிய ஒழியாத இவ்வன்பே மேன்மேலும் என் உயிரின்கண் வளர்ப்பவரான, தாயறியாத கருவிலிருந்து அமுதூட்டும் தனிப் பொருளான சுவாமிக்குக் கைம்மாறு அடிமையென்றே நமக்கரித்து, என்னை இரட்சிப்பாயெனத் திரும்பத் திரும்பத் துதிப்பதுவே பொருள் (எ - க).

88-89. மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள்! போற்றி!

(எ - ன) முற்பத மெய்கண்ட சத்திய சிவஞானபோதம் எற்கேற்ப உபதேசித்த பரமகுருவாகிய வேதாந்த வத்துவாகிய சுவாமி! என் உளத்திருந்து கைவல்ய அநுபூதி செய்த என சுவாமிக்குக் கைம்மாறு உனது அடிமையை இரட்சிக்க என்பதே (எ - க).

---

83-85. மொட்டித்து - குவித்து.

88-89. வினைகெட: 'என்ற வினையுடலோ டேகுமிசை யேறும்வினை, தோன்றி லருளே சுடும்' என்ற திருவருட்பயன் 10 : 8 இல் குறிக்கப்பட்ட இருவினைகளை யென்பர் மறைமலையடிகள் (பக். 293). வினை - நல்வினை தீவினைகளாகிய இருவினைகளும் ஆம். கைதருதல் - உதவி செய்தல்.

90. ஆடக மதுரை அரசே! போற்றி!

(எ - ன) இரணியகோச சமட்டி வித்தியாபுர மதுரைத் திருப்பதிக்கு அரசனுன பொருளே! உனது அடிமையை இரட்சிக்க (எ - க).

91. கூடல் இலங்கு குருமணி! போற்றி!

(எ - ன) முற்பதத் திருவாலவாயான திருப்பதிக்கு அரசாயிருந்தும் அடியேற்கு உபதேசம் செய்ய எழுந்தருளிய சுயம்பிரகாச குருமணியாக வந்த நாதா! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

92. தென்றில்லை மன்றினுள் ஆடி! போற்றி!

(எ - ன) 'மூலக்குறி உளத்தற்குத் தென்னர் மாடுறு மறைகள் காணு மன்னுமாபரமான' திருச்சபையிற் பஞ்ச கிருத்திய நடனம் செய்யும் நாதா! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

93. இன்றெனக் காரமு தானாய்! போற்றி!

(எ - ன) என்னுள்ளிருந்து (ஊற்றும்) இன்பவமிர்தப் பிழம்பே! என்னை இரட்சிக்க (எ - க).

94. மூவா நான்மறை முதல்வா! போற்றி!

(எ - ன) ஓர் காலத்தும் முடிவில்லாத வேதத்துக்கு மூலப்பொருளான நாதனே! உனது அடிமையை இரட்சிக்க (எ - க).

---

90. ஆடகம் - பொன்.

91. கூடல் - நான்கு மாடங்கள் கூடியிருந்தமையால் மதுரைக்கு ஒரு பெயர்.

குருமணி - நிறம் சிறந்த மணி.

93. ஆர் அமுது - அரிய அமுது.

94. மூவா - மூப்படைதலில்லாத; என்றும் இளமையுடைய.

95. சேவார் [1]செல்கொடிச் சிவனே! போற்றி!

(எ-ன) நிக்கிரகானுக்கிரக நிமித்தம் புண்ணிய சொரூப இடபக் கொடியையுடைய நாதனே! உனது அடிமையை இரட்சிக்க (எ-க).

96. மின்ஆர் உருவ விகிர்தா! போற்றி!

(எ-ன) பராசத்தியே உருவாகப் பெறும் நீதியான நாதனே! உனது அடிமையை இரட்சிக்க (எ-க).

97. கல்நார் உரித்த கனியே! போற்றி!

(எ-ன) 'திணியான மனோசிலையில் அணியாரவிந்தம் அரும்ப' (கந்தரனுபூதி) உரித்தருளிய திருவருட்கனியான நாதனே! உனது அடிமையை இரட்சிக்க (எ-க).

98. காவாய் கனகக் குன்றே! போற்றி!

(எ-ன) அடியேனைப் பிறவா வண்ணம் பாதுகாப்பாய்! சொர்ண மலையான நாதனே! உனது அடிமையை இரட்சிக்க (எ-க).

99. ஆவா! என்றனக் கருளாய்! போற்றி!

(எ-ன) சாந்தபீச மயமாக எனக்கனுக்கிரகம் செய்வாய்! நாதனே! உனதடிமையை இரட்சிக்க (எ-க).

---

95. சே - இடபம். 'சீர்கெழு கொடியு மவ்வே றென்ப' (புறநா. 1.) ஆர் - நிறைதல்.

(பா-ம்) 1. வெல் கொடி.

96. மின் ஆர் உருவம் - செந்நிறம். விகிர்தா - ஒரு படித்தல்லாது வேறுபட்ட செயலினன்; கடவுள் 'விகிர்தனை விரும்பியேத்து மிடையிலேன்' (தேவா. 997-7). 'வெறுப்பிருள் நீங்கில் விகிர்தனும் நிற்கும்' (திருமந். 1794) இங்கு, மின் ஆர் உருவத்திற்குக் காட்டப்பெற்ற உரை நயம் போற்றற்பாலது.

97. 'கல் நாருரித்தல்' ஒரு பழமொழி. அரிய செயலைக் குறிக்கும். இங்குக் கூறப்பட்ட உரை வியக்கற்பாலது.

100. படைப்பாய்! காப்பாய்! துடைப்பாய்! போற்றி!

(எ - ன) என் பிறவிக்கிலேசம் தீர்வதற் பொருட்டுச் சிவசக்தியாற் சிருட்டி, திதி, சங்காரம் செய்யும் நாதனே! உனது அடிமையை இரட்சிக்க! (எ - க).

101. இடரைக் களையு மெந்தாய்! போற்றி!

(எ - ன) எனது பாசபந்த இடையூறை வேரோடே அறுக்கும் எந்தாயான நெடுங்கலச (?) வேதச் செல்வ நாதனே! உனது அடிமையை இரட்சிக்க (எ - க).

102. ஈசா! போற்றி!

(எ - ன) சகலான்ம கோடிகளையும் இரட்சிக்கும் நாதனே! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

102. இறைவா! போற்றி!

(எ - ன) சகல தேவர்களுக்கும் ஆன்ம நாதனே! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

103. தேசப் பளிங்கின் திரளே! போற்றி!

(எ - ன) எல்லா வத்துக்களும் இருந்தபடி யிருப்பத் தன் வசமாகச் செய்யும் படிகமலையான நாதனே! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

104. அரசே! போற்றி!

(எ - ன) சகல தேவர்கட்குஞ் சத்தியைச் செலுத்தும் இராசனான நாதனே! உனதடிமையை இரட்சிக்க! (எ - க).

104. அமுதே! போற்றி!

(எ - ன) முயற்சி செய்யாத ஞான அமிர்தமான நாதனே! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

---

102. ஈசன் - சகல ஐசுவரிய சம்பன்னன்;
இறைவன் - எங்கும் தங்குபவன்; தலைவன்.

103. தேசம், தேஜஸ் என்பதன் திரிபு - ஒளி.

105. விரைசேர் சரண விகிர்தா! போற்றி!

(எ-ன) ஆன்மாக்களுக்கு உயிராக மணமுடைய திருவடிகளையுடைய நீதிப் பொருளான நாதா! உனதடிமையை இரட்சிக்க! (எ-க).

106. வேதி! போற்றி!

(எ-ன) வேதம் அருளும் வேதாந்த நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

106. விமலா! போற்றி!

(எ-ன) நிட்களமான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

107. ஆதி! போற்றி!

(எ-ன) சகத்துற்பத்திக்குப் பரோபகார மூல நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க)

107. அறிவே! போற்றி!

(எ-ன) காட்டறிவான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

108. கதியே! போற்றி!

(எ-ன) பரம மோட்சமான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

108. கனியே! போற்றி!

(எ-ன) எனதுளத்திற் பழுத்த திருவருட்கனியான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

---

106. வேதி, வேதியனும் ஆம்.

விமலன் - மாசற்றவன்.

109. நதிசேர் செஞ்சடை நம்பா! போற்றி!

(எ-ன) உலகத்தை இரட்சிக்கும் பொருட்டுக் கங்கையைத் திருச்சடையில் தரித்த நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

110. உடையாய்! போற்றி!

(எ-ன) அநாதியே என்னை உடைப்பொருளாய் உடையாய்! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

110. உணர்வே! போற்றி!

(எ-ன) எனதறிவில் மெய்ஞ்ஞானமான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

111. கடையேன் அடிமை கண்டாய்! போற்றி!

(எ-ன) யாவர்க்கும் கடையனாய என்னை அடிமையாகப் படைத்த கருணை நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

112. ஐயா! போற்றி!

(எ-ன) எனக்கு ஐயனான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

112. அணுவே! போற்றி!

(எ-ன) மூவகை அணுக்களுக்கும் முறையாய் அருள்வதான நாதா! உன அடிமையை இரட்சிக்க (எ-க).

113. சைவா! போற்றி!

(எ-ன) எனைச் சிவசம்பந்தம் செய்யும் நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

113. தலைவா! போற்றி!

(எ-ன) எப்பொருட்கும் தலைவனான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

---

110. உடையாய் - எம்மை அடிமையாக உடையவனே.

114. குறியே! போற்றி!

(எ - ன) மூலக்குறியான சிவலிங்கப் பொருளான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

114. குணமே! போற்றி!

(எ - ன) இறைவரல்லாத குணங்களின்றேயென சாட்குணியப் பொருளான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

115. நெறியே! போற்றி!

(எ - ன) அபரஞான சிவாகமப் பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

115. நினைவே! போற்றி!

(எ - ன) என் நினைவில் எழும் சுடரேயான நாதா! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ - க).

116. வானோர்க் கரிய மருந்தே! போற்றி!

(எ - ன) எத்தேவர்க்கும் அறியவொண்ணாத மந்திரமும் தந்திரமும் மருந்துமான நாதா! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ - க).

117. ஏனோர்க் கெளிய இறைவா! போற்றி!

(எ - ன) தற்போதமற்ற உண்மையடியார்கட்கு அவர் கண்ணுக்குப் புலப்பட எழுந்தருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

114. குறி - இலிங்கம்.

115. நெறி - நன்னெறி, சிவஞானம்.

118-119. மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே! போற்றி!

(எ-ன) பாச சம்பந்தமான மூவகையான இருபத்தொரு வகை பாரம்பரையர்களையும் கொடிய நரகம் சேராதே அநுக்கிரகம் செய்யும் நாதனே! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ-க).

120. தோழா! போற்றி!

(எ-ன) 'என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்குடனை' (சுந்தர. 53. 10) நாதனே! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ-க).

120. துணைவா! போற்றி!

(எ-ன) அடியேற்குத் தோன்றாத் துணையாகவிருந்து உபகரிக்கும் நாதனே! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ-க).

121. வாழ்வே! போற்றி!

(எ-ன) திருவருட் செல்வமேயான நாதா! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ-க).

121. என் வைப்பே! போற்றி!

(எ-ன) எனது உயிர்க்குத் திருவருள் வைப்பான நாதா! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ-க).

122. முத்தா! போற்றி!

(எ-ன) பரமுத்தப் பொருளான நாதா! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

---

118-119. சிவஞானம் பெறும் பிள்ளை யொன்று உதிக்குமாயின் அக்குலத்துத் தோன்றிய இருபத்தொரு வழிப் பிதிர்க்களும் மோக்ஷமடைதல் உண்மையென்பது கூறப்பட்டது.

121. வைப்பு; எய்ப்பினில் வைப்பு.

122. முதல்வா! போற்றி!

(எ-ன) அநாதி முதற்பொருளான நாதா! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

123. அத்தா! போற்றி!

(எ-ன) எனது உயிருக்கு அப்பனுன நாதா! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

123. அரனே! போற்றி!

(எ-ன) என் வினையை அறுக்கும் நாதா! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

124. உரையுணர் விறந்த ஒருவ! போற்றி!

(எ-ன) தற்போத வாசகர்க்கும் எட்டாத ஏக பரப்பிரமமான நாதா! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

125. விரிகட லுலகின் விளைவே! போற்றி!

(எ-ன) சமுத்திரஞ் சூழ்ந்த உலகங்களிலே விளைவதான விளைவுக்கு முதலே! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

126. அருமையி லெளிய அழகே! போற்றி!

(எ-ன) உரிமை யருமைப் பத்தி செய்யும் அடியார்கட்கெளிதில் வந்து அநுக்ரகம் செய்யும் திருவருளழகு பொருந்திய நாதா! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

127. கருமுகி லாகிய கண்ணே! போற்றி!

(எ-ன) கைம்மாறின்றி உதவும் ஞானமேகமேயான, என் கண்ணுன நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

---

123 அரன் - சர்வ சங்கார காலத்தில் அனைத்தையும் ஒழித்துத் தனித்து நிற்கும் சிவன் நாமங்களில் ஒன்று; ஒழிப்பவன்.

124. உரை உணர்வு; உரையையும் உணர்வையும் என்று விரிக்க, வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதவன் என்பது பொருள்.

128. மன்னிய திருவருள் மலையே! போற்றி!

(எ-ன) 'மாறா மலமகல மன்னுபோதத் திருவருண் மலை'யான (சிவப். 1) நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

129-130. என்னையு மொருவ னாக்கி யிருங்கழல்
சென்னியில் வைத்த சேவக! போற்றி!

(எ-ன) தேவரீர், திருவடிக்கடிமையாகும் இயல்பொன்றும் தெரியாது மயக்கறிவுடைய என்னை அறிவுளனாகச் செய்ததுமன்றிப் பெருமை பொருந்திய பரமகுருவாய் என் போலவே குருந்த விருட்சத்தினெழுந்தருளி என் சிந்தையினும் சிரத்தினும் திருவடி வைத்து அடிமையாக்கியதன்றியும் என் பொருட்டுப் பரியாளனாக வந்து அநுக்கிரகம் செய்த நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

131. தொழுதகை துன்பம் துடைப்பாய்! போற்றி!

(எ-ன) தேவரீர் அடி வணங்கும் அடியார் வினைமுழுதும் தீர்க்கும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

132 வழுவிலா ஆனந்த வாரி! போற்றி!

(எ-ன) குற்றமற்ற சிவானந்த சமுத்திர வெள்ளமான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

133. அழிவதும் ஆவதும் கடந்தாய்! போற்றி!

(எ-ன) உற்பத்தி நாசம் இரண்டையும் கடந்த அதீதப் பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ-க).

---

131. தொழுதகை - வணங்கினவுடனே எனலும் ஆம்.

132. (பா-ம்) 1. அழிவிலா. வாரி - கடல்.

134. முழுவதும் இறந்த முதல்வா! போற்றி!

(எ - ன) தனக்கென வாழும் கருவியொன்றிலாது இறந்த காலந்தானே முதலாக உற்பவிக்கும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

135. மானேர் நோக்கி மணாளா! போற்றி!

(எ - ன) உலக உயிரை இரட்சிக்கும் பொருட்டு மான் போலும் வெருட்சியுடைத்தான அருள் நோக்கியான தேவிக்கு உண்மையான மணவாளக் கோலங்கொள்ளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

136. வானகத் தமரர் தாயே! போற்றி!

(எ - ன) சகல தேவர்கட்கும் இடுக்கண் வருங்கால் தாய் போலப் பாதுகாக்கும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

137. பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய்! போற்றி!

(எ - ன) சகத்து உற்பத்தி நாசம் வருங்காலம் பிருதிவி முதல் ஐந்து பூதங்களிலும் வியாபகமாக நின்றருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

138. நீரிடை நான்காய் நிகழ்ந்தாய்! போற்றி!

(எ - ன) அப்புவினிடமாக நான்கு குணமாய் அருளிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

---

134. முழுவதும் இறந்தாய் - எல்லாவற்றையும் கடந்த பொருளே! என்பது எளிய பொருள்.

137. பார் - பிருதிவி; அதனிடத்தைந்தாவன சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பனவாம்.

138. நீரிடை நான் கென்பது கந்தமொழிந்த நான்கு.

139. தீயிடை மூன்ருய்த் திகழ்ந்தாய்! போற்றி!

(எ - ன) தேயுவினிடமாக மூன்று குணமான ரூபப் பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

140. வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய்! போற்றி!

(எ - ன) வாயுவினிடமாக இரண்டு குணமாக இன்பளிக்கும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

141. வெளியிடை ஒன்ருய் விளைந்தாய்! போற்றி!

(எ - ன) ஆகாசத்தினிடமாக எல்லாப் பூதங்களையும் ஒடுக்கி ஞானகாசமாக ஒன்ருகியும், திரும்ப உற்பத்திக்கு அதிலேயிருந்தருள்வதான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

---

139. தீயிடை மூன்று, கந்தமும் இரசமும் ஒழிந்த மூன்று.

140. வளி - வாயு. வளியிடை இரண்டாய், சத்தம், பரிசம் என்னும் இரண்டு.

141. வெளி - ஆகாசம். வெளியிடை ஒன்று, சத்ததன்மாத்திரை.

136-141. ஒலியுடைத்தா மாகாய மூறுடைத்தாம் வளியதனைச்
சுலவலாற்ருேன் றும்வளி யிருகுணமா மிருகுணத்த
வுலவையரு வடைந்தவழல் பொதிந்ததனு லொழிவரிதாய்
நிலவுமொரு மூன்றுகுணம் வெய்தாய நெருப்பினுக்கே.

முக்குணமா மழலிரச குணப்புனலை மூடியதான்
மிக்கபுனற் கொருநான்கு குணமேவு நான்குகுணந்
தொக்கபுனன் மணமுடைத்தாய்ப் புவியதனைச் சூழ்தலாற்
புக்ககுண மோரைந்து முரியவாம் புவியினுக்கே.

(கூர்மபுராணம்)

இவைக்கு,

வேதத்தில்,

[1]மின்னுருவ விண்ணகத்தி லொன்றாய் மிக்கு
வீசுங்கா றன்னகத்தி லிரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த்தாழ் புனலி னுன்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே.

(திருநாவுக். 6 : 5).

என்றருளியதைக் காண்க.

142. அளிபவ ருள்ளத் தமுதே! போற்றி!

(எ - ன) உருகுதலைச் சென்ற உள்ளமுடையார் உள்ளத்து ஆனந்தப் பொருளான நாதனே! உன் அடிமையை இட்ரசிக்க (எ - க).

143. கனவிலுந் தேவர்க்கு அரியாய்! போற்றி!

(எ - ன) அபக்குவ தேவர்களுக்குச் சொப்பனத்திலும் அநுக்கிரகஞ் செய்யாத நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

144. நனவிலும் நாயேற்(கு) அருளினை! போற்றி!

(எ - ன) நாயடியனை எனக்குச் சாக்கிரத்தில் திருவடி காண அநுக்கிரகஞ் செய்யும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

(பி - ம்) 1 மின்னுருவை

142. அளிபவர் - அன்பால் கனிபவர். அளிந்த கனியில் தேன் ஊறுவதுபோல் என்பது நயம்.

145. இடைமருது உறையும் எந்தாய்! போற்றி!

(எ - ன) மத்யார்ச்சுனத்திலே தாய்போல எழுந்தருளி அநுக்கிரகஞ் செய்த நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

146. சடையிடைக் கங்கை தரித்தாய்! போற்றி!

(எ - ன) திருச்சடை மத்தியிலே கங்கையைச் சூடிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

147. ஆரூர் அமர்ந்த அரசே! போற்றி!

(எ - ன) செல்வத் திருவாரூரின்கண் தியாகப் பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

148. சீரார் திருவை யாறு! போற்றி!

(எ - ன) திருவருட் செல்வச் சீர் சிறப்பின்ப உல்லாச பஞ்சநத நாதா! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

149. அண்ணா மலையெம் மண்ணா! போற்றி!

(எ - ன) திருவண்ணாமலையில் எழுந்தருளிய அருணமலை நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

150. கண்ணார் அமுதக் கடலே! போற்றி!

(எ - ன) கண்ணில் ஆனந்தக் கடலான நாதனே! உன் அடிமையை இராட்சிக்க (எ - க).

---

145. இடைமருது - திருவிடைமருதூர். சோழநாடு. காவிரிக்கரையில் உள்ளது. இறைவர் - மருதப்பர். இறைவி - நன்முலைநாயகி.

உறையும - தங்கும்.

146. (பி - ம்) திருச்சடை.

147. அரசு - தியாகராசன். ஆரூர் - திருவாரூர். சோழநாடு. இறைவர் - வன்மீகநாதர். இறைவி - அல்லியங்கோதை.

148. திருவையாறு : சோழநாடு. காவிரிக்கரையிலுள்ளது. இறைவர் : செம்பொற்சோதி. இறைவி : அறம் வளர்த்தநாயகி.

149. அண்ணாமலை - திருவண்ணாமலை : நடுநாடு : இறைவர் அருணசலேச்சுவரர் : இறைவி - உண்ணாமுலையம்மை.

150. கண் ஆர - பார்க்கும் கண்களில் நிறைந்த.

**151. ஏகம் பத்துறை யெந்தாய்! போற்றி!**

(எ - ன) திருக்காஞ்சி நகரின்கண் எழுந்தருளிய தாயாகிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**152. பாகம் பெண்ணுரு வானாய்! போற்றி!**

(எ - ன) அர்த்தநாரீசுவரமான நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**153. பராய்த்துறை மேவிய பரனே! போற்றி!**

(எ - ன) திருப்பராய்த்துறையில் எழுந்தருளிய பரமநாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**154. சிராப்பள்ளி மேவிய சிவனே! போற்றி!**

(எ - ன) திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளிய சிவனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**155. மற்றோர் பற்றிங் கறியேன்! போற்றி!**

(எ - ன) 'மற்றுப் பற்றெனக்கின்றி, நின் திருப்பாதமே கதியான' (சுந்தரர் தேவா) நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

151. ஏகம்பம் - கச்சி ஏகம்பம்; காஞ்சீபுரம், தொண்டைநாடு: இறைவர்: ஏகாம்பரநாதர். இறைவி: காமாட்சியம்மை. ஏகம்பம், ஏகாம்பரம் என்பதன் சிதைவு. ஒருமாமரம் என்பது பொருள்.

எந்தாய் - என் தந்தையே.

153. பராய்த்துறை - திரும்பராய்த்துறை; சோழநாடு: அகண்ட காவேரித்துறைக்கு அருகிலுள்ளது. இறைவன் - பராய்த்துறைநாதர் இறைவி - பொன்மயிலம்மை.

154. சிராப்பள்ளி - திருச்சிராப்பள்ளி. சோழநாடு: காவிரிக்கரையிலுள்ளது: இறைவர்: தாயுமானவர்: இறைவி: மட்டுவார்குழலி.

155. பற்று - பற்றுக்கோடு.

**156. குற்ற லத்தெம் கூத்தா! போற்றி!**

(எ - ன) திருக்குற்றாலத்திலே சித்திரசபையிலே நடன மருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**157. கோகழி மேவிய கோவே! போற்றி!**

(எ - ன) திருக்கோகழியில் அடியார்கள் பசுத்தனம் நீங்க எழுந்தருளிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**158. ஈங்கோய் மலையெம் எந்தாய்! போற்றி!**

(எ - ன) திருவீங்கோய் மலையில் எழுந்தருளிய நாதனான தாயே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க)

**159. பாங்கார் பழனத் தழகா! போற்றி!**

(எ - ன) திருவருட் பாங்காகிய திருப்பழனத் தலத்தில் எழுந்தருளிய அழகான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**160. கடம்பூர் மேவிய விடங்கா! போற்றி!**

(எ - ன) திருக்கடம்பூராகிய தலத்தில் எழுந்தருளிய விடங்கப் பொருளான கற்பனைப்படாத விடங்கப்பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

156. குற்றாலம் - திருக்குற்றாலம். பாண்டி நாடு. இறைவர்: குறும்பலாநாதர். இறைவி - குழல்வாய் மொழியம்மை. இது நடராஜ க்ஷேத்திரங்களுள் ஒன்று. இங்குள்ள திருமன்றம் சித்திரசபை எனப்படும்.

157. கோகழி - திருப்பெருந்துறை. பாண்டிநாடு. இறைவர் - ஆத்மநாதர்; இறைவி - யோகநாயகி.

158. ஈங்கோய் மலை - சோழநாடு. இறைவர் - மரகதாசலர்: இறைவி - மரகதாம்பிகை.

159. பாங்கு - அழகு. பழனம் - திருப்பழனம்: சோழநாடு: இறைவர் - ஆபத்சகாயர்: இறைவி - பெரியநாயகி.

160. விடங்கர் - கவயம்பு. உளியினாற் செய்யப்படாத மூர்த்தி. கடம்பூர் - திருக்கடம்பூர்: சோழநாடு: இறைவர் - அமுதகடேசர். இறைவி - சோதிமின்னம்மை.

161. அடைந்தவர்க் கருளு மப்பா! போற்றி!

(எ - ன) உன்னை உள்ளபடி நம்பினவர்கட்கு அப்பனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

162-163. இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய வரசே! போற்றி!

(எ - ன) கல்லாலின்கீழ் எழுந்தருளிச் சநகர், சநந்தனர், சநாதரர், சநற்குமாரர், அகத்தியர், புலத்தியர் இவர்கள் முதலான இருடிகட்குச் சிவஞானமருளிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

164. தென்னா டுடைய சிவனே! போற்றி!

(எ - ன) திருவருட்பூமியாகிய தட்சிண திக்கே சொந்த நாடாக அடிமை கொள்ளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க; (எ - க).

165. எந்நாட் டவர்க்கு மிறைவா! போற்றி!

(எ - ன) மூன்று மாயா புவன நாட்டுக்கும் ஆக்கினை செலுத்தும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

166. ஏனக் குருளைக் கருளினை போற்றி!

(எ - ன) பன்றிக் குட்டிகளுக்குத் திருப்போனகமருளி, அக்குட்டிகளை இராசாக்களாகச் செய்த நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

162-163. இத்தி - கல்லால் (Ficus Infectoria). இருமூவர்க்கு- என்றதற்கு, இயக்கியர் அறுவர்க்கும் என்றும், அத்தி என்பதற்கு யானைக்கு என்றும் பொருளமைத்து இத்திருவிளையாடல்கள் பட்டமங்கையிலும் மதுரையிலும் நடந்தனவாகக் கூறுவர் மறைமலையடிகள் (பக். 313 : 103).

166. ஏனக்குருளை - பன்றிக்குட்டி. 'நாயே பன்றி புலிமுயல் நான்கும், ஆயுங்காலைக் குருளை என்ப' என்பது தொல்காப்பியம். பன்றிக் குட்டிகளுக்கருளினமை திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் 58, 59ஐக் காண்க. பன்றிக்குட்டிகள் பன்னிரண்டென்றும் அவை மாறிப்பிறந்து பாண்டியன் அமைச்சராயும் சாமந்தராயும் ஆயின என்றும் அத்திருவிளையாடல்கள் கூறும்.

167. மானக் கயிலை மலையாய் போற்றி!

(எ-ன) எல்லா மலைகளுக்கும் அதிகமான கயிலாச மலையில் எழுந்தருளிச் சகல தேவர்கட்கும் அநுக்ரகம் செய்யும் அருண்மலையான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

168. அருளிட வேண்டும்! அம்மான்! போற்றி!

(எ-ன) அடியேன் எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் என்னை அடிமையாகச் செய்ய வேண்டும்! நாதனே! உன் அடிமையை இரட்திக்க (எ-க).

169. இருள்கெட அருளும் இறைவா! போற்றி!

(எ-ன) எனது பாச விமோசனம் செய்வதான அருண்ஞான மூர்த்தியான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

170. தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி!

(எ-ன) இவ்வரைப் பிறந்திறந்து எய்த்தேன்! தனிமையையுடைய சுதந்தரயீனனை, நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

171. களங்கொளக் கருத அருளாய் போற்றி!

(எ-ன) என் நெஞ்சப் பாழறையைப் பள்ளியறையாக இடங்கொள அடியேன் சிந்திக்கும்படி அநுக்கிரகம் செய்வாய்! நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

---

167. மானம் - பெருமை.

169. இருள் - அஞ்ஞான இருள்.

170. தமியேன் - தனியேன்.

171. களம் - நிலைத்த இடம். கள்ளம் - என்றும் பொருள் கண்டு, கள்ளம் செய்ய நினைக்க இடம் கொடாய் என்றும் பொருள் கூறுவர்.

**172.** *அஞ்சேல் என்றிங் கருளாய் போற்றி !*

(எ - ன) தேவரீர் திருவடியே பரமெனச் சரணடைய அநுக்கிரகம் இப்போதே செய்ய வேண்டும்; நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**173.** *நஞ்சே யமுதா நம்பா ! போற்றி !*

(எ - ன) தேவர்கள் பிழைக்கும் பொருட்டு விடத்தைப் போனமாகக் கொண்டருளும் நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**174.** *அத்தா ! போற்றி !*

(எ - ன) என்னுயிர் அப்பனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

*ஐயா ! போற்றி !*

(எ - ன) எனதுயிர்க் குருவே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**175.** *நித்தா ! போற்றி !*

(எ - ன) அநாதி நித்தியப் பொருளான நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

*நிமலா ! போற்றி !*

(எ - ன) நின்மலப் பொருளான நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**176.** *பத்தா ! போற்றி !*

(எ - ன) வேறுபாடில்லாதவர் உள்ளப் பத்தியாக விளங்கும் நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

173. (பி - ம்) நயந்தாய்.

நயந்தாய் என்ற பாடத்திற்கு, விரும்பினாய், என்பது பொருள்.

176. பத்தா என்பதற்குத் தலைவன் என்றும் பொருள் கூறுவர். பவன் - தோற்றுவிப்பவன் 'நமோபவாய' (ஸ்ரீருத்ரம்) பவன் என்பது சிவபிரானின் நாமங்களுள் ஒன்று.

பவனே ! போற்றி !

(எ - ன) உயிர்ப்பாக நின்று இரட்சிப்பவனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

177. பெரியாய் ! போற்றி !

(எ - ன) தேவர்கட்கும் பெரியோனான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

பிரானே ! போற்றி !

(எ - ன) என்னுயிரை இரட்சிக்கும் பொருளான நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

178. அரியாய் ! போற்றி !

(எ - ன) யாவர்க்கும் காண்பரிய நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

அமலா ! போற்றி !

(எ - ன) நின்மல அமலப் பேருன நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

179. மறையோர் கோல நெறியே ! போற்றி !

(எ - ன) அடியேனை இரட்சிக்கப் பரமகுரு வடிவாக உருக்கொண்டெழுந்தருளும் நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க ! (எ - க).

180. முறையோ ? தரியேன் ; முதல்வா ! போற்றி !

(எ - ன) அநாதி முதலே ! தேவரீர் திருவடிக் கோல நாதனே ! இனிப் பிறப்பாற்றகில்லேன் ! நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க ! (எ - க).

---

180. 'நெறியாய் நின்ற நீ என்னைக் காவாதிருத்தல் முறையோ ?' என்றபடி.

181. உறவே! போற்றி!

(எ - ன) எனது உயிர்க்கு அநாதித் தொடர்ச்சியுடைய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

உயிரே! போற்றி!

(எ - ன) சிவமயச் சிவாநந்த நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

182. சிறவே! போற்றி!

(எ - ன) திருவருட் சிறப்பான நாதனே! உன் அடிமையை இரட்சிப்பாயாக (எ - க).

சிவமே! போற்றி!

(எ - ன) எவற்றினுக்கும் மேம்பட்ட பரமசிவப்பொருள் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

183. மஞ்சா! போற்றி!

(எ - ன) அடிகள் தமக்கு மகவான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

மணாளா! போற்றி!

(எ - ன) பரைக்கு மணவாளக் கோலனான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

184. பஞ்சேரடியாள் பங்கா! போற்றி!

(எ - ன) பார்ப்பதிக்கு வாமபாகமருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க)

---

182. சிறவு - சிறப்பு. சிவம் - மங்கலத்தைச் செய்பவன்.

183. மஞ்சன் - அழகன். முகிலையுணர்த்துபவன் என்றும் பொருள் கொள்வர். இங்கு மைந்தன் என்பதன் திரிபாகக் கொண்டனர் உரையாசிரியர்.

184. பஞ்சு - செம்பஞ்சுக்குழம்பு. ஏர் - அழகிய,

185. அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி!

(எ - ன) திருவருட் சகாயமின்றி நாயடியேன் கெட்டேன்: உனது அடிமையை, நாதனே! இரட்சிப்பாயாக (எ - க).

186. இலங்கு சுடாஎம் ஈசா! போற்றி!

(எ - ன) எப்போதும் என் உள்ளத்திற் பிரகாசிக்கும் ஈசனே! உன் அடிமையை இரட்சிப்பாயாக! (எ - க).

187. கவைத்தலை மேவிய கண்ணே! போற்றி!

(எ - ன) வேதாகம முடிவாகிய ஞானக் கண்ணான நாதனே! உன் அடிமையை இரட்சிப்பாயாக (எ - க).

188. குவைப்பதி மலிந்த கோவே! போற்றி!

(எ - ன) பார் முழுதும் திருப்பதியாகி அவைக்கு நாதனாக விளங்கும் கோவே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

189. மலைநா டுடைய மன்னே! போற்றி!

(எ - ன) சேர தேச அழியாப் பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

190. கலையார் அரிகே சரியாய்! போற்றி!

(எ - ன) பிரகலாதன் அன்புக்காக இரணியனைக் கொல்லத் தூணின்கண் வந்த நரசிம்மாவதார மகாவிட்டுணு இரத்த உன்மத்த வெறியால் மேலொரு கடவுள் இல்லையெனச் சிவனை மறந்த மயக்கத்தை நிக்கிரகம் செய்யும் பொருட்டுக் கேசரியாக எழுந்தருளிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

185. அலந்தேன் - வருந்தினேன்.

186-187. கவைத்தலை, குவைத்தலை ஊர்களின் பெயர்கள் என்பர். குவைப்பதியைக் கூவம் என்பர் சிலர்.

190. கலையார் அரிகேசரி என்பதற்குக் கலைகள் நிறைந்த பகைவர் சிங்கமே என்றும், ஆடையாக உடுத்த சிங்கத்தோலையுடையவனே என்றும், அரிகேசரி ஓர் ஊரின் பெயரென்றும் பலவாறு பொருள் கொள்வர் பிறர்.

**191. திருக்கழுக் குன்றிற் செல்வா ! போற்றி !**

(எ - ன) பரமசிவன் அநுக்ரகத்தைச் சமுசயத்தாற் கருதி வேறுபட்ட பட்சியான அடிகட்கு ஞான அநுக்ரகஞ் செய்யும் நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க ! (எ - க).

**192. பொருப்பமர் பூவணத் தரனே ! போற்றி !**

(எ - ன) திருப்பூவணமென்ற கயிலாசகிரியிலே பொன்னனையம்மை திருவருளழகு காண எழுந்தருளும் நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**193. அருவமும் உருவமும் ஆனாய் ! போற்றி !**

(எ - ன) நிட்களமே சகளமாய் எழுந்தருளிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க ! (எ - க).

**194. மருவிய கருணை மலையே ! போற்றி !**

(எ - ன) அநாதியே தொடர்ந்து அடிமைகொண்ட பெருங்கருணையான அருணமலை நாதா ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**195. துரியமும் இறந்த சுடரே ! போற்றி !**

(எ - ன) சுத்தாவத்தை கடந்த சிவஞானப் பிரகாச நாதனே ! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

191. திருக்கழுக்குன்று : தொண்டைநாடு : இறைவர் : வேதகிரீசுவரர் ; இறைவி - பெண்ணினல்லள்.

192. பூவணம் - திருப்பூவணம். பாண்டிநாட்டிலுள்ளது. இறைவர் - பூவணநாதர் : இறைவி - மின்னம்மை.

193. அருவம் - உருவமின்மை.

194. மருவிய - பொருந்திய.

195. துரியம் - நான்காவது பதம்.

196. தெரிவரி தாகிய தெளிவே! போற்றி!

(எ-ன) பசுவர்க்கமுடைய எவர்க்கும் அறிவொண் ணாத சிவஞானத் தெளிவான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

197. தோளா முத்தச் சுடரே! போற்றி!

(எ-ன) துளையிடாத முத்துப் போன்ற ஒள்ளிய நின் மலச் சோதியான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

198. ஆளா னவர்கட் கன்பா! போற்றி!

(எ-ன) பெத்த முத்த மிரண்டிலும் அடிமையான அன்பர்க்கன்பான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

199. ஆரா அமுதே! அருளே! போற்றி!

(எ-ன) தேவரீர் திருவடியின்ப ஞானமின்றிப் புசித் துத் தொலையாதாதலால் திருவருள் ஞானம் அருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

---

196. தெரிவரிதாகிய தெளிவு; 'பாசஞானத்தாலும் பசுஞானத் தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடுமுள்ளத்தே நாடி' என்ற சித்தாந்தக் கருத்தைக் காண்க.

197. தோளா - துளையிடப்படாத முத்து.

198. ஆள் - அடிமை.

200. பேரா யிரமுடைப் பெம்மான்! போற்றி!

(எ-ன) பேராயிரம் பிறவி வானோர் ஏற்றும் பெம்மானன எம்மானே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

201. தாளி அறுகின் தாராய்! போற்றி!

(எ-ன) நால்வகை மலரினும் மேம்படுவதான தாளிப் பூவையும் அறுகையும் திருமாலையாகவுடைய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

202. நீளொளி யாகிய நிருத்தா! போற்றி!

(எ-ன) உற்பத்தி நாசமில்லாத அகண்டாகார சச்சிதானந்த சொரூபமே திருவம்பலத்தின்கண் ஆனந்த நடனம் செய்யும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ-க).

203. சந்தனச் சாந்தின் சுந்தா! போற்றி!

(எ-ன) சந்தனக் களப பஞ்ச வாசத்தின் மேம்பட்ட திருவருளின்ப வாச வழகு போன்ற சோமசுந்தர நாதனே! உனது அடிமையை இரட்சிக்க (எ-க).

---

200. பேராயிரம் - ஸஹஸ்ரநாமம். 'ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற் காயிரம், திருநாமம் பாடித்தெள்ளேணங் கொட்டாமோ' (திருத்தெள் : 1).

பெம்மான் - பெருமான்.

201. தாளி - ஒருவகைக் கொடி. தாளி இலையும் அறுகம் புல்லும் தொடுத்துக்கட்டிய மாலையையுடையவனே. தார் - மார்பிலணிவது.

202. நிருத்தா - கூத்தனே. தேஜோமயனான கூத்தனே என்பது பொருள்.

203. சாந்து - விழுது; 'வெள்ளெட்சாந்து' (புறநா. 246). சந்தனச் சாந்து என்பதற்குச் சந்தனக்கலவை விழுது என்றும், சந்தனமும் சாந்தும் என்றும்கொண்டு, சந்தனமும் திருநீறும் என்றும் பொருள் கொள்ளலாம். சாந்து - திருநீறு. 'ஈசன் சாந்தும்' (திருக்கோ. 74.)

204. சிந்தனைக் கரிய சிவமே! போற்றி!

(எ - ன) தற்போத யோக சமாதி சிந்தனைக் கெட்டாத நாதனே! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

205. மந்திர மாமலை மேயாய்! போற்றி!

(எ - ன) திருமயேந்திரத் தலத்தில் அம்மை பொருட்டு எழுந்தருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

206. எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி!

(எ - ன) அடியேன் இனிப் பிறவா வண்ணம் கருணை செய்த நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

207. புலிமுலை புல்வாய்க் கருளினை! போற்றி!

(எ - ன) தாயாகிப் பன்றிக் குட்டிகட்குத் திருமுலைப் பாலளித்த நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

---

205. 'மந்திரமாமலை மகேந்திர வெற்பன்' (கீர்த்தி. 100).

206. உய்ய - பிழைக்க.

207. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் 53. புலி முலை புல் வாய்க்கருளின திருவிளையாடலில் இவ்வரலாற்றினைக் காண்க. இது கடம்பவனத்தில் நிகழ்ந்ததாகக் கூறப்படுகின்றது.

208. [1]அலைகடல் மீமிசை நடந்தாய்! போற்றி!

(எ - ன) அம்மை பொருட்டுப் பரத வேடரான திருவுருக் கொண்டு சமுத்திரத்தில் எழுந்தருளி வலை வீசிய நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

209. கருங்குரு விக்கன் றருளினை! போற்றி!

(எ - ன) யாவராலும் அடையவொண்ணாத மகிழ்ச்சியை எல்லாப் பறவைக்கும் மேம்படக் கருங்குருவிக்குத் திருவடியருள்வதான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

210. இரும்புலன் புலர இசைந்தனை! போற்றி!

(எ - ன) எனது ஐந்து புலன்களின் அறிவும் கண்களே கொள்ள அருளும் பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

211. படியுறப் பயின்ற பாவக! போற்றி!

(எ - ன) அடியேன் பொருட்டுப் பூமியின்கண் திருவடி தோய எழுந்தருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க)

---

208. (பி - ம்.) 1 கார்க்கடல் இவ்வரலாறு 'கேவேடராகிக் கெளிறது படுத்தும்' கீர்த்தித். 17) இன்னும் என்று முன்னும் சுட்டப்பெற்றது. திருவால திருவிளை. 22ஆம் திருவிளையாடலைக் காண்க.

209. திருவால திருவிளை. 60ஆம் திருவிளையாடலைக் காண்க.

210. இரும் - பெரிய. புலர - காய.

211. படி - பூமி. பயின்ற - நடந்த. பாவக - பரிசுத்தனே. 'பறவையின் குலங்கள் காக்கும் பாவகன்' (கம்பரா. நாக்பா. 270).

212. அடியொடு நடுஈ றானாய்! போற்றி!

(எ - ன) ஆதியந்த நடுவாகிய ஏக பரப்பிரம நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

213-214. நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற் கருளினை! போற்றி!

(எ - ன) பாண்டிய இராசருக்கு நரகம், பூமி, சுவர்க்கத்தில் துன்பம் சாராது பரமுத்தி யருளும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

215. ஒழிவற நிறைந்த ஒருவ! போற்றி!

(எ - ன) சர்வ வியாபகப் பொருளான நாதனே! உன் அடிமையை இரட்சிக்க! (எ - க).

216. செழுமலர்ச் சிவபுரத் தரசே! போற்றி!

(எ - ன) மணமலர்ச் சோலை சூழும் சிவபுர நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

217. கழுநீர் மாலைக் கடவுள்! போற்றி!

(எ - ன) செங்கழுநீர் மாலையணியும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

213-214. பாண்டியர்க்குப் பரகதியருளினமை திருவிளையாடலில் பல இடங்களிலும் காணலாம். அடிகள் தம் காலத்து மன்னனைக் குறித்ததாகவும் கொள்ளலாம்.

216-217. சிவபுரம் திருப்பெருந்துறையைக் குறித்தது என்க. அடிகளை ஆட்கொள்ளும் காலத்துச் சிவபிரான் கழுநீர்மாலை தரித்திருந்தமை 'காதலனாகிக் கழுநீர் மாலை, ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்' என்றும் முன் (கீர்த்தி. 113-114) கூறியமை காண்க.

218. தொழுவார் மையல் துணிப்பாய்! போற்றி!

(எ - ன) திருவருட்பணியான தொண்டு செய்யும் அடியார் கவலை தணிக்கும் நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

219-220. பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்த சொன்மாலை கொண்டருள் போற்றி!

(எ - ன) திருவடியைச் சேரும் குணம் சேராப் பிழையும் பொறுத்து அடியேன் பாமாலையைத் திருச்செவிக் கொண்ட நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

221. புரம்பல எரித்த புராண! போற்றி!

(எ - ன) அநாதியே திரிபுரமான மும்மல தகனஞ் செய்த நாதா! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

222. பரம்பரஞ் சோதிப் பரனே! போற்றி!

(எ - ன) பரம்பரையாய் உயிருக்குள் அறிவானாய்! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

---

218. மையல் - மயக்கம்.

219-220. பிழைப்பு - தவறுபடுதல்: வாய்ப்பு - பிழையமை; பேறு எனினும் ஆம்.

குழைத்த - கூட்டிச்செய்த: மனங்குழைந்து சொன்ன, என்றும் கொள்ளலாம்.

கொண்டருள் - கொண்டருள்க என்று வேண்டியபடி.

222. பல - ஒன்றுக்கு மேற்படின் பலவாகுமாதலால், புரங்கள் மூன்றினை எரித்ததைப் புரம்பலவெரித்த என்றனர். புரம் - சரீரம் என்றும் பொருள் காணலாம்.

**223. போற்றி! போற்றி! புயங்கப் பெருமான்!**

(எ - ன) நிருத்த நாதனே! உனதடிமையை இரட்சிக்க (எ - க).

**224. போற்றி! போற்றி! புராண காரண!**

(எ - ன) அநாதி காரண நாதனே! உன் அடிமையை இரட்சிக்க (எ - க).

**225. போற்றி! போற்றி! சயசய! போற்றி!**

(எ - ன) நாதனே! உனதடிமையை இரட்சிப்பாய்! எனக் காண்க.

போற்றித் திருவகவல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

திருவாசக வியாக்கியானம்

முதற்பகுதி முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

---

223. புயங்கம் - பாம்பு. புயங்கநிருத்தம் என்றதனைச் செய்யும் பெருமான் என்று இங்குப் பொருள் கொண்டனர். சிவபெருமானுக்கே புயங்கன் என்ற பெயருண்டு; 'புயங்கனே மயங்குகின்றேன்' என்று பின்னும் கூறுவர். பாம்பணியுடையோன் என்பது இதன் பொருள்.

224. புராண காரணன் - புராதநமாகிய மூலகாரணனே! 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே' என்பர் பின்பும்.

உரையிற்கண்ட

## அரும்பதம் முதலியவற்றின் அகராதி

எண் — பக்கஎண்



-630 307

